ஸ்ரீ:

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீகாஞ்சி பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரிய ஸ்வாமியின் வியாக்கியான நூல்களிலிருந்தும் பத்திரிகைகளிலிருந்தும் ஸாரமாகத் தொகுக்கப்பட்ட வியாஸங்கள்கொண்ட

# அறுபத்திரண்டு உபந்யாஸமாலை

ஸ்ரீஸ்வாமி அறுபத்திரண்டாவது திருநக்ஷத்ர பூர்த்திக்கு ஸ்மாரக சின்னமாக வெளியிடப்பட்டது



ஸ்ரீராமாநுஜன் வெளியீடு



சென்னை, ரத்தினம் பிரஸ் பிராஞ்சில் அச்சிடப்பட்டது

கிடைக்குமிடம்:

க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்

விலை 1—8—0

1953

# முன்னுரை

(நல்லப்பா. ஜீயப்பங்கார். B. A.)

ஸ்ரீமதித்யாதி ஸ்ரீப்ரதிவாதி பயங்கரம் ஸ்வாமியின் பலவகை வியாக்யான நூல்களையும் பத்திரிகைகளையும் வாசிப்பவர்கள் அவற்றில் காணும் விஷயங்களை அடிக்கடி மனனம் செய்ய விரும்புகிறார்கள். எப்படிப்பட்ட விஷயங்களும் சில நாள்கள் கழிந்தவாறே மறந்துபோகின்றன. மறந்துபோகக்கூடாத விஷயங்களை அடிக்கடி மனனம் பண்ண வேண்டியதாகிறது. ஸ்ரீஸ்வாமியினால் எழுதப்பட்டு வெளிவந்திருக்கும் நூல்களோ பத்திரிகைகளோ அபரிமிதங்களாகையாலே அவற்றையெல்லாம் காப்பாற்றி வைத்துக்கொண்டு மனனம் செய்வதற்கு ஸௌகரியமில்லாமலிருக்கிறதே யென்று பலர் வருந்துவதுமுண்டு.

ஸ்ரீஸ்வாமியால் ஏற்கெனவே வெளியிடப்பட்டிருக்கின்ற (1) விசேஷார்த்த ரத்னாவளி. (2) பந்தாம்ருதம். (3) பன்னிரு திங்களநுபவம். (4) ஸ்வாபதேசார்த்த ஸாகரம். (5) அபூர்வ ராமாயணம் முதலான பல நூல்கள் ரஸிகர்களுக்கு மிகவும் பயன்பட்டு வருகின்றன. ஆங்காங்கு உபந்யாஸம் செய்யும் பண்டிதர்கள் மேலே குறித்த நூல்களினால் தாங்கள் வெகு உபயோகம் அடைவதாகத் தெரிவிப்பதுடன் இப்படிப்பட்ட நூல்கள் அடிக்கடி வெளிவந்தால் மிக நல்லது என்றும் தெரிவிக்கிறார்கள்.

ஈடு முப்பத்தாறாயிரப்படி, ஸ்ரீவசந பூஷண வியாக்யானம், ஆசார்யஹ்ருதய வியாக்யானம் போன்ற மஹாக்ரந்தங்களில், ரத்னாகரத்தில் ரத்னங்கள் போல் பல்லாயிரக் கணக்கான அர்த்த விசேஷங்கள் மலிந்து கிடக்கின்றன. அந்த க்ரந்தங்களை கேட்டு ஸேவித்துக்கொண்டு போகும் போது அவற்றில் ஸாரதம அர்த்தங்களான ஆங்காங்கு விஷயங்கள் ரஸிக்கப்படுகின்றன. ஆனால் அவற்றை அடிக்கடி அநுபவித்து ஆனந்திக்க ஆவல் உண்டாகியும் அப்படியநுபவிக்க மார்க்கமில்லையே யென்றும் பலர் வருந்துவதுண்டு. ஸ்ரீ அண்ணங்கராசார்ய ஸ்வாமியின் வியாஸங்கள் பெரும்பாலும் அந்த வருத்தத்தையும் தீர்ப்பனவாதலால், அவருடைய வியாக்யானங்களிலும் பத்திரிகைகளிலும் மணித்திரள் போலுள்ள விஷயங்களை அடியேன் தனிப்படத் தொகுத்து வைத்துக்கொண்டு அநுபவிப்பது வழக்கம்.

தற்காலம் ஸ்ரீஸ்வாமியின் மூலமாய் அறுபத்திரண்டு வார்த்தாமாலைகளாகப் பல பல விஷய ரத்னங்கள் வெளிவந்துகொண்டிருக்கின்றன. இந்த ஸந்தர்ப்பத்தில், ரஸிகர்களுக்கு அடியேனும் ஓர் உபகாரம் பண்ணலாமென்று நினைத்து ஸ்ரீஸ்வாமியின் வெளியீடுகளிலிருந்து அடியேன் அடிக்கடி மனனம் செய்யும் வியாஸங்களுள் ஓர் அறுபத்திரண்டு வியாஸங்களைத் தொகுத்து "அறுபத்திரண்டு உபந்யாஸ மாலை" என்று பெயரிட்டு இந்நூலை வெளியிடுகின்றேன். இதிற்காணும் ஒவ்வொரு உபந்யாஸமும் ஏற்கெனவே ரஸிகர்களால் அநுபவிக்கப் பட்டேயிருக்கும். ஆனாலும் அவற்றை ஒன்றாகத் திரட்டி, அடிக்கடி மனனம் பண்ணுவதற்கு ஸௌகரியமாக உபகரிக்கிறது பலர்க்கும் விசேஷ ப்ரீதி ஹேதுவாகுமென்று கருதுகின்றேன். முக்கியமாக உபந்யாஸகர்களுக்கு மிகவும் உபகாரகமாகுமென்று நினைத்தே இது வெளியிடப்படுகின்றது.

ஸ்ரீஸ்வாமி வடநாட்டுத் திருப்பதியாத்திரையாக எழுந்தருளியிருக்குமிந்த ஸமயத்தில் அடியேன் செய்யக்கூடிய தொண்டு இதுவே யாதலாலும் இதைச்செய்து அடியேன் க்ருதக்ருத்யனாகிறேன்.

இங்ஙனம்

10—7—53. அடியார்க்கு அடியன்.

# அறுபத்திரண்டு உபந்யாஸங்களின் அட்டவணை

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# அறுபத்திரண்டு உபந்யாஸமாலை.

(ஸ்ரீகாஞ்சீ ப்ர. அண்ணங்கராசார்யர் ஸ்வாமி.)

---

## 1. எம்பெருமானார் தரிசனத்தில் ஸர்வமும் ஸத்யம்.

எம்பெருமானார் இந்நிலவுலகில் திருவவதரித்தருளி ஸ்ரீமத் வேதமார்க்க ப்ரதிஷ்டாபனாசார்யரென்றும் உபயவேதாந்த ப்ரவர்த்தகாசார்யரென்றும் தாம் விருது வஹித்ததல்லாமல் தம் அடிபணிந்தாரையும் அவ்விருது வஹிக்கச் செய்தருளினவர் என்பது ப்ரஸித்தம். அப்பேராசிரியர் இதரமதஸ்தர்களால் கூறப்பட்ட பல பல அபார்த்தங்களை நிரஸித்தருளி நற்பொருள்களை நிலைநாட்டினரென்பதும் ப்ரஸித்தம். அப்படி நிலைநாட்டிய நற்பொருள்களுள் மிக முக்கியமான வொருபொருள் இங்கு எடுத்துரைக்கப்படுகிறது.

மாயாவாதிகளென்கிற இதர மதஸ்தர்கள் ப்ரஹ்மமொன்றுதான் ஸத்யமென்றும் மற்ற சேதநாசேதநாத்மகமான ப்ரபஞ்சமெல்லாம் அஸத்யமென்றும் ஸித்தாந்தம் செய்து வைத்தார்கள். வ்யாவஹாரிகதசை, பாரமார்த்திகதசை என்று இரண்டு தசைகளை யொப்புக்கொண்டு, வ்யாவஹாரிகதசையில் பரப்ரஹ்மத்திற்காட்டிலும் வேறுபட்ட சேதநா சேதநங்கள் இருப்பனவாகத் தோன்றினாலும் பாரமார்த்திகதசையில் இப்படிப்பட்ட பேதாநுஸந்தானம் அடியோடு இருக்கமாட்டாதென்கிறார்கள். அவர்களுடைய மதப்ரக்ரியையைச் சுருங்கச்சொல்லில் இவ்வளவே கேண்மின்:—*நிர்விசேஷசின்மாத்ரம் ப்ரஹ்ம* என்பது அவர்களது ஸூத்ரம் போன்றவொரு வார்த்தை. *ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம* என்று உபநிஷத்து ஓதுகையாலே அந்த பரப்ரஹ்மம் ஜ்ஞானமாத்ரஸ்வரூபமாகும். அது ஸ்வயம்ப்ரகாசமானஸ்வபாவமானாலும் தனது அநாதியான அவித்யையினாலே அபரமார்த்தமான ஜ்ஞாத்ருஜ்ஞேயாதிபேதத்தை அநுபவிக்கிறது [தன்னிடத்திலே ஏறிட்டுக்கொள்ளுகிறது]; வஸ்துத: ஜ்ஞாத்ருஜ்ஞேயாதிரூபங்களான நாநா வஸ்துக்கள் இல்லையாயிருக்கச் செய்தேயும் அவையுள்ளனவாக மயங்கிக் கொள்ளுகிறது. அவித்யாபரிணாமபூதனான ஜீவாத்மாவானவன் *தத்த்வமஸீத்யாதி வாக்யத்தினால் பிறக்கும் ஞானத்தினால் அத்வைத வித்யை கைபுகுரப்பெற்றவனாய் அந்த பரப்ரஹ்மத்தினுடைய அந்த ப்ரமத்தைப் போக்கடிக்கிறான். (அதாவது) *தத்த்வமஸி ச்வேதகேதோ* என்ற வேதாந்த வாக்யத்தின் உண்மைப்பொருளான அத்வைதம் எப்போது ஜீவாத்மாவுக்கு ஜ்ஞானகோசரமாகிறதோ அப்போதுதான் பந்தமோக்ஷம் என்கை. ஆகவே கண்ணிற் காண்பதெல்லாம் பொய்—என்பதே மாயாவாதிகளின் ஸித்தாந்தஸாரம்.

இந்த வாதத்தை லகுவாகக் கண்டிக்கிற முறை ஒன்றுண்டு; அதாவது, 'எல்லாம் பொய்' என்று சொல்லுகிறவர்களை நோக்கி ஒன்று கேட்கவேண்டியது; எல்லாம் பொய்யானால் ஆயிடுக; 'ஸர்வம் மித்யா' என்கிற இந்த ப்ரதிஜ்ஞையாவது உண்மைதானோ? சொல்லுங்கள்—என்று கேட்கவேணும். உண்மைதான் என்று விடை கூறுவார்களாகில், ஸர்வபதார்த்தத்திற்குள் சேர்ந்த இந்த ப்ரதிஜ்ஞையொன்று உண்மை—என்று தேறுகையாலே ஸர்வ மித்யாத்வ ப்ரதிஜ்ஞை பழுதேயாம். இந்த ஆபத்தில் நின்றும் தப்பவேண்டி 'ஸர்வம் மித்யா' என்கிற இந்த ப்ரதிஜ்ஞையும் பொய்யென்று அவர்கள் சொல்லியாகவேண்டும். அப்போது, தங்களுடைய வாதத்தைத் தாங்களே பொய்யென்று கூறி முடித்துவிட்டதாகத் தேறுகின்றது. எல்லாம் மெய்யென்று இசைந்து

கொள்ளப்பட்டதாகவே முடிந்ததாகும். இது, மாயாவாதிகளை எருவாகக் கண்டிக்கிற வழி. ஸ்ரீபாஷ்யாதிகளில் இந்த வழியும் காட்டப்படுகிறது. வேறுவழிகளில் காட்டப் படுகிற கண்டனப்ரகாரத்தையும் சிறிது காட்டுவோம்.

சாந்தோக்ய உபநிஷத்தில் (6—2—1.) *ஸதேவ ஸோம்ய! இதமக்ர ஆஸீத் ஏகமேவ அத்விதீயம்* என்று ஓதப்பட்டுள்ளது. ப்ரஹ்மமொன்றே ஸத்யமானதென்றும் மற்றெல்லாப் பொருளும் பொய்யென்றும் கூறுகின்ற அத்வைதவாதிகள் இந்த உபநிஷத் வாக்கியத்தை முக்ய ப்ரமாணமாகக் காட்டுவர்கள். இதில் அத்விதீயம் என்றவொரு பதம் முக்கியமானதாகக் கொள்ளப்படும். ப்ரஹ்மம் ஒன்றேயுளது, மற்றொன்றும் இல்லை—என்பதாக இப்பதத்தினால் விளங்குகின்றதென்பர் அத்வைதிகள். ‘ப்ரஹ்மமும் ஸத்யம், மற்றெல்லாப்பொருள்களும் ஸத்யமே’ எனக்கொள்ளும் நம்மவர்கள் இதற்கு என்ன சொல்லுகிறார்களென்பதைச் சுருங்கச் சொல்லுவோம்.

ஸார்வபௌமனான ஒரு மஹாராஜனைச் சுட்டி “இவன் அத்விதீயனான அரசன்” என்று சொல்லுவோமானால், அவனுக்கு மக்களில்லை மனைவியில்லை உடுக்கத்துணியில்லை, நிற்க நிழலில்லை, உண்ணச் சோறில்லை என்றதாகுமோ? ‘அரசன் அத்விதீயன்’ என்றால் அவன் இரண்டாவது பொருளையுடையனல்லாதவன் என்று பொருள்படுதலால் இப்படித்தான் பொருள்கொண்டாகவேணுமென்னில், இதை உலகில் ஒருவரும் ஒப்புக் கொள்ளமாட்டார். அத்வைதிகளும் ஒப்புக்கொள்ளமாட்டார்கள். இவ்வரசனுக்கு நிகரான வேறோரரசனில்லை’ என்று பொருளாகுமேயல்லது இவன் தவிர உலகத்தில் வேறொரு பொருளே கிடையாதென்று பொருளாகமாட்டாதென்பதை அனைவரும் ஏககண்டமாக இசைந்து தீருவர்கள். லோகாநுபவஸாக்ஷிகமான இவ்வர்த்தந்தான் *ஏகமேவாத்விதீயம்* என்றவிடத்திற்கும் பொருந்தும். *பதிம் விச்வஸ்ய* என்று வேதாந்தங்களில் புகழப்படுகிறான் ஈச்வரன். ஈசிதவ்யங்களான வஸ்துவொன்றுமேயில்லையென்று முடித்திட்டு ஈச்வரனுளனென்றால் அஜாகளஸ்தனத்திற்கும் அவனுக்கும் ஒருவாசியுமில்லையாகுமன்றோ. எம்பெருமானுக்குப் பழிப்பாகவன்றோ இப்பொருள் முடிந்து நிற்கும்.

உபநிஷத்துக்களின் உண்மைப்பொருளைக் கண்டவர்களில் தலைவரான ஸ்வாமியெம்பெருமானார், எம்பெருமானை ஸர்வேச்வரனென்னும்போது ஸர்வமும் ஸத்யமாயிருந்து தீரவேணுமென்றும், அப்படியிருந்தாலொழிய ஸர்வேச்வரத்வம் எம்பெருமானுக்குப் புகழ்ச்சியாகமாட்டாதென்றும் காட்டி ஸர்வ பதார்த்தங்களையும் ஸத்யமாகக்கொண்டு அவற்றை அப்பெருமானுடைய ஸொத்துக்களாக நிரூபித்தருளினார். 1

## 2. சாஸ்த்ரார்த்த தத்த்வஸமந்வயம்.

பகவத்விஷயம் ஈடுமுப்பத்தாறாயிரப்படியில் (5—7—3) *கருளப்புட்கொடி சக்கரப்படை* என்கிற வானமாமலைப் பாசுரத்திற்கு அவதாரிகை இங்ஙனேயுள்ளது:— “அருளாய் என்றீர்; அருளக்கடவோம்; அதிலொரு தட்டில்லை; ஆனாலும் சாஸ்த்ர பலம் ப்ரயோக்தரி* *கர்த்தா சாஸ்த்ரார்த்தவத்த்வாத்* அன்றோ; அருள்பெறுவார் பக்கலிலேயும் சிறிது உண்டாக வேணுங்காணுமென்ன; இது, மேலுத்தைக்கு இட்ட மர்யாதையோ? கீழுத்தைக்குமேதேனுமுண்டோ? ஆனபின்பு இத்தலையில் கிஞ்சித்காரத்தைவிட்டு உன் க்ருபையாலே செய்தருளாயென்கிறார். இவ்வளவும் வர இதுக்கு முன்பு நீ நிர்ஹேதுகமாக விஷயீகரித்தபின்பு மேலும் நீ செய்தருளவேணுமென்கிறார்.” என்று. இதில் எம்பெருமானுடைய வாதம் ஒருவிதமாயும் ஆழ்வாருடைய ப்ரதிவாதம் மற்றொருவிதமாயுமுள்ளது. எம்பெருமானுடைய வாதம் என்னவென்றால், பேறு பெற வேண்டியவர்கள் ஒரு கைம்முதலுமில்லாமல் வாளா பெற்றுவிடமுடியாது; பேறுபெறுதற்குரிய வழிகளை [ஸாதனங்களை] நான் சாஸ்த்ரங்களில் பலஷு

முகமாகத் தெரிவித்திருக்கிறேன்; அவற்றை யனுஷ்டித்துப் பேறுபெற முடியுமே
யொழிய வெறுமனே பெற்றுவிட முடியாது. அப்படி பெறுவதானால் ஸர்வமுக்தி
ப்ரஸங்கம் வரும். சாஸ்த்ரார்த்தங்களும் கலங்கிப்போகும். அப்படியாகாமைக்காக
நான் நூல்வரம்பு இட்டிருக்கிறேன்; அதைக் கடக்கலாகாது; அதைப் பரிபாலனம்
பண்ணினோர்க்கொழிய மற்றையோர்க்குப் பேறுகிடைக்காது—என்பது எம்பெருமா
னுடைய வாதம். இதில் ஒருவிதமான குறையும் சொல்லமுடியாது. *மயர்வறமதி
நலமருளப்பெற்ற ஆழ்வார் இதை உள்ளபடி தெரிந்துகொள்ளாதவருமல்லர். *வணக்
குடைத் தவநெறி வழிநின்று புறநெறி களைகட்டு உணக்குமின்பசையற அவனுடை
யுணர்வுகொண்டுணர்ந்தே* (திருவாய்மொழி 1—3—5) என்பது முதலான பாசுரங்
களில் இதனை வெளியிட்டுமிருக்கிறார். ஆனால், எம்பெருமானுக்கு ஆழ்வார் செய்யும்
ப்ரதிவாதமென்னவென்றால், கேண்மின்:

எமக்கு நீ கரணகளேபரப்ரதானம்பண்ணி எம்மை நீ யுண்டாக்கினது நாங்கள்
ப்ரார்த்தித்தோ? இல்லையே; உன்னுடைய நிர்ஹேதுகக்ருபையினாலன்றோ செய்தாய்.
இதனால் ஸம்ஸாரிகள் பக்கலிலே உனக்கொரு நிர்ஹேதுகக்ருபையுண்டென்று தெரிய
வருகிறது. அந்த க்ருபை நித்யஸ்ரீர்நித்யமங்களமாக எப்போதும் விளங்கக்கடவதே
யன்றி ஒருகாலிருந்து மற்றொருகால் மறையுமதன்றே. அந்த க்ருபையைக்கொண்டே
பரமபுருஷார்த்தத்தையும் தந்தருளத்தட்டென்ன? முதலில் ஒரு கைம்முதலையும் எதிர்
பாராமல் காரியம் செய்த நீ இப்போது மாத்திரம் பேற்றுக்குக் கைம்முதல் வேணு
மென்கை யுக்தமாகுமோ? என்று.

ஆழ்வாருடைய இந்த ப்ரதிவாதம் யுக்தந்தானா? என்று விமர்சிக்கவேண்டும்.
ஆதியில் எம்பெருமான் நமக்குக் கரணகளேபர ப்ரதானம் பண்ணினது நிர்ஹேதுக
க்ருபையினாலாயினும், கரணகளேபரங்களைக் கொடுத்து சாஸ்த்ரங்களையும் காட்டிக்
கொடுத்து அவற்றில் ஸ்வப்ராப்தி ஸாதனங்களையும் தெரிவித்து, அவ்வழியாகத் தன்
னைப் பற்றுவார்க்கே பேறுதருவதாகத் தான் வெளியிட்டிருக்க, அதைத் தெரிந்து
கொண்டவர் வழியல்லாவழியில் ப்ரதிவாதம் செய்வது யுக்தமாகாது. ஆகவே
ஆழ்வாருடைய ப்ரதிவாதம் அயுக்தந்தானோ? என்ன வேண்டா; அயுக்தந்தானென்று
முடிவுகட்டிவிடவும் வேண்டா. ஆழ்வாருடைய திருவுள்ளம் என்னவென்றால்; பேற்
றின் கனத்தையும் நாம் செய்யும் ஸாதநாநுஷ்டானத்தின் புன்மையையும் உற்று
நோக்குமிடத்து அந்தக் கனத்த பேற்றுக்கு எதையும் ஸாதனமாக நினைக்கத்தகாது.
அதற்கு ஏற்ற ஸாதனம் உலகில் கிடையவே கிடையாது. ஸர்வசக்தனான சரண்யன்
இதையொரு வியாஜமாகக்கொண்டு காரியஞ்செய்கிறானென்று நாம் நினைக்கலாமே
யொழிய இதை ஸாதனமாகக் கொண்டு செய்கிறானென்று நினைக்கவேதகாது. ஆகவே
'நிர்ஹேதுகமாக அருளாய்' என்று ப்ரார்த்திப்பதுதான் யுக்தமானதென்று கொண்டு 2
அவ்விதமாக அருளிச் செய்து வருகிறார். இது ஸமஞ்ஜஸமானதே. ...

# 3. எம்பெருமானாரும் திவ்ய ப்ரபந்தமும்

ஆழ்வார்களருளிச் செய்த திவ்யப்ரபந்தங்களெல்லாம் உலகில் மலினமாகி
மறைந்திருந்தகாலத்தில் ஸ்ரீமந்நாதமுனிகள் வெகு பரிச்ரமப்பட்டு நம்மாழ்வாரை
யோகதசையில் ஸாக்ஷாத்கரித்து திவ்யப்ரபந்தங்களையெல்லாம் பெற்று விசேஷ
ப்ரசாரம் செய்தருளினதாக இதிஹாஸமுள்ளது. இது பின்புள்ளவர்கள் கற்பனையாக
எழுதிவைத்ததென்று சொல்வதற்கிடமில்லாதபடி ஸ்ரீமத் வேதாந்த தேசிகாதிகளான
முன்னோர்களும் குருபரம்பராஸாரம் முதலான ரஹஸ்யக்ரந்தங்களில் எழுதிவைத்துள்
ளார்கள். ஆகவே, நம்முடைய ஸம்ப்ரதாய பஹிர்ப்பூதர்களான பிறர் எப்படிச் சொன்
னாலும் ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயஸ்தர்கள் இதில் அதிசங்கைகொள்ள அவகாசலேசமு
மில்லை. இப்படியிருக்க "திவ்யப்ரபந்தங்களை வளர்த்தவர் எம்பெருமானார்" என்று

ப்ரஸித்தி வந்திருக்கிறது. எம்பெருமானார்க்கு வாழி திருநாமமருளிச்செய்தவர் மணவாளமாமுனிகள். (ஆர்த்திப்ரபந்தத்தில் அஃதுள்ளது.) அதில் "மாறனுரை செய்த தமிழ்மறை வளர்த்தோன் வாழியே" என்றுள்ளது. இவ்விஷயத்தை எம்பெருமானாருடைய ஸமகாலத்தவர்களான மஹாசார்யர்களின் ஸ்ரீஸூக்திகளினாலும் நன்கு உணர்கின்றோம்.

ஆழ்வார்களருளிச் செய்த ஸகல திவ்யப்பிரபந்தங்களுக்கும் தனியன்கள் அநாதி காலமாகவே அநுஸந்திக்கப்பட்டு வருகின்றன. சில ப்ரபந்தங்களுக்கு ஒன்றிரண்டு தனியன்களும்; சில பிரபந்தங்களுக்கு ஐந்தாறு தனியன்களும் அமைந்திருக்கின்றன. நம்மாழ்வாரருளிய திருவாய்மொழியாயிரத்திற்கு ஸம்ஸ்க்ருதத்தனியன் ஒன்றும், தமிழ்த் தனியன்கள் ஐந்துமாக ஆறுதனியன்கள் உலகமெங்கும் அநுஸந்திக்கப்பட்டு வருகின்றன. மாறன் பணித்த தமிழ் மறைக்கு ஆறங்கங்கூறவவதரித்த திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழியாயிரத்திற்கு ஸம்ஸ்க்ருதத் தனியன் ஒன்றும் தமிழ்த் தனியன்கள் மூன்றுமாக நான்கு தனியன்கள் அநுஸந்திக்கப்பட்டு வருகின்றன.

பெரும்பாலும் தனியன்களில் அந்தந்த திவ்யப் பிரபந்தங்களின் பெருமை, அவற்றை யருளிச் செய்தவர்களின் பெருமை, அவர்களவதரித்த தலத்தின் பெருமை முதலியன சொல்லப்படுகின்றன. திருவாய்மொழித் தனியன்களில் ஒன்றும், பெரிய திருமொழித் தனியன்களில் ஒன்றும் வெகு விலக்ஷணமாக அவதரித்திருக்கின்றன. திருவாய்மொழித் தனியன்களில்,

"ஏய்ந்த பெருங்கீர்த்தி யிராமானுச முனிதன்
வாய்ந்த மலர்ப்பாதம் வணங்குகின்றேன் — ஆய்ந்தபெருஞ்
சீரார் சடகோபன் செந்தமிழ்வேதந் தரிக்கும்
பேராத வுள்ளம் பெற."

என்கிற தனியனானது எம்பெருமானார் திருவடிகளிலே பண்ணுகிறவொரு பிரார்த்தனையாக அமைந்திருக்கிறது. இந்த வெண்பாவின் பொருளாவது, மிகச்சிறந்த கல்யாண குணசாலியான நம்மாழ்வாரருளிச் செய்த திருவாய்மொழியாயிரத்தை நன்கு தரித்துக் கொள்ளவல்ல நெஞ்சத்தினைப் பெறுவதற்காக பெரும்புகழ்படைத்த எம்பெருமானாருடைய திருவடித் தாமரைகளை வணங்குகின்றேனென்பதாம். ஸ்வாமிந்! எம்பெருமானீரே! திருவாய்மொழியாயிரத்தையும் மறவாமல் தரிக்கத்தக்க ஸாமர்த்தியத்தை வரப்ரஸாதமாகத் தந்தருளவேணுமென்று அவர்தம்மையே நோக்கிப் பிரார்த்திக்கிற படியாகத் தேறுகின்றது.

பெரிய திருமொழித் தனியன்களுள்,

"எங்கள் கதியே யிராமானுச முனியே! சங்கை கெடுத்தாண்ட தவராசா!—பொங்குபுகழ்
மங்கையர்கோ னீந்தமறையா யிரமனைத்தும் தங்குமனம் நீயெனக்குத் தா."

என்கிற விந்தத் தனியனும் இதேரீதியாக அமைந்திருக்கின்றது. இது எம்பெருமானாரை முன்னிலைப்படுத்தியே கூறியுள்ளது. திருமங்கையாழ்வாரருளிச் செய்த பெரிய திருமொழியாயிரத்தையும் தரிக்கவல்ல மனத்தைத் தந்தருள வேணுமென்று எம்பெருமானாரை நோக்கிப் பிரார்த்தித்திருக்கிறது இதில்.

ஆக இவ்விரண்டு தனியன்களையும் விசேஷித்து மனதில் மனனம் செய்யுங்கால் தனிச்சிறப்பு வாய்ந்தவொரு பரமானந்தம் விளைவதோடு எம்பெருமானாருடைய ஒப்பற்றவொரு பெருமையும் அறியலாகிறது. பிரபந்தங்களைத் தரிக்கும்படியான நெஞ்சைத் தந்தருள வேணுமென்கிற பிரார்த்தனையை அந்தந்த ஆழ்வார்களை நோக்கியே செய்திருக்கலாம்; அவர்களுக்கு அந்தரங்கர்களான மதுரகவிகள் ஸ்ரீமந்நாத முனிகள் போல்வாரை நோக்கியாவது செய்திருக்கலாம்; பரமோதாரனை எம்பெருமானை நோக்கிச் செய்திருக்கலாம். ஸகலவித ஸம்பத்துக்களையும் அளிக்கவல்ல பெரிய பிராட்டி

யாரை நோக்கிச் செய்திருக்கலாம். [இராமானுச நூற்றந்தாதியின் ஈற்றுப்பாசுரத்தொடு ஒக்கப்பொருந்துமிது.] இப்படிப்பட்ட வழிகளை விட்டு எம்பெருமானாரை நோக்கி இந்தப் பிரார்த்தனை செய்திருப்பது எதனாலென்று விமர்சிக்க வேண்டியது அவச்யமன்றோ? புதிதாக நாம் என்ன விமர்சிக்கப் போகிறோம்? அக்காலத்தில் ஆழ்வாரருளிச் செயல்களெல்லாம் எம்பெருமானாரிட்ட வழக்காயிருந்தனவென்பது நிஸ்ஸந்தேஹமாக அறியக்கிடக்கின்றது. வெகு ச்ரமப்பட்டு அதிகரித்துப் பலகால் உருச்சொல்லித் தரிக்கவேண்டிய இந்த மஹத்தான ப்ரஹ்மவித்யையை ஸ்வாமி யெம்பெருமானாரொருவரே *கலியுங்கெடுங் கண்டுகொண்மி னென்று ஆசாஸித்த ஆழ்வாருடைய பரமக்ருபையினாலும், *ஆமுதல்வனிவனென்று அநுக்ரஹித்த ஆளவந்தாருடைய அற்புதமான அநுக்ரஹாதிசயத்தினாலும அநாயாஸமாக க்ரஹித்து ஓரிடத்திலும் ஒருவிதமான ஸந்தேஹமும் விஸ்மரணமுமின்றிக்கே தரித்தருளியிருந்தாரென்பது வெளிஸ்பஷ்டமாகின்றது. இல்லையேல் இந்தத் தனியன்கள் இவ்வண்ணமாக அவதரித்திருக்க அவகாசமில்லையன்றோ.

அன்றியும், *ஏய்ந்த பெருங்கீர்த்தி* என்கிற தனியனுக்கு அடுத்ததான 'வான் திகழுஞ் சோலை" என்று தொடங்குந் தனியனில் "தமிழ்மறைகளாயிரமும் ஈன்ற முதல் தாய் சடகோபன், மொய்ம்பால் வளர்த்த இதத்தாய் இராமானுசன்" என்று சொல்லப்பட்டிருக்கின்றது. திருவாய்மொழியைப் பெற்ற தாயார் நம்மாழ்வாரெனவும், வளர்த்த தாயார் எம்பெருமானாரென்றும் அக்காலத்திலிருந்த ஆப்ததமர்களான ஆசிரியர்கள் அருளிச் செய்தார்களென்றால் திவ்யப் பிரபந்தங்களிலே எம்பெருமானார் எவ்வளவு ஈடுபாடு கொண்டவராக இருக்கவேண்டும்! திவ்யப்ரபந்தங்களைக் கற்க ருசியில்லாமலிருந்தவர்களை வலிய அழைத்துக் கற்க நியமித்தருளினர். வியாக்யானங்கள் அவதரிக்க நியமனம் தந்தருளினர். ஆங்காங்கு அருமை பெருமை வாய்ந்த நிர்வாஹங்களை வெளியிட்டருளினர். திவ்ய தேசங்களில் அருளிச்செயல் பிரசாரங்களை ப்ரபலப்படுத்தியருளினர். இவ்வண்ணமாகச் செய்தருளின செயல்களைக்கொண்டே "மொய்ம்பால் வளர்த்த இதத்தாய் இராமானுசன்" என்று பணித்தார்கள். அக்காலத்தில் எம்பெருமானார் அவ்வளவு ச்ரத்தை கொண்டருளியிராவிடில் திவ்யப்ரபந்தங்கள் ஸ்ரீமந்நாத முனிகளின் காலத்திற்கு முன்னேயிருந்த விதமாகவே லோபமடைந்திருக்கும். அப்படியாகாத படிக்கு ஸ்வாமி யெம்பெருமானார் செய்தருளின சேமக்காப்பு வாசாமகோசரம். "ஸர்வதேசதசாகாலேஷ்வ...ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா வர்த்ததாம் அபிவர்த்ததாம்...திகந்தவ்யாபிநீ பூயாத் ஸாஹி லோகஹிதைஷிணீ" என்கிற ச்லோகத்தை நாடு நகரமெங்கும் திவ்யப்ரபந்த ஸேவா காலங்களிலேயே அநுஸந்தித்து வருவதனால் அந்த ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞையானது திவ்யப் பிரபந்த விஷயமேயல்லது வேறு விஷயமன்று என்பது நன்கு உணரலாகிறது. ... 3

## 4. திவ்யப்ரபந்த மொழிபெயர்ப்பு.

உலகில் பிறந்தவர்கள் போதைப்போக்குவதற்குப் பல வழிகள் இருந்தாலும் "கார்கலந்த மேனியான் கைகலந்த வாழியான், பார்கலந்த வல்வயிற்றான் பாம்பணையான்—சீர்கலந்த சொல்நினைந்து போக்காரேல் சூழ்வினையினாழ்துயரை, என்னினைந்து போக்குவர் இப்போது." என்று நம்மாழ்வாரருளிச் செய்தபடி பகவத் குணாநுபவத்தினால் போது போக்குவதுதான் மிகச்சிறந்ததென்று அநுபவரஸிகர்கள் பலர் கைகண்டிருக்கிறார்கள். நாஸ்திகர்களாயிருப்பவர்களுங்கூடச் சில ஸமயங்களில் பக்தி தலையெடுக்கப்பெற்று பகவத் குணங்களைப் பற்றிய புத்தகங்களை வாசிக்க விரும்புகிறார்களென்பதை நாம் கண்டுவருகிறோம். அப்படி வாசிக்கவிரும்பும் புத்தகங்களில் ஆழ்வார்களருளிச்செய்த திவ்யப் பிரபந்தங்களே தலையான ஸ்தானத்தில் நிற்கின்றன. பொருள் தெரியாமற் போனாலும் பாசுரங்களைப் படிக்கும்போதே அற்புதமான ஆத்மானந்தமுண்டாகின்றதென்று பலர் கூறக் கேட்டிருக்கிறோம். பொருளும் தெரிந்து அநுபவிக்-

நேர்ந்தால் விலக்ஷணமான ஆனந்தவெள்ளம் ஆத்மாவில் பொங்கி அலையெறியுமென்பதில் ஸந்தேஹமில்லை.

வேத வேதாந்தங்கள் முதலிய ஸகல சாஸ்த்ரங்களிலும் கரை கண்டவர்களான நம் பூருவாசாரியர்களும்—[ஸ்ரீமந் நாதமுனிகள் ஆளவந்தார் ஸ்ரீராமாநுஜர் கூரத்தாழ்வான் பட்டர் முதலான பேராசிரியர்களுங்கூட] இத்திவ்யப் பிரபந்தங்களிலேயே போதைப் போக்கினார்களென்றால் இவற்றின் இனிமை எப்படிப்பட்டதாயிருக்கவேணும்!

ஸ்ரீத்திமூர்த்தியான ஸ்ரீமத் கோவர்த்தனம் (ஆத்ய) ரங்காசார்யர்ஸ்வாமி வடதேசத்தில் வியாபகரர்களமுந்தருளியிருந்து ப்ருந்தாவனத்தில் திவ்யதேசப்ரதிஷ்டை செய்தருளின காலத்தில் ஸுதர்சநாசார்ய சாஸ்த்ரி என்றொரு உத்தராதிப்ராஹ்மணர் அவருடைய திருவடிகளில் ஆச்ரயித்திருந்தார். அவர் சதுச் சாஸ்த்ர பண்டிதர். கோவர்த்தனம் ஸ்வாமிக்கு தக்ஷிண பாஹுவாக விளங்கினவர். அவர் கோவர்த்தனம் ஸ்வாமி ஸந்நிதியில் திருவாய்மொழி வியாக்கியானமாகிய பகவத்விஷயத்தைக் காலக்ஷேபஞ் செய்தாராம். அப்போது அவருடைய உள்ளத்தில் தோன்றியதை அவரே பத்து ச்லோகங்களாக இயற்றி வெளியிட்டிருக்கிறார், அந்த ச்லோகங்களின் தாத்பர்யஸாரம் கேண்மின்.

> "இவ்வுலகில் எண்ணிறந்த சாஸ்த்ரங்கள் தோன்றியிருந்தாலும் ஆழ்வார்களுடைய திவ்ய ப்ரபந்தங்களுக்குச் சமானமான சாஸ்த்ரம் எதுவுமே கிடையாது. அவற்றுக்கு வியாக்யானங்களை யருளிச்செய்த ஆசாரியர்களே உண்மையான ப்ரஹ்ம வித்துக்கள். அப்படிப்பட்ட திவ்யப்பிரபந்தங்களையும் வியாக்கியானங்களையும் அதிகரிக்க யோக்யமான ஜன்மமே ஜன்மம். ஐயோ நான் தமிழ்பாஷைக்கு வைதேசிகனாய் யமுனைக்கரையிலே பிறந்து கெட்டேனே! ஆனாலும் அந்த மஹார்த்தங்களை ஒருவாறு கேட்கும் பாக்கியம் பெற்றேனே யென்று மகிழ்கிறேன். ஸ்ரீமந் நாராயணா! கோவர்த்தனம் ஸ்வாமி திருவடிகளில் ஆச்ரயித்து ஸ்ரீராமாநுஜ ஸம்பந்தம் பெற்ற வெனக்கு மோக்ஷப்ராப்தியில் ஸந்தேஹ லேசமும் கிடையாது. ஆனாலும் ஸ்ரீமந் நாராயணா! எனக்கு நீ இப்பிறப்பில் மோக்ஷம் கொடுக்கலாகாதென்று உன் திருவடிகளைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு பிரார்த்திக்கிறேன். என்னை நீ தமிழ்நாட்டில் பிறப்பித்து நாலாயிர அத்யாபகன் என்ற விருதைப் பெறுவித்து ஆழ்வாருடைய ஸ்ரீஸூக்திகளை வாயாரக் கதறும்படி பண்ணி அப்படி பத்தெட்டு ஜன்மங்கள் கொடுத்து, பிறகுதான் என்னை நீ திருவடி சேர்த்துக் கொள்ளவேணும். இப்படி யல்லாமல், நாராயணா! எனக்கு நீ இப்போதே மோக்ஷம் கொடுத்துவிட்டாயாகில் *நச புநராவர்த்ததே நச புநராவர்த்ததே* என்கிற உபநிஷத்தையும் * அநாவ்ருத்திச் சப்தாத் அநாவ்ருத்திச் சப்தாத் * என்கிற ப்ரஹ்ம ஸூத்ரத்தையும் கிழித் தெறிந்துவிட்டு இந்நிலத்திற்குத் திரும்பிவந்து தாம்ரபர்ணீ தீரத்திலும் காவேரிக்கரையிலும் ஸ்ரீபெரும்பூதூர் ப்ராந்தத்திலும் பிறவி எடுத்தே தீருவேன்".

என்று இப்படிப்பட்ட நிர்வேதத்தைப் பொதிய வைத்துப் பத்து ச்லோகங்கள் இயற்றியிருக்கிறார் ப்ருந்தாவனம் ஸுதர்சநாசார்ய பண்டிதர்.

அடியேனுடைய அநுபவத்தில் நேரில் கண்டவொரு விஷயத்தையுமிங்குத் தெரிவிக்கிறேன். கீர்த்தி மூர்த்தியா யெழுந்தருளி யிராநின்ற ஸ்ரீமத் பரமஹம்ஸ ஸ்ரீ வானமாமலை சின்னகலியன்ஸ்வாமி இரண்டாவது தடவை வடதேசயாத்திரை யெழுந்தருளினபோது பாட்னாவில் தீகாகாட் என்ற ஸ்தலத்தில் எழுந்தருளி யிருந்த காலத்தில் அடியேன யாத்ராவசாத் (1915-ம் வருஷத்தில்) அங்கு விடைகொள்ள நேர்ந்தது. ஸ்ரீஸ்வாமியின் பரம கிருபைக்கு இலக்காகிச் சிலநாள் அங்குத் தங்கியிருக்கையில் ஸ்ரீஸ்வாமி ஆழ்வார் ஸ்ரீஸூக்தியிலிருந்து அருமையான அர்த்த விசேஷங்களை அநுதினமும் ஹிந்தியில் உபந்யஸிக்கும்படியா யிருந்தது. அதைக்கேட்ட அந்தத் தேசத்துப் பண்டிதர்கள் யாவரும் கண்ணுங் கண்ணீருமாயிருந்தனர். அவர்களில்

தலைவரான வொருவர் சொன்னவார்த்தை இன்னமும் மறவாமலிருக்கிறது. அதாவது *ஆஸாமஹோ சரணரேணுஜுஷாமஹம் ஸ்யாம் ப்ருந்தாவனே கிமபி குல்ம லதௌஷதீநாம், யா துஸ்த்யஜம் ஸ்வஜநம் ஆர்யபதஞ்ச ஹித்வா பேஜுர் முகுந்தபதவீம் ச்ருதிபிர் விம்ருக்யாம்* [வேதங்களாலே தேடப்படுமதான க்ருஷ்ணன்போனவழியை யாவர் சில பெண்கள் ஸ்வஜனங்களையும் அதிக்ரமித்துப் பின் தொடர்ந்தார்களோ அவர்களுடைய பாததூளியை பஜிக்கப்பாங்காக ப்ருந்தாவனத்திலுள்ள சிறு செடிகள் கொடிகள் ஓஷதிகள் முதலானவற்றில் ஏதேனுமொன்றாகப் பிறக்கப்பெறவேணும்] என்றும், *அஹம் கதம்போ பூயாஸம் குந்தோவா யமுநாதடே* [யமுனைக்கரையில் கண்ணபிரான் திருவடிகளால் மிதித்தேறின கடம்ப மரமாகவோ குருந்தமரமாகவோ பிறக்கப் பெறவேணும்] என்றும் முன்னே உத்தவர் முதலானோர் ப்ரார்த்தித்ததாகச் சொல்லுகிறார்கள்; அந்த ஜன்மங்களெல்லாம் ஏதுக்கு? இப்படிப்பட்ட திவ்ய ப்ரபந்தங்களை யதிகரிக்கப் பாங்கான ஜன்மமன்றோ ஜன்மம்—என்றார்.

ஆகவிப்படி வைதேசிகர்களுங்கூட ஈடுபடும்படியான பெருமைவாய்ந்த திவ்ய ப்ரபந்தங்களின் அரிய பெரிய பொருள்களை ஸகல தேசத்தாரும் தெரிந்துகொண்டு ஆனந்திக்க வேணுமென்கிற ஆசை அடியேனுக்குத் தோன்றி, ஸம்ஸ்க்ருதம் ஹிந்தி தெலுங்கு ஆகிய மூன்று பாஷைகளிலும் திவ்ய ப்ரபந்த வியாக்யானங்களை எழுதத் தொடங்கி மூன்று வருஷங்களுக்கு மேலாயிற்று. இதில் பலபகுதிகள் வெளிவந்திருக்கின்றன. அநுஸ்யூதமாக அச்சாகிவருகின்றது. ... ... ... 4

## 5. தமிழ்மொழி மரியாதை.

வடமொழி மரியாதையும் தென்மொழி மரியாதையும் சில விஷயங்களில் ஒத்திருக்கும், பல விஷயங்களில் ஒவ்வாமலிருக்கும். வடமொழியில் ஒருசொல்லுக்குப் பலபொருள்கள் இருப்பதுபோலவே தென்மொழியிலுமுண்டு. வடமொழியில் ஹரி: என்கிற ஒரு சொல்லை யெடுத்துக் கொண்டோமானால் இதற்கு, விஷ்ணு, ஸூர்யன், குதிரை, தவளை முதலிய பலபொருள்கள் நிகண்டுகளில் கூறப்பட்டிருக்கக் காண்கிறோம். விஷ்ணுவை உத்தேசித்தே ஹரி: என்னுமிந்தச் சொல்லைப் பெரும்பாலும் பிரயோகித்து வருகிறார்களெனினும் ஏனைய பொருள்களை உத்தேசித்தும் இச்சொல்லைப் பிரயோகிப்பதில் தவறில்லை, அங்ஙனே பிரயோகங்களும் பலவுள்ளன. விஷ்ணுவாசகமாக இதைப் பிரயோகிக்குங் காலத்தில் விஷ்ணுவினிடத்தில் அந்வயிக்கக் கூடிய விசேஷணங்களைப் பிரயோகிப்பர்கள்—"பீதாம்பராய ஹரயே கரவை நமாம்ஸி" என்றொரு ச்லோகத்தை எடுத்துக்கொள்வோம். இதில் ஹரிக்குப் பீதாம்பரத்வம் விசேஷணமாயிருக்கின்றது பீதகவாடை யணிந்து கொண்டுள்ளவர் என்பது பொருள். இந்த விசேஷண ஸாமர்த்தியத்தினாலும் நாம் ஹரிசப்தார்த்தத்தை இங்கு நிச்சயித்துக் கொள்ள விரகுண்டு,

ஹரி பதத்திற்கு தவளையென்கிற பொருளும் உண்டாகையாலே அப்பொருளை விவக்ஷித்து ஹரிபதம் உபயோகிக்குமிடத்து பீதாம்பரத்வ விசேஷணம் செய்யக்கூடுமா? என்றால் கூடாது என்பதே அறுதியிடப்பட்டிருக்கிறது. தமிழில் இப்படியில்லை. அந்த பாஷையில் ஒரு சொல்லுக்கு இரண்டு பொருள் இருந்தால் ஒரு பொருளுக்கு இசையும் அடைமொழியை [விசேஷணத்தை] மற்றொரு பொருளுக்கும் உபயோகிப்பதுண்டு. இதற்குச் சில உதாரணங்கள் காட்டியே ஸஹ்ருதயர்களின் நெஞ்சில் இதைப் பதிய வைக்க வேண்டியிருக்கிறது.

வஞ்சி என்கிற வொரு சொல்லை எடுத்துக்கொள்வோம். இதற்கு வஞ்சிமரம் என்கிற வொரு வ்ருக்ஷவிசேஷமும் அர்த்தம், சேரனுடைய ராஜதானியாகிய வஞ்சிமாநகரும் அர்த்தம். வஞ்சிமரத்தைக் கூற வேண்டுங்கால் உபயோகப் படுத்தக்கூடிய இலை, காய், கொடி முதலியன வுடைமையைத் தெரிவிக்கும் அடைமொழிகள் வஞ்சிமாநகரைக் கூறுங்கால் உபயோகப்படாவாயினும் கவிகள் பிரயோகத்தில் உபயோகிப்பதுண்டு.

பரிபாடல் என்னும் சிறந்த தமிழ்நூலில் பன்னிரண்டாம் பாட்டினுரையில் பரிமேலழகர் என்கிற பெரியார் "நெட்டிலை வஞ்சிக்கோ" என்பதை எடுத்துக் காட்டியுள்ளார். புறநானூறு என்னும் நூலில் (செய்யுள்—387) "புல்லிலை வஞ்சிப் புறமதிலலைக்கும் கல்லென் பொருநை" என்றுள்ளது. இவ்விடங்களில் வஞ்சிமாநகர் விவக்ஷிதமே யல்லது வஞ்சிமரம் விவக்ஷிதமேயன்று. ஆயினும், வ்ருக்ஷவிசேஷப் பொருட்கு உரிய நெட்டிலை, புல்லிலை என்னும் அடைமொழிகளை அம்மரப் பெயர் கொண்ட வஞ்சிமாநகர்க்கும் ஏற்றியுள்ளார்கள் என்பது நன்கு காணக்கிடக்கின்றது.

நாகம் என்னுஞ் சொல் புன்னைமரத்திற்கும் பாம்புக்கும் பெயர். பாடாடலில் நாகமென்ற சொல்லையிட்டுப் புன்னைமரத்தைப் பேசுங்கால் பாம்புக்கு உரிய அடைமொழியைப் புன்னைக்கு இட்டனர். "ஒளி திகழ் உத்தி உருக்கெழு நாகம்" என்ற பன்னிரண்டாஞ் செய்யுள் காண்க.

இங்ஙனே தமிழ்நூற்களிலுள்ள ஸம்பிரதாயம் ஆழ்வார்களது அருளிச் செயல்களிலும் ஏறியுள்ள தென்பதே இங்கு எடுத்துக்காட்ட விரும்பியது. திருமங்கையாழ்வாருடைய பெரிய திருமொழியில் (3-8-8.) "துளையார் கருமென் குழலாய்ச்சியர்" என்ற பாட்டில் குழலுக்குத் துளையார் என்னும் அடைமொழி கொடுக்கப் பட்டிருக்கிறது. இங்கே குழல் என்பதற்குக் கூந்தல் என்று பொருள். குழல் என்பது புல்லாங்குழலுக்கும் வாசகமாயினும் அப்பொருள் இங்கு விவக்ஷிதமன்று. கூந்தல் என்னும் பொருள் விவக்ஷிதமானால் அதற்குத் 'துளையார்' என்ற விசேஷணம் எங்ஙனே பொருந்துமென்று பரிசீலிக்கவேணும். புல்லாங் குழலில் துளை ஆர்ந்திருப்பது ப்ரஸித்தம். ஆகவே, துளைகள்நிரம்பிய புல்லாங்குழலைச் சொல்லக் கடவதான குழல் என்கிற சொல்லால் கூறப்படுகின்ற கூந்தலை யுடையவர்களான ஆய்ச்சிகள் என்றதாயிற்று.

வேறுவகையாகப் பொருள் கூறலாமானாலும், இப்படியும் நிர்வஹிக்கிற புடையுண்டு என்றும், தமிழ் மரியாதையிலே இது விசேஷார்த்தமாகத் தெரிந்து கொள்ளத் தக்கதென்றும் இங்குக் காட்டி நின்றோம். ... ... ... 5

## 6. வடமொழி மரியாதை.

ஸம்ஸ்க்ருத பாஷையிலுள்ள பலபல நியமங்களுள் இதுவும் ஒரு நியமம். அதாவது முதல் வேற்றுமையான எழுவாய் (கர்த்தா) இருந்தால் அது ஒரு க்ரியா பதத்தோடு தான் அந்வயித்து முடியும்; இடையிலுள்ள வினையெச்சம் முதலானவற்றில் அந்வயித்து நிற்கமாட்டாது என்பதே. இதை ஸம்ஸ்க்ருத ஸரணியில் விவரிக்கிறோம். ப்ரதமாவிபக்தியான கர்த்ரு பதம் இருக்குமானால் அது ஒரு காரகக்ரியாபதத்திலோ திஙந்தக்ரியாபதத்திலோ அந்வயித்து முடியுமேயல்லது ல்யபந்தம் முதலான இடையிலுள்ள அவ்யயங்களில் அந்வயித்து நில்லாது என்றபடி.

"சைத்ர: க்ராமம் கத்வா மைத்ரம் ததர்ச" என்பதாக ஒரு வாக்கியத்தைக் கொள்ளுவோம். சைத்ரன் ஊருக்குச் சென்று மைத்ரனைக் கண்டானென்பது இந்த வாக்கியத்தின் பொருள். இதில் சைத்ரன் என்ற எழுவாய் (ததர்ச-கண்டான்) என்ற வினைமுற்றோடே அந்வயித்தே தலைக்கட்டுகின்றது. "சைத்ரன் உண்பதற்கு மைத்ரன் சமைத்தான்" என்று சொல்லவேண்டில் "சைத்ர: போக்தும் மைத்ர: பசதிஸ்ம" என்று பிரயோகிக்கலாமா? என்று பார்க்கவேணும். இங்ஙனே பிரயோகிப்பதை சாஸ்த்ரஜ்ஞர்கள் ஸஹியார்கள். ஏனெனில், சைத்ர: என்கிற எழுவாயானது ஒருவினைமுற்றில் அந்வயித்தே தீரவேண்டுமாதலாலும், இங்கே உள்ளதான (பசதிஸ்ம—சமைத்தான், என்ற வினைமுற்றில் அது அந்வயிக்க ஔசித்ய மில்லாமையாலும் இந்த ப்ரயோகம் துஷ்டமென்றே கொள்ளப்படும்.

ச்ராத்தப்ரயோகத்தில் (இதம் க்ஷேத்ரம் கயாக்ஷேத்ரஸத்ருசம் பூத்வா...மம அதிதார ஸம்பத் அஸ்து) என்று புரோஹிதர்கள் சொல்லிவருகிற வாக்கியத்தைப் பெரியார்

ஆமோதித்துத் திருத்துகிறார்கள். இதற்குக் காரணம் கீழே நாம் உபபாதித்த உண்மையே யாகும். ப்ரதமாவிபக்தியான ஒருகர்த்ருபதம் இருக்குமானால் அது வினைமுற்றோடே அன்வயித்தே தீரவேண்டுமென்றும், அப்படி அன்வயிக்கப் பெறாதபடி ஒரு வாக்கியம் இருக்குமானால் அது அசுத்தமேயென்றும் திண்ணமாகக் கொள்ளவேண்டியதே.

இங்கு இதம் க்ஷேத்ரம் என்கிற முதல் வேற்றுமைச் சொல்லானது (எழுவாய்) மேலேயுள்ள அஸ்து என்கிற வினைமுற்றில் அன்வயிக்குமானால் இதுநிரவத்ய ப்ரயோகமே யாகும். அஸ்து என்கிற க்ரியாபதத்தில் இது அன்வயிக்கமாட்டாதாகையாலும் இடையி லுள்ள நந்வா என்கிற அவ்யயத்தில் அன்வயிப்பதனாலும் இந்த ப்ரயோகம் வ்யாகரண சாஸ்த்ரரீதியில் ஸாது வாகமாட்டாது. ஆகவே, "இதம் க்ஷேத்ரம் கயாக்ஷேத்ரஸத்ருசம் பூயாத்" என்று பெரியார்கள் திருத்துவது பொருத்தமேயாகும். ... ... 6

## 7. ஆண்டாளும்—திருமங்கைமன்னனும்

ஆண்டாள் நாச்சியார்திருமொழியில்—"நாணியினியோர் கருமமில்லை நாலயலாரும் அறிந்தொழிந்தார், பாணியாதென்னை மருந்து செய்து பண்டு பண்டாக்க வுறுதிராகில்" என்றருளிச்செய்கிறாள். இங்கே "பண்டு பண்டாக்க" என்று பண்டு என்பதை இரண்டு தடவை பிரயோகம் செய்திருப்பதில் அடங்கியுள்ள விசேஷார்த்தம் மிக அற்புதமானது. இப்பாசுரம் விரஹ தசையில் சொல்லுவது. இந்த விரஹாவஸ்தை நீங்கி ஸம்ச்லேஷ தசை உண்டாகவேணும் என்பதுதானே ஆண்டாளுடைய நோக்கம். அதற்கீடாக "என்னைப் பண்டாக்க" என்றால் போராதோ? 'பண்டு பண்டாக்க' என்று இரட்டிக்க வேணுமோ?



திருமங்கை யாழ்வாரும் இங்ஙனே அருளிச்செய்யக் காணாநின்றோம். "கெண்டை யொண்கணும் துயிலும், என்னிறம் பண்டு பண்டுபோலொக்கும். மிக்க சீர்த் தொண்ட ரிட்ட பூந்துளவின் வாசமே, வண்டு கொண்டுவந்து ஊதுமாகிலே" என்பது பெரிய திருமொழிப் பாசுரம். அதுவும் விரஹதசையிற் பேசுவதேயாம். அதிலும் பண்டு பண்டு போவென்று இரட்டித்திருப்பதில் ஒருவிசேஷார்த்த மிருக்க வேண்டும்; கேண்மின்.

இப்பாசுரம் விச்லேஷ தசையில்சொல்லுவதா யிருந்தாலும் பண்டையதான ஸம்ச்லேஷ தசை வேண்டுமென்று அபேக்ஷிக்கிற தன்று. இப்போதைய அவஸ்தைக்கு முற்பட்டதான யாதொரு அவஸ்தையுண்டோ, அதற்கும் முற்பட்டதான யாதொரு அவஸ்தையுண்டோ, அவ்வவஸ்தையில் நான் எப்படி யிருந்தேனோ அப்படி என்னை இப்போதுஆக்க விரும்புவீர்களாகில்—என்று விவக்ஷித்து ஆண்டாள் "என்னைப் பண்டு பண்டாக்க வுறுதிராகில்" என்கிறாள். திருமங்கையாழ்வாருடைய விவக்ஷிதமும் இங்ஙனேயாம்.

இதனை விவரிப்போம்; இப்போதைய அவஸ்தையாவது விரஹாவஸ்தை. இதற்கு முந்திய அவஸ்தையாவது ஸம்ச்லேஷாவஸ்தை. அதற்கும் முந்திய அவஸ்தை யாவது—பகவத் விஷயவாஸனையே தெரியாமல் அந்யபரமாகப் போது போக்கின காலம்; உண்டியே உடையே உகந்திருந்த காலமென்று கொள்க. அப்போது சரீரம் வாடாமல் வதங்காமல் மாமை குன்றாமல் பசுகு பசுகென்றிருக்குமன்றோ. நிர்விசாரமாக உண்டுடுத் துத் திரியுங்காலத்திலே மேனி நித்யபுஷ்டமாயிருக்குமென்பதில் ஸந்தேஹமில்லையே. பகவத் விஷயத்தில் வாஸனை பண்ணிப் போந்தது முதலாக "ஸம்யோகா விப்ரயோ காந்தா:" என்றபடி க்ஷணகால ஸம்ச்லேஷமும் சிரகால விச்லேஷமுமாய் வ்யஸநமே அதிகமாகச் செல்லுகையாலே இப்போதைய விரஹாவஸ்தைக்கு முந்தியதான ஸம்ச்லே ஷாவஸ்தையிலுள்ள நிறத்தை விரும்புவதில் ரஸமில்லையே. இவ்விடத்தில் "அன்னை முனிவதும் அன்றிலின் குரலீர்வதும், மன்னு மறிகடலார்ப்பதும் வளை சோர்வதும், பொன்னங்கலையல்குல் அன்னமென்னடைப் பூங்குழல், பின்னைமணாளர் திறத்தமாயின பின்னையே" என்கிற திருமங்கையாழ்வார் பாசுரத்தைச் சேர்த்துக்கொள்ளத் தகும்.

"என்றைக்கு நான் பகவத் விஷயத்தில் ஈடுபடத் தொடங்கினேனோ அன்று முதலாக வேதான் எனக்கு அனர்த்த பரம்பரைகள்" என்பது மேற்குறித்த பாசுரத்தின் கருத்தாதலால் ஸம்ச்லேஷ தசையோடு விச்லேஷ தசையோடு வாசியற இரண்டுமே மெலிவுக்கு உறுப்பு என்பது கொள்கை.

ஆகவே, ஸம்ச்லேஷதசைக்கும் மூந்தியதான ஸம்ஸாரி தசையாகிற அந்ய பரத்வா வஸ்தையில் நிறத்தை விரும்புவது யுக்தமாதலால் அதனை விரும்புகின்றமை தோன்ற "பண்டு பண்டு" என்று இரட்டிக்கிறபடி.

இவ்வளவு அர்த்தங்களையும் இரண்டு வாக்கியத்திலே அடக்கி யருளிச்செய்தார் பெரியவாச்சான் பிள்ளை :—

"ஸம்ச்லேஷிப்பதற்கு முன்புத்தைப் பூர்த்தி எனக்கு உண்டாகப் பார்த்திகோளாகில்;— கலக்கப் புக்கவன்று தொடங்கி மெலிவுக்கேயிறே க்ருஷி பண்ணிற்று" என்று.

"என்னிறம் பண்டு பண்டுபோலொக்கும்" என்கிற பெரிய திருமொழிப் பாசுரத்தின் வியாக்கியானத்திலே சிறிது தெளியக் காட்டியருளினர். அவ்விடத்து ஸ்ரீஸூக்தி வருமாறு ;—

"அவன் வாய்புலற்றும் நிறம் அறப் பண்டு போலேயாம். கலக்கையாகிறது பிரிவுக்கு அங்குரமிறே. கலந்து பிரிந்து லாபாலாபங்களறியாதே பூர்ணையாயிருந்தபோதை நிறம்போலேயாம்." 7

## 8. நம்மாழ்வார் தூது

நம்மாழ்வார் திருவிருத்தத்தில் முதன்முதலாக அன்னப் பறவைகளை எம்பெருமான் பக்கலில் தூது செல்ல விடுகின்றார். இது பறவையை விட்டபடியன்று; ஆசாரியர்களையே எம்பெருமான் பக்கலில் தம் நிலைமையை அறிவிக்கும்படி வேண்டியவாறு. "தேசிகாஸ் தத்ர தூதா:" என்கிறார் தேசிகனும். ஹம்ஸத்தினிடத்துள்ள குணங்கள் யாவும் ஆசார்யனிடத்திலே அநுஸந்திக்கத்தக்கவையாகும். சில குணங்கள் இங்கே நிரூபிக்கப்படுகின்றன. விவேக கௌசலம் என்பது ஹம்ஸத்திற்கும் ஆசாரியர்க்கும் பொதுவாகவுள்ளதொரு குணம். "அநந்தபாரம் பஹு வேதிதவ்யம் அல்பச் ச காலோ பஹவச் ச விக்நா:, யத் ஸாரபூதம் தத் உபாஸிதவ்யம் ஹம்ஸோ யதா க்ஷீரமிவாம்புமிச்ரம்" என்று நூல்கள் கூறுகின்றன. நீரையும் பாலையும் கலந்து வைத்தால் அன்னமானது அஸாரமான நீரைத் தள்ளி ஸாரமான பாலைப் பிரித்தெடுக்க வல்லமையுடையது. அதுபோல் ஆசாரியர்கள் ஸாராஸாரகதம்பிதமான நூற்களில் அஸாரப் பொருள்களை யொதுக்கித் தள்ளி, ஸாரப்பொருள்களையே எடுத்து உபஜீவிக்க வல்லவர்கள்.

எம்பெருமான் வேதங்களை மீட்டுக்கொணர்ந்து உபதேசித்தருளுங்கால் ஹம்ஸ ரூபத்தைப் பரிக்ரஹித்து உபதேசித்ததாக இதிஹாஸ புராணங்கள் கூறுகின்றன. "அன்னமதாயிருந்து அங்கறநூலுரைத்த" என்றும், "பின்னும் வானவர்க்கும் முனிவர்க்கும் நல்கிப் பிறங்கிருள் நிறங்கெட வொருநாள், அன்னமாயன்றங்கு அருமறை பயந்தான்" என்றும் ஆழ்வார்களும் அருளிச்செய்வர்கள். ஆக, சாஸ்த்ர ப்ரதானம் பண்ணுவதற்கு ஹம்ஸரூபம் வாய்த்தாற்போலே ச்ரோதாக்களைக் குறித்து சாஸ்த்ரங்களை உபதேசிக்க ஆசார்ய ரூபம் வாய்த்தபடி.

"न बध्नाति रतिं हंसः कदाचित्कर्दमाम्भसि—ந பத்நாதி ரதிம் ஹம்ஸ: கதாசித் கர்த்தமாம்பஸி" என்ற வசனத்தில் ஹம்ஸங்களுக்குச் சேற்று நிலங்களில் கால் பொருந்தாதென்று சொல்லப்படுகிறது. அப்படியே "பிறப்பாம் பொல்லாவருவினை மாய—வன்சேற்றள்ளல்பொய்ந் நிலத்தே அழுந்தார்" (திருவிருத்தம்-100) என்கிறபடியே ஆசாரியர்கள் ஸம்ஸாரச்சேற்று நிலத்திலே சிறிதும் பொருந்தாதிருப்பர்கள்.

"பெடையோடன்னம் பெய்வளையார்தம் பின் சென்று" (பெரிய திருமொழி) என்று ஹம்ஸமானது ஸ்த்ரீகளின் நடையழகைக் கண்டு தானும் அப்படி நடக்கைக்

காகப் பின் செல்லுமென்று சொல்லப்படுகிறது. அதுபோல, ஆசாரியர்களும் *அன்ன நடைய வணங்கான பிராட்டியினுடைய நடையைப் பின்செல்லுவர்களாம். அதாவதென்னென்னில்; பிராட்டியின் நடையாவது அவளுடைய நடத்தை; சேதநர்களைக் குறித்து எம்பெருமான் திறத்தில் புருஷகாரம் செய்வதே பிராட்டியின் ப்ரதான க்ருத்யமாகும். அதை ஆசார்யர் அநுகரிக்கையாவது, தாங்களும் அப்படி புருஷகார க்ருத்யத்திலே ஊன்றியிருக்கையாகும், பிராட்டி புருஷகாரம் செய்யாவிடில் எம்பெருமான் முக்தி ஸாம்ராஜ்ய மளிக்கமாட்டாதது போலவே ஆசாரியர்கள் புருஷகாரம் செய்யாவிடினும் அதனை அளிக்கமாட்டான் என்பதை "தத்தே ரங்கீ நிஜமபி பதம் தேசிகாதேசகாங்க்ஷீ" என்கிற ந்யாஸதிலக ஸூக்தியினால் தேசிகன் வெளியிட்டருளினர்.

*"அன்னமென் கமலத்தணி மலர்ப்பீடத்து அலைபுனலிலைக்குடைநீழல்......... வீற்றிருக்கும்" (பெரிய திருமொழி) என்று, ஹம்ஸமானது மேலேயெழுந்த தாமரையிலையைக் குடையாகக்கொண்டு வீற்றிருக்கும் என்று சொல்லப்பட்டது. "அக்கமலத்திலைபோலும் திருமேனியடிகள்" என்கிற திருவாய்மொழியினால் எம்பெருமானுடைய திருமேனி தாமரையிலையாகச் சொல்லப்படுவதால், பத்ம பத்ர நிபச்யாமலமான அந்தத் திருமேனியை ஆசாரியர்கள் தங்களுக்கு ஸம்ஸார துக்க ஆதபம் தட்டாதபடி ஒதுங்க நிழலாகவுடையரா யிருப்பர்.

"அன்னம்—செங்நெலொண்கவரி யசைய வீற்றிருக்கும்" (பெரிய திருமொழி) என்று, பக்வபலமான செங்நெலின் அசைவைக் கவரியாக (சாமரமாக)க் கொண்டு வீற்றிருக்கு மென்னப்பட்டது. *அஹமந்ந மஹமந்ந மஹமந்நம்* என்னும்படி பரிபக்வமான ஞானத்தை யுடையரான சிஷ்யர்களைச் செந்நெல் கதிர்களாகக் கொள்ளக்கடவது; அவர்கள் கைங்கர்ய வ்ருத்திகளை [சாமரை வீசுதல் முதலியவைகளை]ச் செய்யுமாறு ஆசாரியர்கள் எழுந்தருளியிருக்கும்படியைச் சொல்லுகிறது.

"சங்கமவை முரலச் செங்கமல மலரையேறி அன்னமலிபெடையோடுமமரும்" (பெரிய திருமொழி) என்று, ஹம்ஸமானது சங்குகளின் முழக்கத்தை இனிதாகக் கேட்டுக் கொண்டு இருக்குமென்னப்பட்டது. சுத்த ஸ்வபாவர்களான சிஷ்யர்களைச் சங்கு என்கிறது. அவர்கள் செய்யும் ஸ்துதி கோஷங்களைக் கேட்டுக்கொண்டு ஆசாரியர்கள் எழுந்தருளியிருக்கும்படியைச் சொன்னவாறு.

"வரி வண்டிசை பாட அன்னம் பெடையோடுடன் நாடும்" (பெரிய திருமொழி) என்று ஹம்ஸமானது வண்டுகளின் மிடற்றோசையைப் பாட்டாகக் கொண்டிருக்கு மென்னப்பட்டது. வண்டுகள் தேனையே போக்யமாகக் கொண்டிருப்பது போல* உளங்கனிந்திருக்குமடியவர் தங்களுள்ளத்து ளூறிய தேனுகிய பகவத் விஷயத்தையே போக்யமாகக் கொண்டிருக்கும் பாகவதர்கள் இசையை [கீர்த்தியை]ப் பாடும்படி யெழுந்தருளியிருப்பர்கள் ஆசாரியர்கள்.

இங்ஙனே மற்றும் பல பொருத்தங்களும் காணத்தக்கன. ... ... 8

# 9. ஸ்ரீராமாயணத்தில் ஓர் அபூர்வ விஷயம்

ஸ்ரீமத் வால்மீகி ராமாயணத்தில் யுத்தகாண்டத்தின் தொடக்கத்தில் ஒரு முக்கியமான விஷயம் விடுபட்டுப் போயிருப்பதாகச் சில பெரியார் கருதுகின்றார்கள். அதாவது, சுந்தரகாண்டத்தில்- அநுமான் இலங்கையிற் புகுந்து அந்நகரின் பல பகுதிகளையும் இடித்துக் கொளுத்திப் பாழாக்கி விட்டமை விரிவாகக் கூறப்பட்டிருக்கின்றது. இலங்கையின் அமைப்பு முழுவதும் அநுமானால் மிகவும் சிதிலமாக்கப்பட்டொழிந்ததென்பதில் யாருக்கும் விவாதமிருக்க ப்ரஸக்தியில்லை.

பிறகு ஸ்ரீராமபிரான் இலங்கைக்கு எழுந்தருளிப் போர் புரிந்த காலத்து அங்கே என்ன இருந்தது? ஏற்கெனவே அநுமானுடைய வீரத்திற்கு இலக்காகிச் சுடுகாடாகி

யொழிந்த இலங்கையை ஸ்ரீராமபிரான் மறுபடியும் தான் சுடுகாடாக்கினன் என்பதில் பொருத்தமுமில்லை, அதிசயமுமில்லையே.

கம்பராமாயணத்தில் யுத்தகாண்டத்தில் இராவணன்மந்திரப்படலத்தின் முதலில் சில செய்யுட்கள் அமைந்திருக்குமாறு நோக்கத்தக்கது. அவற்றுள்,

(முதல் செய்யுள்)

பூவருமயனொடும் புகுந்து பொன்னகர், மூவகையுலகினும் அழகுமுற்றுற
ஏவினவியற்றினன் கணத்திலென்பரால், தேவருமருள்கொளத் தெய்வத்தச்சனே.

தெய்வத்தச்சன் [மயன், அல்லது விச்வகர்மா] அனுமனால் எரியுண்ட இடங்களைச் செப்பனிட்டு எல்லாவுலகத்திலுமுள்ள ஸகல நகரங்களிற் காட்டிலும் அந்த லங்காபுரி மிகவும் அழகு பெற்றுத் தோன்றுமாறு செய்தான் என்கிறது இச்செய்யுள்.

(அதற்கடுத்த செய்யுள்)

பொன்னினும் மணியினும் அமைந்த பொற்புடை, நன்னகர் நோக்கினன் நாகம் நோக்கினன்
முன்னையினழகுடைத் தென்று மொய்கழல், மன்னனுமுவந்து தன் முனிவு மாறினன்.

வீரக்கழலையணிந்த இராவணன் நவமணிகளுமழுத்தி இயற்றப்பெற்ற அழகுடைய தனது இலங்காபுரியைக் கண்டு வானுலகத்துள்ள நகரத்தையும் பார்த்து, அந்தத் தேவலோகத்து நகரத்திற் காட்டிலும் இப்போது தெய்வத்தச்சன் திருத்திய தனது நகரம் அழகாக இருந்ததோடு எரிப்பதற்கு முன்னேயிருந்ததிற் காட்டிலும் அதிசயித்த அழகு பெற்றுள்ள தென்றுகண்டு, எரியுண்டதும் நல்லதாகவேயாயிற்று என்ற கருத்தினால் [illegible] தன் சீற்றம் மாறப்பெற்றான் என்பது இச்செய்யுளின் கருத்து.

இங்ஙனே தெய்வதச்சன் இலங்கையைத் திருத்தினதாகக் கதையிருந்தாலொழிய [illegible] இல்லாமையினால் இக்கதை மிக அவசியமேயாகும்; இது வால்மீகி ராமாயணத்தில் காணப்படவில்லை யென்பது ஒரு குறையே. இப்பொருளைக்கொண்ட ஒன்றிரண்டு ச்லோகங்கள் வால்மீகத்திலும் இருந்தனவென்றும் அவை அச்சுப்பதிப்பில் விடுபட்டுப் போயினவென்றும் சில ஓலை. ஸ்ரீகோசங்களில் இப்போது கிடைக்கின்றனவென்றும் ஒரு பெரியார் கூறுகின்றார் என்று நமது காதில் விழுகிறது.

*ஹாரோபி நார்ப்பிதஃ கண்டே* என்கிற ச்லோகம் பெருமாளுடைய திருவாக்காக ஸ்ரீவசநபூஷணத்திலும் அதன் வியாக்கியானத்திலும் உதாஹரிக்கப்பட்டிருந்தும் அது ஸ்ரீராமாயணத்தில் கிடைக்கவில்லை. விடுபட்டுப் போயிற்றென்றே கொள்ளக்கடவது. அந்த ச்லோகமும் ஓலையேட்டில் கிடைத்திருப்பதாக வெளிவந்திருக்கிறது. 9

# 10. ஒரு நல்வார்த்தை விமர்சம்

"ஸம்ஸாரபீதியால் ஸமர்ப்பிக்கையும் ஸ்வரூபயாதாத்ம்ய ஜ்ஞானத்தால்
அநுசயிக்கையும் இரண்டும் யாவந்மோக்ஷம் அநுவர்த்திக்கக் கடவது."

என்பது நம்பிள்ளையின் ஒரு நல்வார்த்தை. இதுதன்னை ஸ்தோத்ரரத்ந வியாக்யானத்தில் பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்துள்ளார். இந்த நல்வார்த்தையின் நற்பொருளில் தெளிவின்றிக்கே சிலர் கலங்கி யெழுதியிருக்கும் வார்த்தைகளைக் கண்டு விவேகிகள் தெளிகைக்காக இதனை நன்கு விவரிக்கின்றோமிங்கு.

ஆளவந்தார் தமது ஸ்தோத்ரத்தில் "வபுராதிஷு யோபி கோபி வா" என்கிற ஐம்பத்திரண்டாவது ச்லோகத்தால் முதலில் ஆத்ம ஸமர்ப்பணம் பண்ணினார். அதற்கு அடுத்தான "மம நாத யதஸ்தி" என்கிற ச்லோகத்தினால் அந்த ஆத்ம ஸமர்ப்பணத்தில் அநுதாபம் காட்டினார். இவ்விரண்டு விஷயங்களையும் நோக்கும்போது, திருவாய்மொழியில் "எனதாவி தந்தொழிந்தேன் இனி மீள்வதென்பதுண்டே" என்று முந்

றாற அருளிச்செய்து, உடனே ஆராய்ந்து தெளிந்து "எனதாவி யார் யானார் தந்த நீ கொண்டாக்கினையே" என்றருளிச் செய்தது நினைவுக்கு வரும்.

இரண்டு ச்லோகங்களினுடையவும் தாற்பரியத்தை நன்கு விவரிப்போம்.

ஆத்மாவைப் பற்றிப் பலர் பலவகையாகச் சொல்லுவர்கள். தேஹமே ஆத்மா என்பர் சிலர். மற்றுஞ்சிலர் இந்திரியமே ஆத்மா என்பர்; வேறே சிலர் அந்தஃகரணமே ஆத்மா என்பர். ப்ராணமே ஆத்மா என்பர் சிலர். புத்தியே ஆத்மா என்பர் மற்றையோர். இவையொன்றுமல்ல; இவற்றிற் காட்டில் அஹமர்த்தமான ஆத்மா வேறுபட்ட வஸ்து என்பதை இவ்வாளவந்தார் தாம் ஸித்தித்ரயமென்னும் க்ரந்தத்திலே நிலை நாட்டியிருந்தும், இங்கே அந்த விசாரம் வைத்துக்கொள்ளாமல் ஆத்மா என்பது தேஹம் முதலானவற்றுள் எதுவாக இருந்தாலுமிருக்கட்டும் என்று சரக்கறச் சொல்லுகிறார் "வபுராதிஷு யோபிகோபி வா அஸாநி" என்று.

இப்படிச் சொல்லுகிறது எதற்காகவென்னில்; ஆத்மாவுக்கு சேஷத்வ ஸ்தாபனமொன்றே முக்கியம் என்கிற தற்கால நோக்கத்தை வெளியிடுவதற்கேயாம். வேத புருஷனும் "யோஹமஸ்மி ஸஸந் யஜே" என்று ஓதிவைத்தான். இந்த வேத வாக்கியத்தின் பொருளாவது—நான் எவனாகிலுமாகிறேன்; தேஹமாகவோ இந்திரியமாகவோ மற்றும் ஏதேனுமாகவோ அஹமர்த்தமாகவோ, உண்மையில் எவனாக இருக்கிறேனோ அவனாகவே யிருந்து கொண்டு எம்பெருமானை ஆராதிக்கிறேன்—என்பதாம். அவ்வண்ணமாகவே இவ்வாளவந்தாரும் அருளிச் செய்கிறபடி.

இதற்குமேல் "குணதோஸாநி யதாததாவிதஃ" என்கிறார். ஆத்மா அணுவா? ஸர்வவ்யாபியா? நித்யவஸ்துவா, நச்வரவஸ்துவா? ஏகரூபனா, பரிணாமியா? ஜ்ஞாமியா? அஜ்ஞனா? என்றிப்படி ஆத்மகுணங்களில் பலவகை விப்ரதிபத்திகளுண்டு. இது தன்னிலும் இப்போது ஒரு நிஷ்கர்ஷம் செய்யப் புகுகின்றிலேன் என்கிறாராளவந்தார். எம்பெருமானே! உனது திருவுள்ளத்தால் இவ்வாத்ம வஸ்து எப்படிப்பட்ட ஸ்வரூப ஸ்வபாவங்களை யுடையதாகக் கொள்ளப்படுகிறதோ, அப்படிப்பட்ட ஸ்வரூப ஸ்வபாவ விசிஷ்டமாகவேயுள்ள இவ்வஸ்து உன் திருவடிகளில் அடியேனால் ஸமர்ப்பிக்கப்பட்டதாயிற்றுகாண்—என்கிறார் 'வபுராதிஷு' இத்யாதி ச்லோகத்தினால்.

இங்ஙனே "அஹமத்யைவ மயா ஸமர்ப்பிதஃ" என்று தாம் சொன்னதை அடுத்த க்ஷணத்தில் தாமே ஆராய்ந்தார்: ஐயையோ! என்ன சொன்னோம்! என்ன சொன்னோம்!" என்று நடுங்கி அதற்கு அநுதபிக்கின்றமை தோன்ற "மம நாத யதஸ்தி" இத்யாதி ச்லோகம் அடுத்தபடியாக அவதரிக்கின்றது.

"மயா அஹம் ஸமர்ப்பிதஃ" என்று சொன்னேனே, இப்படிச் சொல்வதற்கு எனக்கு என்ன அதிகாரமுள்ளது? நான் என்கிற ஒரு வஸ்துவும், என்னுடையது என்கிற ஒரு வஸ்துவும் ஸ்வதந்த்ரமாகவுண்டோ? "யானே நீ என்னுடைமையும் நீயே" என்றபடி எல்லாம் ஏற்கெனவே உன்னுடையதாகவே யிருக்கும்போது இந்த ஆத்ம வஸ்து உனக்கு இல்லாதது போலவும், இப்போது தான் என்னால் புதிதாக ஸமர்ப்பிக்கப்படுவது போலவும் பேசிவிட்டேனே பாவியேன்; ஸமர்ப்பிப்பதற்கு நானார்? ஸமர்ப்பிக்க என்னிடம் என்ன இருக்கிறது? அதிலும், உனக்கு நான் ஸமர்ப்பிக்க என்ன வுண்டு? இவ்விஷயங்களை ஆராயாமல்தானே அவிவேகியாய் "அஹமத்யைவ மயா ஸமர்ப்பிதஃ" என்று பிசகாகப் பேசிவிட்டேனே! என்று அநுதாபம் காட்டி அருளிச் செய்தாராயிற்று. கீழ் ச்லோகத்தில் ஆத்ம ஸமர்ப்பணம் பண்ணினதாகவும், அதைப் பற்றி இந்த ச்லோகத்தில் அநுதபித்ததாகவும் முடிந்தது. இங்ஙனே யாமளவில், அநுதாப யோக்யங்களான பாபங்களைப் போலே ஆத்ம ஸமர்ப்பணமும் ஒரு பாபமாக வன்றோ தேறுகிறது. அது செய்யக்கூடாத காரியம் என்று ஏற்பட்டுவிடாதா? என்று கேள்வி பிறக்கும். இதற்கு ஸமாதானமாகப் பெரியவாச்சான் பிள்ளை அருளிச் செய்வது பாரீர்:—

"[தேஹம் நு ஸமர்ப்பயாமி] இத்தையுடைய உனக்கு எத்தை ஸமர்ப்பிப்பேன்? ஸமர்ப்பணீய மேது? ஸமர்ப்பகர் ஆர்? ஸ்மர்ப்பணீயமாகைக்கு ஸ்வாம்யமில்லை; ஸமர்ப்பிக்கைக்கு ஸ்வாதந்த்ரியமில்லை. ஸம்ஸாரபீதியால் ஸமர்ப்பிக்கையும், ஸ்வரூப யாதாத்ம்ய ஜ்ஞானத்தால் அநுசயிக்கையுமாக இரண்டும் யாவந் மோக்ஷம் அநுவர்த்திக்கக்கடவது." என்று.

ஸஹ்ருதய ஹ்ருதயங்கமமான இந்த ஸ்ரீஸூக்தியின் ஆழ்ந்த அழகிய கருத்தை குருமுகமாகக் கேட்டறியகில்லாதார் எதையோ எழுதி வைத்தார்கள். ஆத்ம ஸமர்ப்பணத்தை மறுப்பதே இங்கு ஆசார்யர்களின் திருவுள்ளமென்று ப்ரமித்துப் போந்தார்கள்.

ஆத்மஸமர்ப்பணம் பண்ணுகையும், அது பண்ணினதற்காகப் பிறகு அநுதாபம் காட்டுகையும் இரண்டும் சாஸ்த்ரார்த்தம் என்று அருளிச் செய்திருப்பதை ஆய்ந்துணர வேணும்.

கீழ்ப் பண்ணின் ஆத்ம ஸமர்ப்பணத்திற்கு இங்கே அனுதாபப் படுவதாக வியாக்யானம் செய்யத்தகுமோ? தப்பான காரியத்திற்கன்றோ அநுதபிக்க வேண்டுவது—என்றே இன்னமும் பலருடைய நெஞ்சு தளும்பியேயிருக்கும். கேண்மின்:—

இதே ஸ்தோத்திரத்தில் இருபத்திரண்டாவது ச்லோகம் முதல் நாற்பத்தாறும் ச்லோகமளவும் பதினைந்து ச்லோகங்களாலே எம்பெருமானுடைய நித்ய கைங்கர்யத்தைப் பரம புருஷார்த்தமாகப் பிரார்த்தித்த இவர்தாமே அடுத்த (47) "திகசுசிமவிநீதம்" என்கிற ச்லோகத்தால், கீழ் தாம் அப்படி பிரார்த்தித்ததற்கு மஹத்தான அநுதாபத்தை ஆவிஷ்கரித்திருக்கின்றாரென்பது அபரோக்ஷம். அஃது என்னவென்று ஆராய்ந்தீர்களோ? கைங்கர்ய ப்ரார்த்தனை கூடும் என்று நிஷ்கர்ஷிக்கிறீர்களா? கூடாது என்று நிஷ்கர்ஷிக்கிறீர்களா?

"ஒட்டுரைத் திவ்வுலகுன்னைப் புகழ்வெல்லாம் பெரும்பாலும், பட்டுரையாய்ப் புற்கென்றே காட்டுமால் பரஞ்சோதி!" (திருவாய்மொழி 3—1—2) என்று, பரஞ்சோதியான எம்பெருமானுக்கு உலகத்திலுள்ள க்ஷணபங்குரமான தாமரை, மேகம், காயாம்பூ முதலானவற்றை ஒப்பாகச் சொல்லுதல் இழிவு என்கிறாராழ்வார். இஃது உண்மையா அன்றோ? உண்மையாகில் "கொண்டல்வண்ணா!—கடல்வண்ணா!—காயாவண்ணா" என்று பலகாலும் ஆழ்வார்கள் கதறுகின்றார்களே, இது என்ன?

பெரிய திருவந்தாதியில் "புகழ்வோம் பழிப்போம் புகழோம் பழியோம்" என்று எம்பெருமானை நாம் புகழ்வதானது பழிப்பதேயாம் என்று சொல்லிக் கொண்டே பலவாறாகப் புகழ்கின்றாரே, இது என்ன?

கூரத்தாழ்வான் அதிமாநுஷஸ்தவத்தில் "யா கம்ஸமுக்ய ந்ருப கீட நிபர்ஹணேத்தா ஸா நிர்ஜித த்ரிஜகதஸ் தவ நைவ கீர்த்தி:" என்று—கம்ஸன் முதலிய அரசர்களாகிற புழுக்களைத் தொலைத்தானென்று சொல்லி எம்பெருமானை ஏத்துவதானது மூவுலகத்தையும் வென்றிருக்கிற அவனுக்குப் புகழ்ச்சியேயன்று என்று சொல்லி வைத்து, அப்படிப்பட்ட சரித்திரங்களையே சொல்லிப் புகழ்கின்றாரே, இஃது என்ன? இவை ஒன்றுக்கொன்று அபவாதமாகுமோ? இவையெல்லாம் பரஸ்பர விருத்தம் போல் தோற்றினாலும் உண்மையில் விருத்தமன்றே. இரண்டு படிகளும் சொல்லித் தீரவேண்டியவையத்தனையன்றோ. இவைபோலவே, ஆத்ம ஸமர்ப்பணம் பண்ணுகையும் பின்பு அதற்கு அநுதபிப்பதாகப் பேசுகையும் ஆகிற இரண்டும் சாஸ்த்ரார்த்தம் என்று அறுதியிட்டபின் இதில் பர்யநுயோக ப்ரஸக்தியுண்டோ?

இந்த ஆளவந்தார் ஏற்கெனவே சிறந்த விவேகியாகையாலே, கீழ் ச்லோகம் சொல்லும்போது அவிவேகியாயிருந்து, உடனே விவேகம் பெற்று இந்த ச்லோகம் சொல்லுகிறாரென்பது பொருந்தாது என்று க்ஷேபிப்பதும் தகாது. க்ரமேண சாஸ்த்

ரார்த்தங்களை வெளியிட வேண்டுமிடத்து இங்ஙனே சொல்லுவது க்ரந்த சைலி. ப்ரபுந்நீ: என்று ஆளவந்தார் சொல்லிவைத்த சொல்லையன்றிப் பெரியவாச்சான் பிள்ளை புகுத்தின சொல் அன்றே. அதற்கு யாராலும் வேறுபொருள் சொல்லப் போகாதே.

இன்பமிகு மாருயிரமருளிச் செய்த திருக் குருகைப்பிரான் பிள்ளானும் *என தாவியுள் கலந்த பாசுர வியாக்யானத்தில்—"இப்படி எம்பெருமானோடு கலந்த கலவி யாலுள்ள நிரவதிக ப்ரீதியாலே அறிவழிந்து இவ்வாத்மா தம்முடையதன்றென்று நிரூபிக்க மாட்டாராய் அவன் தம்மோடு கலந்த இப்பெரு நல்லுதவிக்குக் கைம்மாறாகத் தம்முடைய ஆத்மாவை அவனுக்கு மீளா வடிமையாகக் கொடுத்து, பின்னையும் நம்முடைய ஸ்வரூபத்தை உள்ளபடி விவேகித்து" இத்யாதி அருளிச் செய்தார். குரு குலத்திலே குனிந்து கேட்கப் பெற்ற பரம பாக்யசாலிகள் பேசிற்றே பேசு மோக 10
கண்டராகவேயிருப்பர்கள். ... ... ... ...

## 11. ஸ்ரீராமஸீதாவயோ விமர்சம்

பெருமாளுக்கும் பிராட்டிக்கும் திருக்கல்யாணம் நடக்கும்போது பிராயம் எத்தனை? வநவாஸப் புறப்பாடு ஆகும்போது பிராயம் எத்தனை? என்று இங்ஙனே சில விசாரங்கள் பெரியோர்கள் செய்வதுண்டு. ஸ்ரீராமாயண ச்லோகங்களைக் கொண்டு நிஷ்கர்ஷிக்குமளவில் சில ச்லோகங்கள் ஒன்றோடொன்று முரண்படுவனபோல் காணுகின்றமையால் எப்படி நிர்வஹிப்பது? என்று கலங்கிப் பேசுகின்றார்கள் சிலர். இவ்விஷயமாக ஏற்கெனவே பெரியவாச்சான்பிள்ளைபோல்வார் சில விமர்சங்கள் வெளியிட்டுமிருக்கின்றார்கள். ஈண்டு ஸங்க்ரஹமாக நிரூபிக்கின்றோம்.

ராவணன் கபட ஸந்ந்யாஸி வேஷத்துடன் பிராட்டியிடம் வந்தபோது அவனை உண்மையான யதியாகவே நினைத்து ஆதரவுடன் வார்த்தையாடுகின்ற ஸீதாபிராட்டி,

[மம பர்த்தா மஹாதேஜா: வயஸா பஞ்சவிம்சக:,
அஷ்டாதச ஹி வர்ஷாணி மம ஜந்மநி கண்யதே.]

என்று கூறினதாக ஸ்ரீராமாயணத்திலுள்ளது. இதனால், தான் அயோத்தியில் நின்று காட்டுக்குப் புறப்படும்போது தனது கணவனான ஸ்ரீராமபிரானுக்கு இருபத்தைந்தாவது பிராயமென்றும் தனக்குப் பதினெட்டு பிராயமென்றும் தெரிவிக்கப்படுகின்றது.

மிதிலையில் கல்யாணமான பிறகு அயோத்தி வந்து சேர்ந்து பன்னிரண்டு ஸம்வத்ஸரம் ஸகல திவ்ய போகங்களையும் அநுபவித்துக்கொண்டு வாழ்ந்ததாகவும் அதற்குப் பிறகு வநவாஸ ஸம்பவம் விளைந்ததாகவும் அப்பிராட்டி தானே கூறுகின்றாள்.

[ஸமா த்வாதச தத்ராஹம் ராகவஸ்ய நிவேசநே,
புஞ்ஜாநா அமாநுஷாந் போகாந் ஸர்வகாமஸம்ருத்திநீ.]

என்கிற ச்லோகத்தினால் இது விசதம். இந்த ச்லோகத்தின் முன்னடிகள் "உஷித்வா த்வாதச ஸமா இக்ஷ்வாகூணாம் நிவேசநே" என்று பாடபேதத்துடனும் காண்பதுண்டு. கருத்து ஒன்றே. த்வாதச ஸமா:—என்றது பன்னிரண்டாண்டு என்றபடி. த்விதீயா பஹுவசநாந்தம்.

ஆக, கீழே உதாஹரித்துக் காட்டிய இரண்டு ச்லோகங்களையும் நோக்குமிடத்து விவாஹ காலத்தில் ஸ்ரீராமபிரானுக்குப் பதின்மூன்று பிராயமென்றும், ஸீதாபிராட்டிக்கு ஆறு பிராயமென்றும் ஏற்படுகின்றது. இது பொருந்துமா? என்று பார்க்க வேணும்.

[பதிஸம்யோகஸுலபம் வயோ த்ருஷ்ட்வா ச மே பிதா,
சிந்தார்ணவகத: பாரம் நாஸஸாதாப்லவோ யதா.]

என்கிற பிராட்டி வசனத்தைப் பார்க்கவேணும். தனக்கு பர்த்தாவோடு சேரவேண்டிய பிராயம் ப்ராப்தமான பின்பும் தகுந்த பர்த்தா கிடைக்காததனால் தந்தையான ஜநக சக்ரவர்த்தி மிகவும் விசாரக்கடலில் ஆழ்ந்துவிட்டார் என்பதாக இந்த ச்லோகத்தில் கூறப்பட்டிருக்கின்றது. கால பேதங்கள் எப்படியிருந்தாலும் ஆறுவது வயதை பதி ஸம்யோக ஸுலபமான வயதென்று சொல்லுவது உசிதமாகத் தோன்றவில்லை. சாஸ்த்ர ரீதியாகக் கந்யாத்வமும் அப்போது ப்ராப்தமாக வழியில்லை. கந்யகாதானம் செய்வதற்கும் ஆறுவது வயது தகுதியுடையதன்று. தந்தை மிகவும் சிந்தைப்படக் கூடிய வயது பத்து பன்னிரண்டுக்கு இடைப்பட்டதாக இருக்கவேண்டும் என்று இவ நிருபகர்கள் கருதுகின்றார்கள்.

ராவணனிடம் ஸீதாதேவி கூறின வார்த்தையை இப்போது ஆராய்ந்து பார்ப்போம். "மம பர்த்தா மஹாதேஜா: வயஸா பஞ்ச விம்சக:" என்று ஸ்ரீராமபிரானுடைய வயதைப்பற்றிச் சொல்லிவிட்டு, மேலே தன்னுடைய வயதைச் சொல்லும்போது "மம ஜந்மநி கண்யதே" என்கிறாள். இங்ஙனே சொல்வாசியிருப்பதைக்கொண்டு ஆழ்ந்து ஆராயவேண்டும். ஸீதாபிராட்டி அயோநிஜை என்பதும், ஜநக சக்ரவர்த்திக்கு இவள் அத்ருஷ்டவசாத் அகப்பட்ட குழந்தை என்பதும் ஸுப்ரஸித்தம். ஆதலால் ஜநக சக்ரவர்த்திக்குப் பிராட்டி கிடைக்கும்போதே நாலைந்து அல்லது ஐந்தாறு பிராயம் கடந்திருக்க வேண்டுமென்று நன்கு ஊஹிக்க இடமுள்ளது. ஸஹஜ ஜநநம் இல்லாத அல்லது தெரியாத சிசுவுக்கு அகப்படும் காலமே ஜநநகாலமென்று நினைக்க வேண்டும். ஆகையால் ஜநக சக்ரவர்த்திக்கு ஸீதாதேவி தான் கிடைத்த முஹூர்த்தம் முதல் கணக்குப் பண்ணி "அஷ்டாதச ஹி வர்ஷாணி மம ஜந்மநி கண்யதே" என்கிறாளென்று கொள்வதில் அநுபபத்தி யொன்றுமிராது. ஆனதுபற்றியே ஸ்ரீராமபிரானைப் பற்றிச் சொன்னவிடத்தில் (வயஸா) என்றதுபோல் தன்னைப் பற்றிச் சொன்னவிடத்தில் கூறாமல், மம ஜந்மநி கண்யதே என்று சப்த ப்ரயோகம் பண்ணினாள். வயஸா என்கிற சொல்லை உபயோகப்படுத்தியிருந்தால் அப்போது வேறுவகையாகவே சொல்லப்பட்டிருக்கும். ... ... ... ... 11

## 12. விபீஷண சரணாகதி விசேஷங்கள்

ஸ்ரீராமாயணத்தில் விபீஷண சரணாகதி யென்பது ஒரு சிறந்த ப்ரகரணம். விபீஷணன் ராவணனுக்குப் பலவாறு நன்மைகளை உபதேசித்தும் அவன் கேளாமல் திரஸ்கரித்ததனால் நான்கு அன்பர்களோடுகூட ஆகாயத்திற் கிளம்பி ஸ்ரீராமபிரான் வாநர முதலிகளோடுகூட எழுந்தருளியிருக்குமிடத்திற்கு நேராக வந்து வானரவீரர்களை நோக்கி 'அடியேனை நீங்கள் இராமபிரானது திருவடிகளுக்கு ஆளாக்கவேணும்' என்று பிரார்த்திக்கையில் அந்த வானரவீரர்கள் அவனிடத்தில் மிக்க அதிசங்கை கொண்டு, ராமகோஷ்டிக்கு அவனால் மஹத்தான அபாயம் விளையுமென்றெண்ணி அவனைச் சேர்த்துக் கொள்ளவே கூடாதென்று இராமபிரானிடத்தில் பிரபலமாக ஆக்ஷேபங்கள் செய்ததாகவும், சற்றுப்போது விசாரம் நடந்து, விபீஷணனைச் சேர்த்துக் கொள்ளவே போகிறேன் என்று இராமபிரான் திருவாய்மலர்ந்தருளி அப்படியே அவனைச் சேர்த்துக் கொண்டதாகவும் வரலாறு.

இவ்விதிஹாஸத்தில் நாம் உய்த்துணரவேண்டிய நுட்பங்கள் பலவுண்டு. அவற்றில் சிலவற்றை இப்போது எடுத்துக் காட்டுதும்.

விபீஷணாழ்வான் வந்து புகும்போது "நிவேதயத மாம் க்ஷிப்ரம் விபீஷணமுபஸ்திதம், ஸர்வலோக சரண்யாய ராகவாய மஹாத்மநே." என்று வானர முதலிகளை நோக்கி முறையிடுகின்றான். பெருமாளை ஸர்வலோக சரண்யரென்று விபீஷணன் ஸந்தேஹலேசமுமின்றித் தெரிந்து கொண்டிருக்கிறான். இன்னார் இனையாரென்கிற வாசியின்றிக்கே எப்படிப்பட்டவர்களையும் ரக்ஷ்யராகத் திருவுள்ளம்பற்றிக் காத்தருள்

பவர் பெருமான் என்னுமிடத்தை நன்றாகத் தெரிந்து கொண்டேயன்றோ விபீஷணன் 'ஸர்வலோக சரண்யாய' என்று ஓலமிடுகிறான். பெருமானுடைய உண்மையான ஸ்வபாவத்தை இங்ஙனே தெரிந்து கொண்டிருக்கும்போது விபீஷணன் நேர்கொடு நேரே பெருமாள் திருவடிவாரத்திலே வந்து விழுந்திருக்கலாமே. அப்போது எவ்விதமான ஆக்ஷேப ஸமாதானங்களுக்கும் இடமிராதே. வானரவீரர்கள் பராக்ரமம் காட்டிப் பரிபவித்தவை யொன்றும் அவகாசம் பெற்றிராதே. பெருமாள் கட்டுங் காவலுமாக இருக்கிறாரல்லரே. "உத்பபாத கதாபாணி:" என்று உயரக் கிளம்பின விபீஷணன் நேராக ஸ்ரீராம பாதாரவிந்தங்களிலே வந்து விழுந்து 'அந்தோவடியேற்கு அருளாயன்னருளே' என்றால் விபீஷணனுடைய அபேக்ஷிதம் மிக எளிதாகத் தலைக்கட்டி யிராதோ? வானரவீரர்களை வேண்டுவானேன்? அவர்கள் தடியும் தாம்பு மெடுத்துத் தகர்க்கப் புகுவானேன்? ஒருவிதமான கஷ்டத்திற்கும் அவகாசமில்லாதபடி விபீஷணன் நேராக ஸ்ரீராம பாதங்களில் வந்து விழுந்து உய்ந்திருக்கலாமே; ஏன் அங்ஙனம் செய்யவில்லை? என்று ஆராய வேண்டுவது அவசியமல்லவா?

ஆராயுமளவில் தேறும்பொருள் என்னென்னில்; கேண்மின். நேராகப் பெருமாள் திருவடிகளிலே புகுவது முறைமையன்று; "வேதம் வல்லார்களைக்கொண்டு விண்ணோர் பெருமான் திருப்பாதம் பணிந்து" என்கிறார் ஆழ்வார். பாகவதர்களை முன்னிட்டுக் கொண்டே பகவான் திருவடிகளிற் புகவேணும். யானைப்பாகனை முன்னிட்டுக்கொண்டல்லது யானையினருகிற் செல்லவொண்ணாது. "தென்னானாய் வடவானாய் குடபாலானாய் குணபாலமதயானாய்!" என்று பெரிய மதயானையாகக் கூறப்படுகிற பகவானிடத்தே பாகவதர்களாகிற பாகனை முன்னிட்டே புகவேணும். இது சிறந்த சாஸ்த்ரார்த்தம். இதனை அனுஷ்டித்துக் காட்டினன் விபீஷணாழ்வான். ஆனது பற்றியே ஆழ்வானென்ற பட்டமும் பெற்றான்.

இங்ஙனே முறை தப்பாமே வந்து புகுந்த விபீஷணன்மீது வானரவீரர்கள் த்ரோஹபுத்திகொண்டது ஏன்? பரம ஸாத்விகனான விபீஷணனென்பானொருவன் இலங்கையிலுளன் என்பது ஸுக்ரீவ மஹாராஜர்க்குத் தெரியாதா? விபீஷணன் ஸாத்விகனன்றிக்கே அயோக்யனாகவே யிருக்கவுமாம். இருந்தாலென்ன? அவன் ஒரு நால்வருடன் வந்து புகுந்ததனால் ராமகோஷ்டிக்கு என்ன அவத்யம் விளைந்திடும்! பெருமானுடைய வீரம் அறியாதவனோ ஸுக்ரீவன். *பிசாசாந் தாநவாந் யக்ஷாந் ப்ருதிவ்யாஞ்சைவ ராக்ஷஸாந், அங்குல்யக்ரேண தாந் ஹந்யாம் இச்சந் ஹரிகணேச்வர!" என்று பெருமாள் புதிதாக எடுத்துரைக்க வேண்டும்படியோ ஸுக்ரீவனுடைய அறிவிருப்பது. மராமரமேழ் செற்றவன்றோ அறிந்திலனோ? அறிந்திருந்தும் எதற்காக அஞ்சி விபீஷணன்மீது படையெடுக்கப் புகுந்தது? என்று ஆராயவேண்டாவா?

ஆராயுமளவில் தேறும் பொருள் இது காண்மின். இதனை நம் வாயால் வெளியிடுவதிற் காட்டிலும் கவிசக்ரவர்த்தியான கம்பர் வாக்கினால் வெளியிடுவது மிக நன்று என நினைக்கிறோம்.

விபீஷண பரிக்ரஹத்தைப் பற்றின ஆக்ஷேப ஸமாதானங்களெல்லாம் முடிந்த பின்பு பெருமாள் ஸுக்ரீவனுக்குக் கட்டளை யிடுவதைக் கம்பர் கூறுகின்றார்:—

"ஆதலான் அபயமென்ற பொழுதத்தே அபயதானம்
ஈதலே கடப்பாடென்பது, இயம்பினீரென்பால் வைத்த
காதலான், இனிவேறெண்ணக் கடவதேன்? கதிரோன் மைந்த!
கோதிலாதவனை நீயே என்வயிற் கொணர்தி யென்றான்"

என்பதாம் அந்தச் செய்யுள்

இதுதன்னில், "இயம்பினீர் என்பால் வைத்த காதலான் இனி வேறெண்ணக் கடவதேன்?" என்பது ஸாரமாக நோக்கத்தக்கது. "ஸுக்ரீவா! நீயும் உன்னைச் சேர்ந்தவர்களும் இந்த விபீஷணனை அங்கீகரிக்கலாகாதென்று வலிதாக மறுத்ததற்குக் காரணம் நான்

அறியேனோ? விபீஷணனிடத்தில் தோஷமிருப்பதாக உண்மையில் நினைத்து நீங்கள் மறுத்தவர்களல்லீர்; என்னிடத்தில் நீங்கள் வைத்திருக்கின்ற காதலுண்டே, அது எல்லை கடந்தது. அஸ்தானே அபாய சங்கை பண்ணுவதற்குக் காரணமான அந்தக் காதலின் மிகுதியினால் மருண்டு மறுத்தீர்களத்தனை. இத்தகைய பரமப்ரேமம் நீங்கள் என்பால் கொண்டிருப்பது பற்றிச் சாலவும் உவக்கின்றேன்'' என்று விரிவுபட இராகவன் திருவாய் மலர்ந்தருளியதைக் கம்பர் ஸூத்ரம் போல் அமைத்திருக்கின்ற அழகு என்னே!

பகவானிடத்திலே கொண்ட காதல் பாகவத சிகாமணிகளிடத்தே அதிசங்கையை விளைக்குமோ? என்று கேட்கவேண்டா. பரதாழ்வான் பரம பக்தி தலையெடுத்துப் பெருமாளைத் திருப்பி யெழுந்தருளப் பண்ணிக்கொண்டு போகச் சித்திரகூடம் நோக்கிப் பரிவாரங்களுடனே வரும்போது குஹப்பெருமாளிடத்தில் நடந்த செய்திகளை அயோத்யா காண்டத்தில் நன்கு அறிவீர்களே; குஹப்பெருமாள் இராமபிரானுடைய சக்தி விசேஷங்களையும் நன்கறிந்தவர்; பரதாழ்வானுடைய பக்தியின் கனத்தையும் நன்கறிந்தவர். அப்படியிருந்தும், நல்லப்ரதிபத்தியோடே வந்துகொண்டிருந்த அப்பரதாழ்வானை நோக்கி விபரீதமாகச் சங்கித்து,

"அஞ்சனவண்ண னென்னாருயிர் நாயகனாளாமே
வஞ்சனையாலர செய்திய மைந்தரும் வந்தாரே
செஞ்சரமென்பன தீயுமிழ்கின்றன செல்லாவோ
உஞ்சிவர் போய்விடின் நாய்க்குகனென்றெனை யோதாரோ.

ஆழநெடுந்திரை யாறு கடந்திவர் போவாரோ
வேழ நெடும்படைகண்டு விலங்கிடும் வில்லாளோ
தோழமை யென்றவர் சொல்லிய சொல்லொரு சொல்லன்றோ
ஏழமை வேடனிறந்திலனென்றெனை யேசாரோ.'' —(கம்பர்)

என்கிறபடியே அதிப்ரவ்ருத்திகள் செய்யப் பார்த்தது எதனாலே? பெருமாள்மீது கொண்ட காதலின் மிகுதியாலன்றோ.

உள்ளத்தை உள்ளபடி உணரவல்ல யோகிகளில் தலைவரான பரத்வாஜ மாமுனிவரும் பரதனைப் பார்த்து *கச்சிந்ந துஷ்டோ வ்ரஜஸி ராமஸ்யாக்லிஷ்ட கர்மண:'' [பரதா! உன்னைப் பார்த்தால் எனக்கு மிகவும் அதிசங்கை உண்டாகிறதே; இராமனுக்கு ஏதோ தீங்கிழைக்கப்போகிறாய் போலே தோன்ற நின்றாயே; அந்தோ! இராமன் ஒருவர்க்கும் ஒரு தீங்கும் இழைப்பவனல்லனே; அன்னவன்திறத்து நீ தீங்கிழைக்க நினைக்கவும் தகாதே; ருஜுவான புத்தியுடன் செல்லுகின்றாயா?] என்று கேட்டிருக்கின்றார். ஒரு யோகிச்ரேஷ்டர் இப்படி அஸ்தானே கலங்கினாரென்றால் காதலின் கனமேயன்றோ இதற்குக் காரணமாக வடுக்கும்.

அயர்வறு மமரர்களென்று போற்றப்பட்ட நித்ய ஸூரிகளுக்கும் இங்ஙனே அஸ்தானே அபாய சங்கையுண்டு. "ஹாவு ஹாவு ஹாவு' என்கிற ஸாமகான கோஷத்தைக் கேட்கும் திருவனந்தாழ்வான் அந்த ஸாமகோஷத்தை அஸுர ராக்ஷஸர்களின் கோலாஹலமென்று மருண்டு மயங்கிச் சீறி அழலை உமிழ்கின்றானென்று திருமழிசைப்பிரான் தமது உட்கண்ணினால் கண்டு பேசுகின்றார்:—"ஆங்கு ஆரவாரம் அது கேட்டு அழலுமிழும் பூங்காரரவு'' என்பது அவ்வாழ்வாருடைய பாசுரம். பட்டரும் ஸ்ரீகுணரத்ந கோசத்தில்—"ஸ்நேஹார்த அஸ்தாநரக்ஷாவ்யஸநிபிரபயம் சார்ங்க சக்ராஸிமுக்யை: ஆநந்தைகார்ணவம் ஸ்ரீ:! பச்யதி யுவயோராஹூராஸ்தாரரத்நம்'' என்கிறார். பரமபதத்தில் பஞ்சாயுதாழ்வார்களும் ப்ரேமத்தாலே கலங்கிக் காப்பிடா நிற்பார்களென்கிறது இதில்.

ஆகவே விபீஷணாழ்வான் திறத்து ஸுக்ரீவ மஹாராஜப்ரப்ருதிகள் கலங்கினது கூடும். அது ப்ரேமத்தின் மிகுதியாலத்தனை என்கிற நுட்பம் இங்கு அறியக் கிடக்கின்றது.

வானரவீரர்கள் எவ்வளவு தான் ஆக்ஷேபித்தாலென்ன? அதை இராமபிரான் பொருள் படுத்த வேணுமோ? அவர்களுடைய ஆக்ஷேப மொழிகளைச் செவியேற்காமலே 'வாராய்! விபீஷணா!' என்று சடக்கென அழைத்துக் கொள்ளலாகாதா? 'அங்கதனே நீ என்ன சொல்லுகிறாய்? சரபனே! நீ என்ன கூறுகின்றாய்? ஜாம்பவானே! நீ என்ன இயம்புகின்றாய்?' என்றிப்படி ஒவ்வொரு குரங்கையும் கேட்டுக் கொண்டு கிடக்கவேணுமோ? அந்தக் காலதாமதம் விபீஷணனுக்குப் புண்ணிற் புளிப் பெய்தாலொக்குமே; பெருமாள் திருவாக்கிலிருந்து என்ன கட்டளை வெளிவரப் புகுகின்றதோ! என்று அவன் குடல் குழம்பி நிற்கும்படியாக வொரு காலக்ஷேபம் செய்தது என்? என்று ஆராய வேண்டும்.

எம்பெருமான் ஆச்ரித பாரதந்த்ரியமே வடிவெடுத்தவனாகையாலே எதையும் ஸ்வதந்திரனாகச் செய்ய விரும்பாமல் அடியார்களோடு ஒரு மிடறாகக் கலந்து செய்வதே கடமையென்று விரதங் கொண்டவனாதலால், அத்தகைய தனது விரதத்தையும் வழுவாது காட்டுதல் இங்கு அறியத்தக்க சாஸ்த்ரார்த்தம். அங்ஙனே அடியவர்களோடு கூடிக் கலந்து பெருமாள் ஒரு நிர்த்தாரணம் வெளியிடும்போது மிகவும் அற்புதமானவொரு சாஸ்த்ரார்த்தத்தை வெளியிட்டிருக்கின்றார். அஃது என்னெனில்:—

விபீஷணன் துஷ்டனாகையால் அவன் அங்கீகரிக்கத் தக்கவனல்லன்—என்றார்கள் ஸுக்ரீவாதிகள். விபீஷணன் துஷ்டனல்லனாகையாலே அங்கீகரிக்கத் தகுந்தவனே என்றார் திருவடி. ஆக இங்ஙனே விளைந்த இரண்டு பக்ஷங்களையும் கண்டித்தார் பெருமாள்.

இரண்டு பக்ஷங்களையும் எங்ஙனே கண்டித்தாராக முடியும்? திருவடியின் பக்ஷத்தைத் தழுவியே யன்றோ விபீஷணனை அங்கீகரித்திருக்கின்றார் என்று கேள்வி பிறக்கும். விஷயம் அதுவன்று. இவனை அங்கீகரிக்கலாகாதென்று ஸுக்ரீவாதிகள் கூறியதைக் கண்டித்தது நிர்விவாதம். திருவடியின் வார்த்தையில்—இவன் 'அதுஷ்டனாகையாலே' என்கிற காரணோக்தியானது பெருமாள் திருவுள்ளத்திற்கு இசையாதது. "தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத் ஸதாமேதத் அகர்ஹிதம்" என்கிற பெருமாள் திருவாக்கானது திருவடியின் பக்ஷத்திற்கு [ஏகதேசத்திற்கு]க் கண்டனமாக நிற்கின்றது. குற்றவாளரை அங்கீகரிப்பதே நலம் என்கிற பெருமாள் திருவுள்ளம் வெளியாயிற்று. இங்ஙனே பல சாஸ்த்ரார்த்தங்கள் பொதிந்து நிற்குமிடம் விபீஷண சரணாகதி 12
ப்ரகரணம்.

... ... ... ...

# 13. கண்ணனும் ராதையும்

(ஸம்ஸ்க்ருத சமத்காரம்.)

पद्मे त्वन्नयने स्मरामि सततं भावो भवत्कुन्तले नीले मुह्यति किंकरोमि महितैः क्रीतोऽस्मिते विभ्रमैः ।
इत्युत्स्वप्नवचो निशम्य सरुषा निर्भर्त्सितो राधया कृष्णस्तत्परमेव तद्व्यपदिशन् क्रीडाविटः पातु वः ॥

பத்மே த்வந்நயநே ஸ்மராமி ஸததம் பாவோ பவத்குந்தலே
நீலே முஹ்யதி கிம் கரோமி மஹிதை: க்ரீதோஸ்மி தே விப்ரமை:,
இத்யுத்ஸ்வப்நவசோ நிசம்ய ஸருஷா நிர்பர்த்ஸிதோ ராதயா
க்ருஷ்ணஸ் தத்பரமேவ தத் வ்யபதிசந் க்ரீடாவிட: பாது வ:.

கண்ணபிரான் ராதையென்கிற கோபியோடு சயனித்துக்கிடக்கும்போது வாய் வெருவுகின்றான்; பெருமாள் திருமொழியில் *கருமலர்க்கூந்த லொருத்திதன்னைக் கடைக்கணித்தாங்கே யொருத்தி தன்பால் மருவி மனம்வைத்து மற்றொருத்திக் குரைத்து ஒரு பேதைக்குப் பொய் குறித்துப் புரிகுழல் மங்கை யொருத்திதன்னைப் புணர்தி அவளுக்கும் மெய்யனல்லை* என்றருளிச்செய்த க்ரமத்திலே கண்ணனுடைய மனம் எங்கும் புக்குத்திரியுமாதலால், ராதை அருகிலிருப்பதை மறந்து மூன்று காதலிகளைப் பற்றி வாய் வெருவினான்:

பத்மே த்வந்நயநே ஸ்மராமி ஸததம்—பத்மா என்று ஒரு காதலியின் பெயர்; அவளைப் பத்மே! என்று ஸம்போதித்து உன் கண்ணழகை மறக்க முடியாமல் ஸதா அதனையே சிந்தித்துக் கொண்டிருக்கிறேன் என்றான்.

பாவோ பவத்குந்தலே நீலே! முஹ்யதி—நீலா என்று மற்றொரு காதலியின் பெயர்; அவளை நீலே! என்று ஸம்போதித்து எனது கருத்தெல்லாம் உனது கூந்தலிலேயே மயங்கிக் கிடக்கிறது என்றான்.

மஹி! தே தை: விப்ரமை: க்ரீதோஸ்மி, கிம்கரோமி—மஹீ என்று ஒரு காதலிக்குப் பெயர்; அவளை மஹி! என்று ஸம்போதித்து உன்னுடைய அப்படிப்பட்ட விலாஸங்களுக்கு நான் தோற்றிருக்கிறேன், என்ன பண்ணுவேன்? என்றான். எம்பெருமானுக்கு ஸ்ரீதேவி பூதேவி நீளாதேவிகள் மூவரும் ப்ரதான திவ்ய மஹிஷிகளாதலால் பத்மே! என்று ஸ்ரீதேவியையும், மஹி! என்று பூதேவியையும், நீலே! என்று நீளாதேவியையும் விளித்து வாய் வெருவினது ஒக்கும்.

அருகிலிருந்த ராதையானவள் இதைக் கேட்டவாறே சீறத் தொடங்கினாள். நான் பக்கத்திலிருக்க இப்படி மநஸா வாசா வ்யபிசரிப்பதுமுண்டாவென்று க்ஷேபித்தாள். அப்போது கண்ணபிரான் வெகு சாதுரியமாய் அவளை ஸமாதானப்படுத்தினான்; உன்னையல்லது வேறொரு வ்யக்தியை நான் கனவிலு மறியேனே; நான் இப்போது சொன்னதெல்லாம் உன்னைப்பற்றியே காண் என்று ஸமர்த்தனம் செய்துவிட்டான். அது எங்ஙனேயென்னில்;

பத்மே என்றதும், நீலே என்றதும், மஹி என்றதும் ஸம்போதனமாக முன்பு நின்றன. இப்போது அப்படியில்லை. ராதை அருகிலிருப்பவளாதலால் அவளை நோக்கியே எல்லாம் சொல்லுகிறபடி. ராதே என்கிற ஸம்போதனம் மாநஸமாகக் கடவது. என் காதலீ! [த்வந்நயநே பத்மே ஸ்மராமி] உன் கண்களைத் தாமரை மலர்களாகவே எண்ணுகிறேன். (பத்மம், பத்மே, பத்மாநி.)

[பாவ: நீலே பவத்குந்தலே முஹ்யதி.] கருநிறத்ததான உனது கூந்தலிலேயே என் சிந்தனை. (நீலே, நீலயோ:, நீலேஷு.)

[மஹிதை: தே விப்ரமை: க்ரீதோஸ்மி.] முன்பு மஹி, தை:—என்று இரண்டு பதமாகக் கொள்ளப்பட்டது. இப்போது ஒரே பதமாகக் கொள்க. மஹிதமென்றால் சிறந்ததென்கை. சிறந்தவையான உனது விலாஸங்களாலே நான் விலைக்கு வாங்கப் பட்டேன் என்று—எல்லாம் ராதையையே நோக்கிச் சொன்னதாக ஸமர்த்தித்தாயிற்று. இது ஒரு சாதுர்யமான உக்தி விசேஷம். ... .... 13

## 14. நர்மதாஸமுத்ர ஸம்வாதம்

(மற்றுமொரு ஸம்ஸ்க்ருத சமத்காரம்.)

कालिन्दि ! ब्रूहि कुम्भोद्भव ! जलधिरहं नाम गृह्णासि कस्मात्

शत्रोर्मे नर्मदाऽहं त्वमपि वदसि मे नाम कस्मात्सपत्न्याः ।

मालिन्यं तर्हि कस्मादनुभवसि ? मिलत्कज्जलैर्मालवीनां

नेत्राम्भोभिः, किमासां समजनि ? कुपितः कुन्तलक्षोणिपालः ॥

காளிந்தி ப்ரூஹி, கும்போத்பவ, ஜலதிரஹம் நாம க்ருஹ்ணாஸி கஸ்மாத்
சத்ரோர் மே, நர்மதாஹம் த்வமபி வதஸி மே நாமகஸ்மாத் ஸபத்ந்யா:,
மாலிந்யம் தர்ஹி கஸ்மா தநுபவஸி? மிலத்கஜ்ஜலைர் மாலவீநாம்
நேத்ராம்போபி:, கிமாஸாம் ஸமஜநி, குபித: குந்தலக்ஷோணிபால:.

குந்தலதேசத்து அரசனுக்கும் மாலவதேசத்து அரசனுக்கும் போர்நடந்து அதில் மாலவதேசத்து அரசன் தனது ஸேனைகளோடுங்கூடத் தோல்வியடைந்து மாண்

டொழிந்தானென்கிற வரலாற்றை ஒரு மஹாகவி நேர்முகமாகச் சொல்லாமல் வெகு சமத்காரமாகத் தெரிவிக்கிறார். இந்த உக்தி சமத்காரம் ரஸித்து அநுபவிக்கத்தக்கது.

நர்மதாநதியானது மாலவதேச ப்ராந்தத்தில் ப்ரவஹிக்கின்றது. இந்த நதியானது ஸமுத்ரத்தில் போய்ச்சேர்ந்ததாம். அப்போது ஸமுத்ரராஜனுக்கும் இந்த நதிக்கும் ஒரு ஸம்பாஷணை நடந்ததாக வைத்து அதன் மூலமாக குந்தலதேசத்து ராஜாவின் வெற்றியும் மாலவதேசத்து ராஜாவின் தோல்வியும் தெரிவிக்கப்படுகின்ற அழகு ரஸிகர்கள் அநுபவிக்கத்தக்கது.

தன்னிடம் வந்து சேருகின்ற நர்மதாநதியை நோக்கி ஸமுத்ரராஜன் காலிந்தி! ப்ரூஹி என்றான். அதாவது, யமுனாநதியே! என்ன ஸமாசாரம்? சொல்லு என்று வினவினான். நர்மதா நதியே! என்று விளிக்க வேண்டியிருக்க, அங்ஙனம் விளியாமல் யமுநாநதியே! என்று விளித்ததனால் நர்மதாநதிக்குக் கோபமுண்டாகி அதனால் ஸமுத்ரராஜனை நோக்கி ஹே ஸமுத்ரராஜ்! என்று விளியாமல் அகஸ்த்யரே! என்று விளித்து, என்ன ஸமாசாரம்? சொல்லும் என்றதாம் நர்மதாநதி. [ப்ரூஹி என்பதை கும்போத்பவ! என்ற விளியோடும் கூட்டுக.]

கடலரசனை நோக்கி அகஸ்தியரே! என்று விளிக்கவே அவன் சீறி [ஜலநிதி: அஹம் மே சந்த்ரேச: நாம கஸ்மாத் க்ருஹ்ணாஸி?] என்றானாம். யமுநாநதியே! நான் ஸமுத்ரராஜனல்லவா? உனக்குத் தெரியவில்லையா? அப்படியிருக்க, ஒருகால் என்னைக் குடித்ததனால் எனக்குப் பகைவரான அகஸ்தியருடைய பெயரால் என்னை ஏன் விளிக்கின்றாய்? என்றான்.

அதற்கு பதிலாக யமுனை கேட்டது; [அஹம் நர்மதா, மே ஸபத்ந்யா: நாம த்வமபி கஸ்மாத் வதஸி?] நான் நர்மதையல்லவா? அப்படியிருக்க எனக்குச் சக்களத்தியான யமுனையின் பெயரையிட்டு என்னை ஏன் விளித்தாய்?

அதன்மேல் கடல் கேட்டது [மாலிந்யம் தர்ஹி கஸ்மாதநுபவஸி?] நீ நர்மதையாகில் வெளுத்திருக்கவேணுமே; அப்படியில்லையே, கறுத்திருக்கின்றாயே; எதனால் இந்தக் கறுப்பு உண்டாயிற்று?

அதற்கு நருமதையின் பதில் [லிப்தக் கஜ்ஜலை: மாலவீநாம் நேத்ராம்போபி:] மாலவதேசத்து மாதர்கள் அழுதுகொண்டே என்னிடத்தில் ஸ்நானம் பண்ணினார்கள்; அப்போது அவர்களுடைய கண்ணிலிருந்த மையோடு கூடிய கண்ணீர் வெள்ளம் பெருகிற்று. அதனால் எனக்குக் கறுப்பு ஏறிற்று.

அதன்மேல் கடலரசன் கேட்டான் [ஆஸாம் கிம் ஸமஜநி?] ஸ்த்ரீகள் நீராடும் போது (கண்)மையை அவித்துக்கொண்டு அழுவது வைதவ்யம் நேருகின்ற நாளிலேயாதலால் அந்த மாலவதேசத்து மாதர்களுக்கு வைதவ்யம் நேர்ந்திருக்கக் கூடுமென்றெண்ணிய கடலரசன் அதை வ்யக்தமாகத் தெரிந்துகொள்ள விரும்பி 'அந்த ஸ்த்ரீகளுக்கு என்ன நேர்ந்து விட்டது? என்றான்.

அதற்கு நர்மதையின் பதில். [குபித: குந்தல க்ஷோணிபால:] குந்தள தேசத்து ராஜா சீற்றங்கொண்டார் என்றாள். சீற்றத்தினால் மாளவதேசத்து அரசனையும் அவனது பரிகரங்களையும் கொன்றிட்டதனால் மாளவநாட்டு மாதர்கள் ஸௌமங்கல்யமிழந்து மையை அவித்து அழுதுகொண்டே நீராட நேர்ந்தது; அதனால் நான் கறுப்பு ஏறப்பெற்றேன் என்றபடி.

குந்தள நாட்டரசனுடைய வெற்றியை இங்ஙனே வெகு சமத்காரமாகத் தெரிவித்தது மன்றியில் அவ்வரசனால் கொல்லப்பட்ட வீரர்கள் பலகோடி நூறாயிரக் கணக்கானவர்கள் என்பதும் இதில் த்வநி முறையில் காட்டப்பட்டது. ஒரு பெரிய நதியானது தன் நிறம் மாறிக் கருமை நிறம் கொண்டதென்றால் எத்தனை கோடிக் கணக்கான மாதர்கள் அழுது மைகலந்த கண்ணீர் வெள்ளத்தைப் பெருக்கியிருக்க வேணுமென்று ஊஹித்துப்பார்க்க. ... ... ... ... 14

# 15. திவ்யதேசத்திருநாமத் திருத்தங்கள்

ஆழ்வார்களின் மங்களாசாஸனம் பெற்ற திவ்ய தேசங்களில் பல திருப்பதிகளின் திருநாமங்கள் நாளடைவில் திரிவுற்று வழங்கிவருகின்றன. இவற்றில் அவிவேகிகள் மயங்கியிருப்பது ஆச்சரியமல்ல. சில விவேகிகளுங்கூட மயங்கி யிருப்பதால் தத்துவத்தை விளக்கிவைப்பது நலமென்று தோன்றி இஃது எழுதப்படுகின்றது. மலைநாட்டில் சில திருப்பதிகளின் பெயர்கள் மலையாளர்களின் வழக்கில் சிதைந்தேயிருக்கின்றன. திருவண் பரிசாரத்தைத் திருப்பதிசாரமென்றும், திருவித்துவக்கோடு தன்னை திருமிற்றக்கோடு என்றும், திருவல்லவாழை திருவல்லாய் என்றும், திருவாறன்விளையை ஆரம்முளையென்றும் இப்படி வழங்கிவருகிறார்கள். அவற்றைப்பற்றின திருத்தம் இங்கு அவச்யமன்று. ஆவச்யகமான திருத்தங்களைக் காட்டுகிறோம்.

திருக்கோவலூர். இது நடுநாட்டுத்திருப்பதிகளிரண்டில் ஒன்று. திருக்கோவலூர் என்றே ஆழ்வார்கள் பாடியுள்ளார்கள். 'கோபாலபுரம்' என்பது கோவலூர் என்றாயிற்று என்று பெரியார் சொல்லுவர்கள். இதைத் திருக்கோவிலூர் என்றே விவேகிகளுங்கூட வழங்கிவருகிறார்கள். திருக்கோயிலூர் என்று தபால் முத்திரையும் ரைல் ஸ்டேஷன்களில் பிரசுரமும் மலிந்துவிட்டது. அதுவே ஸ்ரீவைஷ்ணவர்களின் நெஞ்சிலும் ஊறிவிட்டதுபோலும். திருக்கோவலூர் என்றே வழங்கவேண்டும்.

திருவிந்தளூர். 'இந்துபுரம்' என்பது இந்தளூர் என்றாயிற்று. இந்தளூர் என்றே ஆழ்வார் பாடல். இதை 'திருவிழுந்தூர்' என்றே பெரும்பாலும் வழங்கி வருகிறார்கள். தபால் முத்திரையும் இப்படியே ஏற்பட்டுவிட்டது. "குத்தாலத்தினருகேயுள்ளது தேரழுந்தூர்; மாயவரத்தினருகேயுள்ளது திருவிழுந்தூர்" என்றும் சிலர் எழுதி வைத்திருக்கிறார்கள். 'திருவை இழந்தவூர்' என்று பொருள்படும்படி இங்ஙனே வழங்குவது அவசியம் மறக்கவும் மறுக்கவும் தக்கது.

திருத்தண்கால். ஸ்ரீவில்லிபுத்தூர் ப்ராந்தத்திலிருக்கின்ற திருத்தண்கால் என்கிற திவ்யதேசம் இவ்விதமாகவே ஆழ்வார் பாடலே பெற்றது. இதை 'திருத்தாங்கல்' என்றே பலரும் வழங்கி வருகிறார்கள். "திருத்தண்காலுக்கு வழி எப்படி?" என்று ஒரு பெரியாரை நாம் கேட்கநேர்ந்தபோது, அவர் சிறந்த அத்யாபகராயிருந்தும் 'திருத்தண்கால் காஞ்சீபுரத்திலன்றோ இருக்கிறது. இங்கு ஏது?' என்றார்; 'திருத்தாங்கலுக்கு வழி கேட்கிறீரோ?' என்றும் சொன்னார். காஞ்சீபுரத்தில் ஸ்ரீதீபப்ரகாசன் ஸன்னிதியென்கிற விளக்கொளி திவ்ய தேசத்திற்கு 'திருத்தண்கா' என்று வ்யபதேசம்; திருத்தண்கால் என்றல்ல. *விளக்கொளியை மரதகத்தைத் திருத்தண் காவில்* என்பது திருநெடுந்தாண்டகப்பாசுரம். *யாம் சென்று காண்டும் தண்காவிலே* என்பது பெரிய திருமொழிப் பாசுரம். தண்கால் வேறு, தண்கா வேறு. தண்காலை தங்கால்க்ஷேத்ரம் என்று சிலர் வழங்கிவருவதோடு நில்லாமல் அப்படியே ஒரு புராணமும் கல்பனை செய்திருக்கிறார்கள். இது மிகவும் அருவருக்கத்தக்கது. 'தமிழில் தண்கால் என்றும், ஸம்ஸ்க்ருதத்தில் தங்காலமென்றும் ஒப்புக்கொண்டால் என்ன பாதகம்?' என்றும் சிலர் கேட்கிறார்கள். 'திருத்தாங்கல் மான்மியம்' என்றே ஒரு புத்தகம் அச்சிட்டிருப்பதுகண்டு மிக வருந்தினோம்.

திருவெவ்வுளூர். 'எவ்வுள் கிடந்தான்' என்றும் 'எவ்வுள் பெருமலையை' என்றும் திருமங்கையாழ்வார் பாடலுள்ளது. 'நாகத்தணைக்குடந்தை வெஃகாத் திருவெவ்வுள்' என்று திருமழிசைப்பிரான் பாடலுள்ளது. இதற்குச் சார்பாக வடமொழியில் கிம்க்ருஹ க்ஷேத்ரம் என்கிற வழக்கு உள்ளது. 'கிம்க்ருஹேசஸ்துதி' என்றும் ஒரு துதிநூல் காண்கிறது. திருவள்ளூர் என்று சில ஸாமான்ய ஜனங்கள் வழங்கிவந்ததை மஹான்களும் [illegible]ாகவே ஆதரித்து வருகிறார்கள். வாயால் வழங்குவது எப்படியிருந்தாலும் எழுத்தில் எழுதுவது இப்படியிருக்கவேண்டாமென்பது நம்முடைய அபிப்

ராயம். திருவள்ளூர் என்பதைவிட ‘திருவுள்ளூர்’ என்றெழுதினால் ஒருவாறு பொருத்தமாயிருக்கும்.

திருநின்றவூர். இதனைத் தின்னனூர் என்று வழங்குவது பிசகு.

திருப்புட்குழி. ‘புட்குழிபாடும்’ என்றும் ‘புட்குழி யெம்போரேற்றை’ என்றும் ஆழ்வார் பாடலுள்ளது. ஜடாயு க்ஷேத்ரமென்று வடநூல் வழக்கு. இத்தலத்தை திருப்பக்குழி என்று சாமானியர்கள் வழங்கிவருகிறார்கள். ‘நேரே நெடுகச் செல்லும் மார்க்கத்திலன்றித் திருப்பத்தில் இத்தலமிருப்பதால் திருப்பக்குழியென்று பேராயிற்று’ என்று சிலர் அநியாயமாகப் பொருள் விவரித்து வருகிறார்கள். இதெல்லாம் மிகவும் வெறுக்கத்தக்க தல்லவா? நாளடைவில் இதெல்லாம் விசேஷார்த்த வகுப்பில் சேர்ந்து விடுமோவென்றும் அஞ்சவேண்டியிருக்கிறது. ... ... ... 15

# 16. “நன்று செய்தாரென்பர் போலும்”

*என்னடியாரது செய்யார் செய்தாரேல் நன்று செய்தாரென்பர் போலும்* என்ற விடத்திற்கு எம்பெருமான் அங்கீகரித்த சேதநர்களின்மீது பிராட்டி சிதகுகளை [தோஷங்களை] எடுத்துரைத்து ‘இவர்கள் துஷ்டர்களே’ என்று எம்பெருமான் ஒப்புக் கொள்ளும்படி செய்துவிட்டாள் என்றும், ‘என்பர்போலும்’ என்றதனால் தேறின பொருள் இதுவேயென்றும் சிலருடைய உபந்யாஸம் காண்கிறது. என்னடியார் செய்தது தப்புத்தானென்று எம்பெருமான் சொல்லிவிட்டதாக முடிந்தால் பிறகு அந்த அடியார்களின் கதி என்னாயிற்று? இதற்கு பதில் சொல்லவேணும்—என்று கேட்கப்பட்டிருந்தது. அக்கேள்விக்கு பிறர் வெளியிடுகிறபதில் என்னவென்றால், குற்றவாளர்களுக்குச் செய்கிற தண்டனைகளைச் செய்யப் பெறுவதுதான் அந்த அடியார்களின் கதி—என்று. *தன்னடியார் திறத்தகத்து என்கிற பாட்டில் பிராட்டியின் ப்ரஸ்தாவமில்லாமலிருந்தால் இவர்கள் எப்படிவேணுமானாலும் சாஸ்த்ரார்த்த க்ஷோபங்கள் செய்யலாம். பாசுரம் எவ்விதமாக இருக்கிறது! என்பதையும், எந்த மஹார்த்தத்தைப் பெறுவிப்பதற்கு இப்பாசுரம் நிபந்திக்கப்பட்டது என்பதையும், பிராட்டிவிஷயமான தேசிக திவ்யஸூக்தி எங்ஙனேயுள்ளது என்பதையும் சிறிதும் விமர்சியாமல் மனம்போனபடி எதையாவது சொல்லிவிடுவது உசிதமன்று. சதுச்ச்லோகீபாஷ்யத்தில் ஸ்வாமியின் காரிகை இது—* अस्ति कर्मार्हफलदे पत्यौ कृत्यद्वयं श्रियः। निग्रहाद्वारणं काले सन्धुक्षणमनुग्रहे ॥ அஸ்தி கர்மார்ஹபலதே பத்யௌ க்ருத்யத்வயம் ச்ரிய:, நிக்ரஹாத் வாரணம் காலே ஸந்துக்ஷண மநுக்ரஹே.* இதன் கருத்தாவது—சேதனர்கள் செய்யும் புண்யபாபரூப கருமங்களுக்குத் தக்கபடி எம்பெருமான் பலன் கொடுப்பன்; அப்போது பிராட்டி என்ன செய்வாளெனில், அவன் சேதநனை நிக்ரஹிக்க நினைக்குமளவில் புருஷகாரக்ருத்யம்பண்ணி அந்த நிக்ரஹத்தை நீக்கிவிடுவள். அவன் அநுக்ரஹோந்முகனுமளவில் அந்த அநுக்ரஹத்தைப் பிரபலப்படுத்துவள்; இவ்விரண்டு கார்யமே பிராட்டிக்கு உள்ளது, என்பதாம்.

*என்பர்போலுமென்பதற்கு பிறர் முடிவு செய்யும் பொருளின்படி இந்த ச்லோகத்தைத் திருப்பிக்கோக்கவேணும். சேதநர்களை அநுக்ரஹிக்க விருக்கிற எம்பெருமானிடம் கோட்சொல்லி தண்டிக்கச் செய்வதொன்றே பிராட்டியின் க்ருத்யமென்று ச்லோகம் ஏற்படவேணும். “अनुग्रहोन्मुखे पत्यौ निग्रहोन्मुख्यदानतः। आश्रितानां सदा दुःखदायिनीं श्रियमाश्रये ॥” என்றொரு ச்லோகம் கட்டி இவர்கள் கோஷிக்க வேணும். 16

# 17. கீதாபாஷ்யப் பொருள் விசேஷம்

பகவத்கீதைக்கு நமது பாஷ்யகாரரான எம்பெருமானார் அருளிச் செய்திருக்கின்ற பாஷ்யத்தை ஆழ்ந்து நோக்கினால் அதனுடைய அருமை பெருமைகள் பேச்சுக்கு

[illegible]மாக" அருளிச் செய்திருந்தாலும் வியாக்கியான சைலியானது அமுதினுமாற்ற வினிதே. இப்போது ஒரு ச்லோகத்தின் பாஷ்ய பங்க்திகள் சிலவற்றை யெடுத்துக்கொண்டு அவற்றிலுள்ள ரஸ விசேஷங்களை அனுபவிக்கவும் அநுபவிப்பிக் கவும் விரும்பி யெழுகின்றேன்.

எட்டாவது அத்தியாயத்தில் பதினான்காவது ச்லோகம்:—

[அநந்ய சேதாஸ் ஸததம் யோ மாம் ஸ்மரதி நித்யசஃ
தஸ்யாஹம் ஸுலப: பார்த்த! நித்யயுக்தஸ்ய யோகிநஃ.] என்பது.

"ஜ்ஞாநீ து ஆத்மைவ மே மதம்" என்று பகவான் தான் தனக்கு உயிர்நிலை யாகக் கொண்டாடும் ஞானியானவன் தன்னை உபாஸிக்க வேண்டியபடியையும் பேறு பெறும் பரிசையும் இனியருளிச் செய்கிறான் (கண்ணபிரான்) என்று அவதாரிகையிட்டு சுலோகத்தை வெகு அழகாக வியாக்கியானித்தருளி யுள்ளார். இந்த சுலோகத்தின் கருத்து என்னவென்றால், அர்ஜுநா!, எவன் இடைவிடாமல் எப்போதும் வேறொன்றி லும் நெஞ்சைச் செலுத்தாதவனாய் என்னையே ஸ்மரிக்கிறானோ, என்னோடு நித்ய ஸம்ச் லேஷத்தை விரும்பியிருக்கின்ற அந்த பக்தனுக்கு நான் ஸுலபன்—என்பதேயாம். இதில் 'அவனுக்கு நான் ஸுலபன்' என்கிற பகுதிக்கு பாஷ்யம் செய்தருளி யிருக்கின்ற அழகுதான் இங்கு ஸத்ஸம்ப்ரதாய ரஸிகர்களால் அநுபவிக்கத்தக்கது. முந்துற பாஷ்ய பங்க்திகளை உதாஹரித்துக் காட்டிவிட்டுப் பிறகு விவரிப்போம்.

[तस्य नित्ययुक्तस्य-नित्ययोगं काङ्क्षमाणस्य योगिनः, अहं सुलभः—अहमेव प्राप्यः, न मद्भाव ऐश्वर्यादिकः; सुप्रापश्च. तद्वियोगमसहमानः अहमेव तं वृणे, मत्प्राप्त्यनुगुणोपासनविपाकं तद्विरोधिनिरसनम् अत्यर्थमत्प्रियत्वादिकं च अहमेव ददामीत्यर्थः। * यमेवैष वृणुते तेन लभ्यः * इति हि श्रूयते। वक्ष्यति च * तेषां सततयुक्तानाम्....इति ॥]

இவ்வளவும் கீதாபாஷ்ய ஸ்ரீஸூக்திகள். (இவற்றின் பொருளாவது)—என்னோடு எப்போதும் கூடியிருக்கவேணுமென்கிற விருப்ப முடையவனுக்கு அடையத்தகுந்தவன் நானேயாகிறேன். மிக எளிதாக அடையத் தகுந்தவனுமாகிறேன் நான். (அதாவது) அவனுடைய பிரிவைப் பொறுக்க மாட்டாதவனாய் [அவனைப் பிரிந்து தரித்திருக்க மாட்டாதவனாய்] நானே அவனை வரிக்கிறேன். என்னை யடைவதற்கான உபாஸனத்தின் பரிபக்குவ நிலைமையையும், அதற்குற்ற இடையூறுகள் நீங்குதலையும், என்னிடத்தில் அதிகமான ப்ரீதி முதலியவைகளையும் நானே கொடுக்கிறேன். *நாயமாத்மாச்ருதியில் இவ்வர்த்தம் ப்ரஸித்தமாயிருப்பதோடு இந்த கீதையிலே மேலே பத்தாவது அத்யாயத் தில் 10, 11 ச்லோகங்களாலும் சொல்லப்படுகிறது—என்பதாம்.

ஆரியர்காள்! ஸத்ஸம்ப்ரதாய ஸாரார்த்தம் இங்கே பொதிந்திருக்குமழகை என் சொல்லுவோம்! ஸ்வகத ஸ்வீகார மென்றும் பரகதஸ்வீகாரமென்றும் இரண்டு சொல்லுவதுண்டு; சேதநன்தான் எம்பெருமானைப் பற்றுவதானது ஸ்வகத ஸ்வீகார மென்றும்; எம்பெருமான் தானே சேதநனை வரிப்பதானது பரகத ஸ்வீகாரமென்றும் சொல்லப்படும். ஸத்ஸம்பிரதாயச் சுவடறியாத சிலர் பரகத ஸ்வீகாரமென்பதன் சுவையைச் சிறிது மறியாதே "இது ஒரு தான்தோன்றி ஸம்பிரதாயம்" என்று தூஷிப்பதுமுண்டு. ஸ்ரீவசனபூஷணத்தில்—"இவன் அவனைப் பெற நினைக்கும்போது இந்த ப்ரபத்தியும் உபாயமன்று; அவன் இவனைப்பெற நினைக்கும்போது பாதகமும் விலக்கன்று" என்று அருளிச்செய்த விடத்தில் வியாக்கியானத்தில் மணவாள மாமுனிகள்—

"உடைமையை உடையவன் சென்று கைக்கொள்ளுமாபோலே ஸ்வாமியான அவன் தானே வந்து அங்கீகரிக்கக் கண்டிருக்கக்கட்டவ பரதந்த்ரனான இச்சேதநனானவன் தான் (ஃ) பலியாய் தன் ஸ்வீகாரத்தாலே ஸ்வதந்த்ரனாய் அவனைப் பெற நினைக்குமள

... அவன் நினைவு கூடாதாகில், இப்படி விலக்ஷணமாயிருக்கிற ப்ரபத்தியும் தல்லாப ஸாதனமாகாதென்றபடி...ஸ்வாமியாய் ஸ்வதந்த்ரனான அவன் ஸ்வம்மாய் பரதந்த்ரனா யிருக்கிற இவனை ஸ்வேச்சையாலே பெற நினைக்குமளவில் பாதகமும் பரதிபந்தகமாக மாட்டாதென்கை. இவை யிரண்டாலும் ஸ்வகத ஸ்வீகாரானுபாயத்வமும் பரகதஸ்வீகாரோபாயத்வமும் காட்டப்பட்டது.”

என்றருளிச் செய்திருக்கும் ஸ்ரீஸூக்திகள் மேலே காட்டிய கீதாபாஷ்ய ஸ்ரீஸூக்தி களையே அடியாகக்கொண்டவையென்று நன்கு புலப்படுகின்றது. தாம் முன்பு ஒரு வேஷத்தாலே கீதா பாஷ்யத்தில் ஸம்ஸ்க்ருதத்தாலே அருளிச் செய்ததை பின்பு மற்றொரு வேஷத்தாலே ஸ்ரீவசநபூஷண வியாக்கியானத்தில் த்ராவிடத்தாலே அருளிச் செய்தாரென்று அறுதியிடத் தட்டில்லை.

கீதாபாஷ்ய ஸ்ரீஸூக்தியை ஒவ்வொன்றாக எடுத்து விமர்சிப்போம். [*தத்வியோ கமஸஹமாந: அஹமேவ தம் வ்ருணே*] ஞானியான சேதநனைப் பிரிந்திருப்பதை எம்பெரு மான் தான் பொறுத்திருக்கமாட்டாதவனாய் தானே அந்த சேதநனை வரிப்பதாகக் கூறு கின்ற இதுதான் பரகத ஸ்வீகார மென்பது.

[*மத்ப்ராப்த்யநுகுணோபாஸந விபாகம் அஹமேவ ததாமீத்யர்த்த;*] இந்த வாக்கியமானது ஸ்வகத ஸ்வீகாரப்பற்றாசை நன்றாகக் கழிக்கிறது. இத்தலையில் விளை வெல்லாம் எம்பெருமானுடைய க்ருஷிபலமாக விளைகின்றதேயன்றி இவன் தலையாலே விளைவித்துக் கொள்ளுவது ஒன்றுமில்லை என்கிற ஸத்ஸம்பிரதாய ஸாரார்த்தம் தெளி விக்கப்பட்டது. இந்த இடத்தில் *நாயமாத்மாச்ருதியையும் எடுத்துக்காட்டியருளின பாஷ்யகாரர், பரகத ஸ்வீகாரத்திற்கு அதுவே பிரமாண மென்று நிரூபிக்கிற முகத்தாலே பலருடைய அசட்டு வாதங்களை அகற்றினாராயிற்று.

இவ்விடத்தில் தாத்பர்ய சந்த்ரிகையில் ஸ்வாமி தேசிகன் அருளிச் செய்துள்ள திவ்ய ஸூக்திகளும் தேனே பாலே கன்னலே யமுதே யத்தனை [*உக்தஸ்ய அதிவாத மாத்ரத்வசங்காவ்யுதாஸாய ச்ருதிமூலதாமாஹ—யமேவேதி*] என்றருளிச் செய் திருப்பது ஆழ்ந்து நோக்கத்தக்கது. *மஹதாமபி கேஷாஞ்சி ததிவாதா: ப்ருதக்விதா:* என்ற திருவாக்கினாலே இங்ஙனே அருளிச் செய்யவேண்டியதாயிற்று ப்ரமாண சரணாகையாலே. ... ... ... ... ... 17

## 18. தற்காலஸ்திதி

முற்காலத்தில் நன்மைகள் மிகுந்திருந்தனவென்றும் தற்காலத்தில் தீமைகளே மிகுகின்றனவென்றும் ஆகவே முற்காலமே மேம்பட்டதென்பது பலருடைய கொள்கையாகக் காண்கிறது. கலி முற்ற முற்றப் பாவங்களும் முற்றுகின்றன வென் கின்ற கொள்கை உண்மையாகவே யிருக்கட்டும்; அதைப்பற்றி நாம் இப்போது ஒன்றும் சொல்லவரவில்லை. பொதுவில் முற்காலத்தைவிட இக்காலத்திலேயே நன்மை கள் அதிகம் என்று சொல்வதற்குத் தட்டில்லை யென்று தோன்றுகின்றது.

முற்காலத்தில் ஸகலவித ஸாதனங்களும் மிகவும் அருமைப்பட்டிருந்தன. தற் காலத்திலோவென்னில் அந்த வருத்தம் அறவே யொழிந்த தென்னலாம். முதலில் படிப்புக்கு வேண்டிய ஸாதனங்களை யெடுத்துக்கொள்வோம். புஸ்தகங்கள் கிடைப்பது முற்காலத்தில் மிகவும் அரிது. ஸ்ரீராமாயணம் ஸ்ரீமஹாபாரதம் ஸ்ரீபாகவதம் போன்ற புத்தகங்கள் ஒரு ஊருக்கு ஒரு ஸ்ரீகோசம் கிடைப்பது மிக அரிதாயிருக்கும். படித்த வர்களும் முற்காலத்தில் மிகக் குறைவாகவே யிருந்தனர். அஸ்தமித்த பிறகு புஸ்தகம் பார்ப்பதற்கு எவ்வளவோ சிரமம். இவ்வகையான கஷ்டங்களெல்லாம் இக்காலத்தில் சிறிதுமில்லையென்பது அனைவர்க்கும் அநுபவஸித்தம். பாடசாலைகளும் பண்டிதர்களும் புஸ்தகஸாமக்ரிகளும் மற்றும் பல்வகையான ஸௌகரியங்களும் மலிந்திருப்பது இக் காலத்திலேயன்றி முற்காலத்திலில்லை.

இப்படியே மற்று எந்த விஷயத்திலும் பார்க்கலாம். திவ்ய க்ஷேத்ர தீர்த்தங்கள் ஸேவிக்க வேணுமென்றால் அதற்காக முற்காலத்தவர்கள் பட்ட சிரமம் வாசாமகோசரம். இக்காலத்திலோ வென்னில், இன்று நினைத்தால் நாளைகாலை ஸேதுஸ்நானம். வதரியோ துவரையோ எந்த க்ஷேத்திரமும் மணிக்கணக்கில் கண்டு மீளலாம்படியான ஸௌகர்யாதிசயங்கள் பலபல.

ஆனால் இவ்வளவு ஸௌகரியங்கள் வாய்த்தும் இக்காலத்தவர்கள் இதையெல்லாம் ஸௌகரியமாகக்கொண்டு உபஜீவியாமலிருப்பதுதான் மிகவும் வருந்தத்தக்கது. முற்காலத்தில்போல் புத்தகங்களுக்கு சிரமப்படவேண்டாதே ஸகலக்ரந்தங்களும் ஸுலபமாகக் கூடிய இக்காலத்தில் க்ரந்தங்களைக் காண்பாரும் காணவிருப்பமுடையாரும் நாளுக்குநாள் குறைந்து வருகிறார்கள். மஹர்ஷிகள் செய்த இதிஹாஸ புராணங்களையோ, மஹாகவிகளியற்றிய காவ்யநாடகாலங்கார சம்பூக்ரந்தங்களையோ ஆசாரியர்கள் அருளிச்செய்த ஸ்ரீபாஷ்ய பகவத்விஷயாதி திவ்யக்ரந்தங்களையோ கொண்டு போதுபோக்குவார் வரவரக் குறைந்துவருகிறார்கள். ந்யாயசிரோமணி வியாகரண சிரோமணி என்றிப்படி விருதுகள் பெற்று ஸம்ஸ்க்ருத சாஸ்த்ரங்களில் பரிச்ரமப்பட்டவர்களுங்கூட அவற்றால் பலனில்லையென்று கண்டு ஹிந்திபாஷைப் பயிற்சியில் ஊன்றிவருகிறார்கள். எங்குப் பார்த்தாலும் ஹிந்திமயமேயாய்விட்டது. ஆங்காங்கு ஸம்ஸ்க்ருத வித்யாப்யாஸத்துக்கென்று விசேஷ மூலதனஸம்பத்தியோடு ஏற்பட்டிருக்கிற பாடசாலைகளும் உரிய வித்யார்த்திகளில்லையென்கிற காரணத்தினால் உருமாறுகின்றன. இதெல்லாம் நினைக்க நினைக்கப் பரிதாபகரமே.

வைதிக ச்ரத்தாளுக்களான பலபல தனிகர்கள் ஒன்று சேர்ந்து கோடிக்கணக்கான மூலதனம் ஏற்படுத்தி, ப்ராசீநரீதியில் வைதிகவித்யைகளையதிகரித்து வைதிகாநுஷ்டானங்கள் குன்றாதிருக்குமவர்களுக்கு சாச்வதமாக உபகரிப்பதென்று ஒரு ஏற்பாடு நடந்தாலல்லது நமது வைதிக வித்யைகளுக்கும் வைதிகாநுஷ்டானங்களுக்கும் புராதனஸ்திதி வரமாட்டாது. ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதி. மைஸூர் பரகாலமடாஸ்தான ஸ்வாமிகளும், ஸ்ரீமத் அஹோபிலமடாதிபதி ஸ்வாமிகளும் வைதிகவித்யாபிவிருத்திக்குப் பாடுபட்டுவருவது மிகவும் போற்றத்தக்கதாகவுள்ளது. ஸ்ரீமத் காமகோடி பீடாதிபதி. சங்கராசார்யஸ்வாமிகள் இவ்விஷயத்தில் உழைக்கு முழைப்பு வாசாமகோசரம். இப்படி ஒவ்வொரு மடாதிபதிகளும் தீக்ஷைகொண்டால் நமது வைதிக மார்க்கத்திற்கு என்ன குறை?

ஸ்ரீமத்வேதமார்க்க ப்ரதிஷ்டாபநாசார்ய உபய வேதாந்த ப்ரவர்த்தகாசார்ய இத்யாதி பிருதாவளிகளை நாம் ஒருவிதமான ப்ரயாஸமுமில்லாமல் பெற்றிருக்கிறோம். உ. வே. என்பதற்கு இன்னது பொருளென்றுகூட தெரிந்து கொள்ளாதவர்களுக்கும் கடிதங்களெழுதுகையில் உ. வே. என்று எழுதிவருகிறோம். கல்யாண காலங்களில் சீர்பாடல் பாடும்போது ஒன்றிரண்டு பிராயமுள்ள சிறுவர்களையுமுத்தேசித்து 'ஸ்ரீமத் வேதமார்க்க ப்ரதிஷ்டாபநாசார்ய உபயவேதாந்த ப்ரவர்த்தகாசார்யரான பெண்ணுக்கு மைத்துனன் ராகவாசாரியர்' என்று கோஷித்து வருகிறோம். இதனால் ஸ்ரீமத் வேதமார்க்க ப்ரதிஷ்டாபகத்வமும் உபயவேதாந்த ப்ரவர்த்தகாசார்யத்வமும் ந[illegible] ஜன்மஸித்தமென்று அறியக்கிடக்கிறது. இவ்வளவே கொண்டு நாம் த்ருப்தியடைந்துவிடலாமா? இந்த விருதுகள் அர்த்தபர்யவஸாயியாம்படி முயலவேண்டாமா? 18

## 19. நல்வார்த்தையொன்று

(உத்தமாதிகாரிலக்ஷணம்.)

ஸ்ரீவசனபூஷண திவ்யசாஸ்த்ரத்தில் பொதிந்துள்ள நல்வார்த்தைகளில் இதுவொன்று மிகச் சிறந்தது:—

“குற்றம் செய்தவர்கள் பக்கல் பொறையும் க்ருபையும்
சிரிப்பும் உகப்பும் உபகார ஸ்ம்ருதியும் நடக்கவேணும்” என்பதாம்.

*ஆர் வசனபூஷணத்தின் ஆழ்பொருளெல்லாமறிவார்? ஆரது சொல்நேரில் அனுட்டிப்பார்?* என்று மணவாளமாமுனிகள் அருளிச்செய்தவாறு இந்த நல்வார்த்தையின்படி அனுட்டிக்கவல்ல அதிகாரி இம்மண்ணுலகில் ஒருவருமிலரேயானாலும் ஸ்ரீஸூக்தியின் பொருளை ஒருவாறு அறிந்திருத்தல் அழகியதன்றோ. கேண்மின்:

நமக்குச் சிலர் குற்றம் செய்தால் அவர்கள் திறத்திலே நாம் பொறுமை காட்டவேணும்; க்ருபை பண்ணவேணும்; சிரித்திருக்கவேணும்; உகந்திருக்கவேணும்; உபகார ஸ்ம்ருதியும் நடக்கவேணும்,

அவர்கள் செய்த குற்றத்திற்கு நாம் ஒருபதில் தீங்கு செய்யவாவது, இப்படி நமக்குக் குற்றஞ்செய்தானே! என்று நெஞ்சு கன்றியிருக்கவாவது கூடாது. இதுவே பொறுமையாகும்.

2. பாகவதாபராதிகளை எம்பெருமான் அவசியம் தண்டித்தே தீர்வனாதலால் 'ஐயோ! நாம் பொறுத்திருந்தாலும் இவர்களை எம்பெருமான் தகுந்தபடி தண்டிக்கப் போகிறானே! அந்தோ! இதற்கு என்ன பண்ணுவோம்!' என்று இரங்கியிருக்க வேணும். இதுவே க்ருபை பண்ணுவதாம்.

3. ஒருவர் நமக்குத் தீங்கிழைப்பதாவது என்ன? நம்மிடத்தில் பலபல குற்றங்குறைகள் இருப்பதாக எடுத்துக்கூறி நம்மை தூஷிப்பதாம். அங்ஙனம் தூஷிப்பதனால் நமக்கு என்ன ஹாநி விளைந்திடுமென்பதை நாம் சிறிது ஆலோசிக்கவேணும். இஹலோகத்தில் கெடுதி, பரலோகத்தில் கெடுதி என்று ஹாநியானது இருவகைப்படும். இவ்விருவகைக் கெடுதிகளுள் பரலோகத்துக் கெடுதி யாதொன்றும் இவர்களால் விளைக்க முடியாதென்பது திண்ணம். இஹலோகக் கெடுதி ஏதேனும் விளைக்கமுடியும். அதாவது, யாரேனும் நமக்கு ஏதேனும் த்ரவ்யலாபம் உண்டுபண்ண நினைத்திருந்தால் அதை இவர்கள் தூஷணமுகத்தாலே தடைசெய்ய முடியும். அப்படிப்பட்ட இஹலோக விரோதங்களைச் செய்தால் உண்மையில் தொலைய வேண்டியது தொலைந்தது என்று உள்ளம் பூரிக்கவேண்டுமேயல்லது இழவுக்கு வருந்தவேண்டிய அவசியமில்லாமையால், "ஐயோ! இவர்கள் செய்த கெடுதியை நாம் ஒரு ஹாநியாக நினைத்து நாமும் தங்களைப்போலே வருத்தப்படுவோமென்று இவர்கள் நினைத்திருக்கிறார்களே! இப்படியும் ஒரு மூடபுத்தி இவர்களுக்கு இருக்குமோ" என்று சிரித்திருக்கவேண்டும்.

4. நமக்குத் தீங்கிழைக்குமவர்கள் நம்முடைய தேஹத்திற்கு ஏதேனும் பரிபவம் பண்ணலாமே தவிர ஆத்மாவுக்கு ஒரு பரிபவமும் பண்ண முடியாதன்றோ; அப்படி அவர்கள் பண்ணும் பரிபவங்களுக்கு இலக்கான ஸ்வசரீரத்தைத் தனக்கு சத்ருவாக நினைத்திருக்க வேண்டியவனாகையாலே தன்னுடைய சத்ருவிஷயமாக ஒருவன் பரிபவம் பண்ணும்போது தான் உகக்குமாபோலே உகந்திருக்கவேணும்; தவிரவும், இவர்கள் ஹாநிபண்ணும் த்ருஷ்ட பதார்த்தங்கள் தனக்கு ப்ரதிகூலங்களென்று நினைத்திருக்கவேண்டியவனாகையாலே, தனக்கு ப்ரதிகூலங்களானவற்றைத் தவிர்க்கும்போது தான் உகக்குமாபோலே உகந்திருக்கவேணும்.

5. நம்முடைய தோஷங்களை நாம் அநவரதம் அநுஸந்தித்துக் கொண்டேயிருக்க வேணும். இப்படியிருந்தும் நாம் நம்முடைய தோஷங்களை மறந்திருக்கிறோம்; அப்படிப்பட்ட நிலைமையிலே அவற்றை நமக்கு நினைப்பூட்டி இவர்கள் நமக்குப் பண்ணுமுபகாரம் என்னே! என்னே! என்று பெருநன்றி பாராட்டவேணும்.

இந்த ஐந்துக்குள்ளே ஏதேனும் ஒன்று வாய்த்தாலும் போதும். ஐந்தும் வாய்த்து விட்டால் மூவுலகும் வென்றதாம். ... ... ... 19

## 20. எம்பெருமானுடைய திவ்யஸூக்தியொன்று

ஸ்வாமி, ஸ்ரீபாஷ்யம் முதலான திவ்ய க்ரந்தங்களில் எம்பெருமானுக்கு விசேஷணங்களை யிட்டருளும்போது *அநந்தகுணஸாகரம்* என்றும் *அபரிமிதோதாரகுணஸாகரம்* என்றும் அருளிச் செய்யக் காண்கிறோம். குறிப்பாக ஓரிடமெடுத்துக் காட்டு

கிறோம்—இரண்டாமத்யாயத்தின் தொடக்கத்தில் ஸ்ரீபாஷ்யத்தில் *அபரிமிதோதார குணஸாகரம் பரம்ப்ரஹ்ம வேதாந்த வேத்ய மித்யுக்தம்* என்றுள்ளது. இங்கு பரப்ரஹ்ம சப்தம் ப்ரதமாவிபக்தியே யொழிய த்விதீயாவிபக்தியன்று. இதற்கு விசேஷணமான அபரிமிதோதாரகுண ஸாகரம் என்பதும் ப்ரதமாந்தமாகவே கொள்ளப்பட வேண்டிய தாயிற்று. ஸாகர சப்தம் நித்யபும்லிங்கமாகையாலே குணஸாகரோ ப்ரஹ்ம என்று சொல்லத்தகுமேயொழிய குணஸாகரம் ப்ரஹ்ம என்று சொல்லத்தகாது. எம்பெருமான் திருக்கல்யாண குணங்களுக்குக் கடலாகவுள்ளவனென்று இப்படிப்பட்ட பொருளே ஸ்வரஸமாகத் தோன்றுமாதலால் "குணாநாம் ஸாகர:" என்று தத்புருஷ ஸமாஸம் விவக்ஷிதமாவதற்கே ஔசித்யமுள்ளது. இப்படி ஸமாஸம் கொண்டால் குணஸாகரம் ப்ரஹ்ம என்கிற இந்த ப்ரயோகம் உபபத்தியடைவதற்கு வழியே கிடையாது. தத்புருஷ ஸமாஸத்தை விட்டு பஹுவ்ரீஹி ஸமாஸம் கொண்டால் (அதாவது) "அநந்த: குணஸாகரோ யஸ்ய தத்" என்றும் "அபரிமித: உதாரகுண ஸாகர: யஸ்ய தத்" என்றும் ஸமாஸம் கொண்டால்......ஸாகரம் என்று நபும்ஸகலிங்கமாகப் பொருந்தும். ச்ருதப்ரகாசிகாசார்யர் இப்படி பஹுவ்ரீஹி ஸமாஸத்தையே ஸ்பஷ்டமாக அருளிச் செய்திருக்கின்றார். எம்பெருமான் குணங்களுக்குக் கடல் போன்றிருப்பவன் என்று எங்கும் எல்லாரும் சொல்லிவருவதும் அனேக க்ரந்தங்களிலுள்ளதுமான இந்த ரீதியைவிட்டு, குணங்களைக் கடலாகச் சொல்லி அக்கடலை எம்பெருமான் உடையவன் என்று இங்ஙனே சொல்லுவதில் என்ன விசேஷம்? என்று சிலர் சங்கிப்பதுண்டு. எம்பெருமானார் ஸ்ரீஸூக்தியொன்று தவிர வேறு எந்த க்ரந்தத்திலும் இப்படி பஹுவ்ரீஹி ஸமாஸத்தினால் நிர்வஹிக்கப்படவேண்டியதான ப்ரயோகம் ஓரிடத்தில் கூடக் காணக் கிடைப்பதில்லை. தேடிப் பார்த்தால் ஸ்ரீவைஷ்ணவாசார்யர்களின் க்ரந்தங்களில் கிடைக்குமே யொழிய மற்றையோருடைய க்ரந்தங்களில் அடியோடு கிடைக்கமாட்டாதென்று உறுதியாகக் கூறலாம்.

இப்படி விலக்ஷணமாக ஸ்வாமி அருளிச் செய்ததற்கு ப்ரபலமான மூலமுண்டு. *தமிழ் மறைகளாயிரமும் ஈன்ற முதல் தாய் சடகோபன், மொய்ம்பால் வளர்த்த இதத்தாய் இராமாநுசன்* என்கிறபடியே ஆழ்வாருடைய திவ்ய ஸூக்திகளை வளர்ப்பதற்கே அவதரித்தவரான நம் பாஷ்யகாரர் ஆழ்வாருடைய திவ்ய ஸூக்திகளைத் தழுவியே அருளிச் செய்பவர் என்பதை நாம் பல சான்றுகள் காட்டி நிரூபித்திருக்கிறோம். ப்ரக்ருதஸ்தலமும் அதில் தலையான சான்று. நம்மாழ்வார் பெரிய திருவந்தாதியில் (69) *மிகுந் திருமால் சீர்க்கடலை யுள்பொதிந்த சிந்தனையேன்* என்று அருளிச் செய்துள்ளார். இப்பாசுரத்தில் குணங்களானவை கடலாகக் கொள்ளப்பட்டிருக்கின்றது. வண்டமிழ்மாமுனியான அகஸ்த்ய மஹர்ஷியானவர் உப்புக்கடலை யுட்கொண்டவ ரென்று ப்ரஸித்தி பெற்றவர். நம்மாழ்வாரெனும் அருந்தமிழ் மாமுனியான தாம் உப்புக்கடலையுட்கொள்ளாமல் பகவத் குணமாகிய அமுதக்கடலை யுட்கொள்ளப்பெற்றவரென்று காட்டிக் கொண்டபடி. இந்த ஸ்ரீஸூக்தியையே அவலம்பித்து ஆசார்ய ஹ்ருதயத்திலும் (3—6.) மேகோபதேச சூர்ணையில் *பூண்ட நாள் சீர்க்கடலையுட் கொண்டு* என்றருளிச் செய்யப்பட்டது. மேகமானது கடலை க்ரஸிப்பதுபோல, மேகமாகச் சொல்லப்படுகிற ஆசார்யர்களும் எம்பெருமானுடைய திருக்குணங்களாகிற கடலை க்ரஸிப்பவர்கள் என்று சொல்லிற்று. 

ஆக ஆழ்வார் திருவுள்ளத்தில் பகவத்குணங்கள் கடலாகத் தோன்றினபடியாலே அந்தச் சாயையிலேயே அருளிச்செய்யவேணுமென்று திருவுள்ளம்பற்றிய எம்பெருமானார், பஹுவ்ரீஹிஸமாஸத்தையிட்டு நிர்வஹிக்கப்படவேண்டியதான ப்ரயோகத்தைச் செய்தருளி குணங்களுக்கு ஸாகரத்வத்தை நிலைநாட்டியருளினாராயிற்று.

ப்ரஸங்காத் ஏதத் ஸமசீலமான மற்றொரு விஷயமும் இங்குத் தெரிவிக்கப்படுகிறது. ஸ்தோத்ரரத்னம் முதல் ச்லோகத்தில் *அகாத பகவத் பக்தி ஸிந்தவே* என்றவிடத்தில் பாஷ்யம் செய்தருளாநின்ற தேசிகன், ஸ்ரீமந்நாதமுனிகள் பகவத்பக்திக்கு

ஸிந்துவானவர் என்று தத்புருஷனாக மூந்துற விவரித்து, உடனே "பக்திம் வா ஸிந்துந் வேந ரூபயிந்வா பஹுவ்ரீஹி:" என்றருளிச்செய்தார். அகாதமான பகவத்பக்தி ஸாகரத் தையுடையவர் என்றபடி. இப்படி பஹுவ்ரீஹியைக் கொண்டது *காதல் கடல்புரைய விளைவித்த* (5—3—4) என்ற திருவாய்மொழிப் பாசுரத்தில் பக்தியைக் கடலாகக் கூறி 20
யிருப்பது பற்றியேயென்றுணர்க. ... .... ... ....

# 21. லோகவ்யவஹாரசிக்ஷா

லோகவ்யவஹார மென்றும் உலகநீதி யென்றும் பல வழக்கச் சொற்களுண்டு. அவை பெரும்பாலும் சிதைந்தும் உண்மைப் பொருள் விளங்கப்பெருமலு மிருக்கின் றன. இப்போது இரண்டு மூன்று வார்த்தைகளைப் பற்றின தத்துவமுணர்த்துகிறோம். (1) இலவசமாகக் கொடுத்தான். (2) மடிசார் பாய்கிறது. (3) அதி ஸர்வத்ர வர்ஜயேத். என்கிற மூன்றைப்பற்றி. இரண்டு—தமிழ் வியவஹாரங்கள்; மூன்றுவது ஸம்ஸ்க்ருத வ்யவஹாரம்.

(1) ஒருவன் ஒன்றை விலையில்லாமல் இனமாகக் கொடுத்தால் பெற்றுக் கொண்டவன் 'இது எனக்கு இலவசமாகக் கிடைத்தது' என்கிறுன். இனமாகக் கிடைத்ததென்னும் பொருளில் இலவசம் என்கிற சொல் உண்டோவென்று கேட்டால் இங்ஙனே உலக வழக்கு இருப்பதனாலே உண்டென்று கொள்ளவேணுமென்கிறுர்கள். உண்மையில் இலவசமென்பது சொல்வடிவமன்று; இலைவச மென்பதேயாம். ஒரு வனை யொருவன் ஐந்து ரூபாய் கடன் கொடுக்குமாறு கேட்டுக்கொண்டிருந்தான்; இவனுக்குக் கடன் கொடுத்தால் பணம் திரும்பி வராதென்றும், ஏதோ யத்கிஞ்சித் இனமாகக் கொடுத்தனுப்பி விடுவோமென்றும் நினைத்த அவன் இரண்டு ரூபாயை வெற்றிலையில் வைத்து "இதம் தே தாம்பூலம்" என்று கொடுத்தான். அதற்கு அவன் 'நான் கடனாகத்தானே கேட்டேன்; வெற்றிலையில் வைத்துக் கொடுப்ப தேன்?' என்றுன். அதற்கு இவன் 'நான் கடன் கொடுப்பதில்லை; ஏதோ இலைவச மாகக் கிடைப்பதைப் பெற்றுக்கொண்டு மகிழ்ந்து செல்' என்றுன். அவனும் அதைப் பெற்றுக்கொண்டு 'இரண்டு ரூபாய் எனக்கு இலைவசமாகக் கிடைத்தது' என்று நண் பர்களிடம் சொல்லிக் கொண்டு களித்திருந்தான். இவ்விதமாக வுண்டான வ்யவஹார மிது. உலகில் வெற்றிலையில் வைத்துக் கொடுப்பது கடனன்று, இனம் என்பது யாவருமறிந்ததாகும். ஆகவே இலைவச மென்றது வெற்றிலை வழியாக என்றதாயிற்று. வெறுமனே இலையென்றால் வெற்றிலையைக் காட்டுமோவென்று சங்கிக்க வேண்டா; பரிபாஷையில் வெற்றிலை பாக்கை அடைக்காய் என்கிறோம்; "கையடைக்காயும்" "அடைக்காய் திருத்தி நான் வைத்தேன்" என்பன பெரியாழ்வார் பிரயோகங்கள். அடை என்னுஞ் சொல் பொதுவாக இலைக்குப் பெயர்; காய் என்பதும் பொதுவாகக் காய்களுக்குப் பெயர். ஆனாலும் மரபின் வகையால் அடையென்பது வெற்றிலையையும், காய் என்பது பாக்கையும் சொல்லுவது நிர்விவாதம். இங்ஙனமே இலைவச மென்ற விடத்தில் இலையென்கிற பொதுச்சொல் விசேஷித்து வெற்றிலையைக் குறிக்கத் தட்டில்லை.

(2) (மடிஸார் பாய்கிறது) என்பது அர்த்தமற்ற தவருன சொல். தீர்த்தம் சாற்றமுது முதலானவை ஸாதிக்கும்போது ஒரே தாரையாக விழாமல் வேறு வேறு தாரைகளாகவும் பெருகினால் அப்போது மடிஸார் பாய்வதாகச் சொல்லி வருகின்றனர். இங்கு உண்மையான சொல்வடிவம் மறுதாரை பாய்கிறது என்பதேயாம்.

(3) (அதி ஸர்வத்ர வர்ஜயேத்) வடமொழியில் இதுவொரு தவருன வியவஹாரம். அதிக கோபம் கூடாது, அதிக நிந்தை கூடாது, அதிஸ்தோத்ரம் கூடாது, அதிக ஹிம்ஸை கூடாது, அதி போஜனம் கூடாது;...எதுவும் அளவுபட்டிருக்கவேணுமே யொழிய அதியாகக் கூடாது என்கிற கருத்தில் (அதி ஸர்வத்ர வர்ஜயேத்) என்று வழங்கிவருகிறுர்கள். இப்படியே சில புத்தகங்களிலு மிருக்கிறதாம். சிலர் இதை

ஸமர்த்திக்க முன் வருகிறார்கள். அதி என்பது வேறொரு சொல்லோடே சேர்ந்து பொருள் தரவல்லதே யொழிய தனிப்பட நின்று ஒரு பொருளையும் தாராது. அதி யோக்ய:, அதிம்பாக்யம், அதிலங்கநம், அதிக்ரமணம், அதிப்ரஸங்கம், அத்யேதி, அதிக்ராமதி...என்றிப்படி வேறொரு சொல்லோடே சேர்ந்தே அதி யென்பது ப்ரயோகம் பெற்று வருகின்றது. அது தனிப்பட நின்று ஒரு பொருளைத் தாராது. அப்படி தருவதை எங்கும் நாம் காண்கின்றிலோம். ஆகவே (அதி ஸர்வத்ர வர்ஜயேத்) என்று ஸம்ஸ்க்ருத ஜ்ஞர் வாயில் வரத்தகாது. மணிப்ரவாள ச்லோகமென்று கொண்டால் கொள்ளலாம். அவதாரணத்தை விடவேண்டியது, ஸமுச்சயத்தை விடவேண்டியது என்று சொல்ல நினைத்தவர்கள் "ஏவ வர்ஜயேத்" "ச வர்ஜயேத்" என்று சொல்வதை எங்கும் காண்கின்றிலோம். ஆகவே (அதி ஸர்வத்ர வர்ஜயேத்) என்பது அபப்ரயோகமேயாகும். இதை ஸமர்த்திக்க முயல்வதும் அநபிஜ்ஞக்ருத்யமாகும்.

*அதிஸ் ஸர்வத்ர வர்ஜித:* என்பதே விவேகிகளான வித்வான்கள் வழங்குவதும் பொருந்தியதுமாகும். அதி: என்பது சப்த பரமா? அர்த்த பரமா? என்று விசாரம் வரும். முதலில் சப்தபரமாகி, பிறகு அர்த்த பரமுமாகிறது. ப்ரஹ்மஸூத்ரத்தில் *ஈக்ஷதேர் நாசப்தம் *ஈக்ஷதிகர்ம வ்யபதேசாத் ஸ:* என்கிற இரண்டு ஸூத்ரங்களை யெடுத்துக் கொள்வோம். ஈக்ஷதே: என்றவிடத்தில் ஈக்ஷதிதாதுவும் அர்த்தம். அந்த தாதுவின் அர்த்தமான ஈக்ஷணமும் அர்த்தம். வியாக்கியானங்களை விமர்சித்தால் இப்படியே தான் காண்கிறது. ஈதிக்ஷகர்ம என்றது ஈக்ஷணத்திற்குக் கர்மபூதம் என்று பொருள் பட்டு நிற்கும்.

"பகவதா ஹிரண்யகசிபு: ஹத:" என்றால் இவ்விடத்தில் ஹிரண்யகசிபு: என்ற சொல் சப்த பரமா? அர்த்த பரமா? என்று ஆராயவேணும். அர்த்த பரமே யொழிய சப்த பரமன்று. பகவான் ஹிரண்யகசிபு சப்தார்த்தமான வ்யக்தியைக் கொன்றாரே யல்லது ஹிரண்யகசிபு வென்கிற சப்தத்தைக் கொல்லவில்லை. "ஹிரண்யபூர்வம் கசிபும் ப்ரசக்ஷதே" என்ற மஹாகவி வாக்யத்தைக் காண்மின். இங்கு ஹிரண்ய மென்கிற சொலை முன்னே யுடைத்தான சொல் கசிபு என்கிற சொல். ஆகவே இங்கு சப்த பரத்வம் சொல்லமுடியுமே யொழிய அர்த்தபரத்வம் சொல்லமுடியாது. ஆனால் கவிக்கு இங்கு அர்த்தந்தான் விவக்ஷிதம். *தேவபூர்வம் கிரிம் தே *ராமேதி த்வ்யக்ஷரம் நாம மாநபங்கம் பிநாகிந:* இத்யாதி பரச்சத ஸ்தலங்களும் காணலாம். இவ்விடங்களிலெல்லாம் சப்தார்த்தங்களுக்கு அபேதமே காணப்படுகிறது. இவை போலவே அதி: என்பது முதலில் அதி யென்கிற சப்தத்தைக் காட்டி, பிறகு உத்தரேண அந்வயயோக்யதாயை அதன் அர்த்தத்தையும் காட்டியே நிற்கும்.

வேங்கடவரதாசார்ய ரென்று பெயர் பூண்டவர்க்குத் தனியனிடுகிறவர்கள் *வேங்கடேசபதோதஞ்சத்வரதார்ய: மஹம் பஜே* என்று இயற்றுவதை எங்கும் காண்கிறோம். வேங்கட என்கிற உபபதம் கூடப்பெற்றிருப்பது (வரத) என்கிற சப்தத்திற்கே யொழிய தச்சப்த வாச்ய வ்யக்திக்கு அன்று. ஆயினும் இங்கு சப்தம் விவக்ஷிதமன்று என்பதை விவேகிகள் அறிவார்கள்.

வடமொழியில் வண்டுக்கு (த்விரேப:) என்றொரு பெயர் ப்ரஸித்தம். இரண்டு ரகாரங்களையுடையது என்று இதற்குப் பொருள். வண்டினிடத்தில் இரண்டு ரகாரங்களுள்ளனவா என்று தேடிப்பார்க்கவேண்டும். வண்டுக்கு வாசகமான ப்ரமர: என்கிற மற்றொரு சொல்லில் இரண்டு ரகாரங்கள் உள்ளனவேயன்றி வண்டினிடத்தில் கிடையாது. ஆக, (த்விரேப:) என்னுஞ் சொல் (ப்ரமர:) என்னுஞ் சொல்லுக்கு மாத்திரமே வாசகமாகி அவ்வளவோடு நில்லாமல் அதன் அர்த்தத்தையும் நோக்கிக் கிடக்கிறது என்றுணரவேணும். (ஸத்தாயா: விஷயோ நாஸ்தி) என்னவேண்டு மிடங்களில் (அஸ்தேர் விஷயோ நாஸ்தி) என்று ப்ரயோகிப்பதுண்டு க்ராந்திகர்கள். கூரத்தாழ்வான் ஸ்ரீ வைகுண்ட ஸ்தவத்தில் ஸ்ரீ வைகுண்டத்திற்கு விசேஷணமிடுகையில் (44) *அநஸ்தமிதாஸ்திசப்தம்* என்றொரு விசேஷணமிடுகிறார். அஸ்திசப்தம் ஒரு பலகையில்

எழுதிப் பரமபதத்தில் எப்போதும் தொங்கவிடப்பட்டிருக்கிறது என்றோ, பரமபத வீதிகளிலெல்லாம் அஸ்தி சப்தம் அவியாதபடி எழுதப்பட்டிருக்கிறதென்றோ இதற்குப் பொருளன்று. அஸ்திசப்தார்த்தமான ஸத்தை எப்போதும் அழியாமலிருக்கப் பெற்றது என்பதேயன்றோ பொருள். இப்படி பல்லாயிரம் காட்டலாம். வ்யுத்பித்ஸுக்களின் வ்யுத்பத்தி வைசத்யார்த்தமாக ஸமயங்களில் பல பலவும் காட்டுவோம். அதி: என்பது ஸுசப்தமா? அபசப்தமா? என்னுமிவ்வளவே பார்க்கவேண்டும். இது பாணினிவாயில் நுழைந்து புறப்பட்ட சொல்லாகையாலே அபசப்தம் என்கிற வாதம் அடியறுக்கப்பட்டதாயிற்று. (अते: इति ।)

சப்தபரமேயொழிய அர்த்த பரமாக ப்ரஸக்தியேயில்லை யென்று கொண்டாலும் ஒரு குறையுமில்லை. அதி என்கிற சொல் எதனோடும் சேரத்தகாது என்பது தாற்பரியமா... அதிகோபம், அதித்வேஷம், அதிஸ்நேஹம், அதிஉச்ச்ராயம், அதிகர்வம், அதிவிஸ்மயம்......என்றிப்படி வழங்கும்படியாக வைத்துக்கொள்ளக்கூடாது என்றே தேறும். அதிசய:, அதிஸர்வ:, அதிமாநுஷ:...இத்யாதி சப்தங்கள் கூடாது என்று சொல்லிற்றாக இதனால் ஒருநாளும் ஏற்படாது. (அதிஸர்வத்ர வர்ஜயேத்) என்று சொல்லுகிறவர்களுக்கும் என்ன தாற்பரியமென்று பார்க்கவேணும். ஒருவன் இரவும் பகலும் ஒரு க்ஷணங்கூட ஓயாமல் பகவானைத் தொழுவதும் துதிப்பதுமாயிருக்கிறான். இதை அதியாகவே செய்கிறான். இப்படி பகவத் வந்தனங்களை அதியாகச் செய்யக் கூடாது என்றதாகத் தேறுமோ? எந்த காரியத்தை அதியாகச் செய்தால் தீங்காக முடியுமோ அந்த காரியத்தைத் தான் நிஷேதிப்பது வழக்கம். ஆகவே ஸர்வத்ர என்பது அஸங்குசிதமாக ஸர்வத்தையும் சொல்லி விடாது. ஸர்வார்த்தஸித்தி யென்னும் நூலில் மஹா பாரத பாகவத ராமாயணாதி ஸர்வக்ரந்தார்த்தங்களும் ஸித்திப்பதாக யாரும் நினைக்கமாட்டார்கள். உத்திஷ்ட கதிபயார்த்தங்களே ஸர்வசப்தார்த்தமாகும். ஸர்வத்ர வர்ஜித: என்றவிடத்திலும் இப்படியே தான்.

ஆக, (அதிஸ் ஸர்வத்ர வர்ஜித:) என்பதற்கு சப்ததோஷமுமின்றிக்கே அர்த்த பாதமுமின்றிக்கே ஸர்வாத்மநா நிரவத்யத்வம் ஸித்தமாகையாலும், (அதி ஸர்வத்ர வர்ஜயேத்) என்பது பொருள்தரமாட்டாததாகையாலும் (அதிஸ் ஸர்வத்ர வர்ஜித:) என்பதே வித்வத் பரிக்ராஹ்யமான வ்யவஹாரமாம் என்று தெளிக. ... 21

## 22. திருவாய்மொழியையடியொற்றி உடையவர் பணித்தது

ஸ்வாமி எம்பெருமானார் அருளிச்செய்த திவ்ய க்ரந்தங்கள் ஒன்பது. கத்யத்ரயம் என வழங்கப்பட்டு வருகின்ற க்ரந்தம் ஒரே க்ரந்தமன்று. மூன்று கத்யங்களும் தனித்தனியே மூன்று க்ரந்தங்கள். 'கத்யத்ரயம்' என்கிற பெயர் ஸ்வாமி யிட்டதன்று; பின்புள்ளார் மூன்று க்ரந்தங்களையும் ஒன்று சேர்த்து ஒரே பெயராக கத்யத்ரயமென்றிட்டு வழங்கிவருகின்றனர். சரணாகதி கத்யம், ஸ்ரீரங்க கத்யம், ஸ்ரீ வைகுண்ட கத்யம் என்ற திருநாமங்களுக்கேற்ப மூன்று கத்யங்களும் தனித்தனி க்ரந்தங்கள். இவ்விஷயம் வேதாந்த தேசிகனருளிச்செய்த குருபரம்பராஸாரமென்னும் ரஹஸ்யத்தில் ஸுவ்யக்தம்.

இவற்றுள் ஸ்ரீரங்ககத்யத்தின் ஆரம்பம் *ஸ்வாதீந த்ரிவித சேதநாசேதந ஸ்வரூப ஸ்திதிப்ரவ்ருத்திபேதம்* என்பது. சேதநர்களினுடையவும் அசேதநங்களினுடையவும் ஸ்வரூபமென்ன, ரக்ஷணமென்ன, ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளென்ன இவை தன்னதீனமாயிருக்கப்பெற்றவன் எம்பெருமான்—என்பது மேலெடுத்த ஸ்ரீஸூக்தியின் கருத்து. இவ்விஷயத்தை ஸ்வாமி எந்த ப்ரமாணங்கொண்டு அருளிச்செய்தார்? என்று ஆராய்ச்சி செய்ததில் அடியேனுடைய புத்திக்கு எட்டியதை இங்கு விவரிக்கிறேன். ஸ்வாமி யருளிச் செய்யும் ஸ்ரீஸூக்திகள் பெரும்பாலும் திருவாய்மொழியை யநுஸரித்தே யிருப்பவை யென்பது பெரியோர்களின் கொள்கை. இதை அடியேனுடைய

விமர்சனம் நன்கு ஸ்தாபித்திருக்கின்றது. ப்ரக்ருத விஷயத்தைப்பற்றி விமர்சித்ததில், திருவாய்மொழியின் முதற்பதிகத்தில் 4, 5, 6 ஆம் பாட்டுக்களில் முறையே நம்மாழ்வாரருளிச் செய்த அர்த்தத்தையே திரட்டி *ஸ்வாதீநேத்யாதி ஸ்ரீஸூக்தியை ஸ்வாமியருளிச் செய்தாரென்று அறுதியிடப்படுகின்றது. *நாமவனிவனுவன்* என்கிற நாலாம் பாட்டின் கருத்தாவது—நாம் முதலான தன்மைப் பொருள்களும், அவன் இவன் உவன் என்கிற ஆண்பால் சுட்டுப் பொருள்களும், அவள் இவள் உவள் என்னும் பெண்பால் சுட்டுப்பொருள்களும், எவள் என்கிற பெண்பால் வினைப்பொருளும், அவர் இவர் உவர் என்னும் பலர்பால் சுட்டுப்பொருள்களும், அது இது உது என்னும் ஒன்றன்பால் சுட்டுப் பொருள்களும், எது என்னும் ஒன்றல்பால் வினைப்பொருளும், நசிக்குந் தன்மையுள்ள பொருள்களும், இவை உவை அவை என்னும் பலவின்பால் சுட்டுப்பொருள்களும், நல்ல வஸ்துக்களும் கெட்ட வஸ்துக்களும் எதிர்காலப் பொருள்களும் இறந்தகாலப் பொருள்களும் ஆகின்ற எல்லாப் பொருள்களும் அந்த ஸர்வேச்வரனேயாம் (அதாவது) ஸர்வேச்வரனிட்ட வழக்கேயாம் என்பதாம். உலகத்திலுள்ள சேதநாசேதநப் பொருள்களெல்லாம் இந்தச் சிறிய பாட்டில் உக்திவைசித்திரியாலே அடக்கப்பட்டு, இவையெல்லாவற்றினுடையவும் ஸ்வரூபம் பகவானுடைய அதீனம் என்று தெரிவிக்கப்பட்டபடியால் இது தன்னையே "ஸ்வாதீநத்ரிவித சேதநாசேதந ஸ்வரூப" என்றார் ஸ்வாமி.

இதற்கடுத்த ஐந்தாவது பாட்டு *அவரவர் தமதமது* என்பது. இதன் கருத்தாவது, உலகில் பலவகைப்பட்ட அதிகாரிகள் இருக்கின்றார்களே; அவரவர்கள் தம்தமது உணர்ச்சிக்கு எட்டியபடியே ஓரோ தெய்வங்களை ஸ்வாமிகளாக வெண்ணி ஆச்ரயிப்பர்கள்; இப்படி அவரவர்களால் தொழப்படுகின்ற அந்தந்த தெய்வங்கள் அவரவர்கள் விரும்பின பலன்களைக் கொடுப்பதில் குறையற்றே யிருக்கின்றன; எதனாலே யென்னில்; ஸர்வஸ்வாமியான ஸ்ரீமந் நாராயணன் அவரவர் தமதமது அத்ருஷ்டாநுஸாரமாய்ப் பலன்பெறும்படியாக அந்தந்த தெய்வங்களுக்கு அந்தர்யாமியா யெழுந்தருளி யுள்ளான்; அதனாலேதான்—என்பதாம். இதனால் சொல்லிற்றாவ தென்னென்னில்; உலகத்தில் நடக்கிற ரக்ஷணத்தொழில் யாவும் எம்பெருமானுடையதே; பிரமன் சிவனிந்திரன் முதலிய இதர தெய்வங்களைக் குறித்தும் மற்றும் க்ஷுத்ர தெய்வங்களைக் குறித்தும் அவரவர்கள் வழிபாடுகள் செய்து, தாம்தாம் கோரின பலன்களைப் பெறுவதாகக் கண்டாலும் அதுவும் எம்பெருமான் தானே அத்தெய்வங்களுக்கு உள்ளீடாக விருந்து நடத்துகிற ரக்ஷணமேயன்றி அத்தெய்வங்களே சுதந்திரமாகச் செய்து விடுகிற ரக்ஷணமன்று என்றதாயிற்று. *நஹி பாலந ஸாமர்த்யம் ருதே ஸர்வேச்வரம் ஹரிம்* என்றும், *ந ஸம்பதாம் ஸமாஹாரே விபதாம் விநிவர்த்தநே, ஸமர்த்தோ த்ருச்யதே கச்சித் தம் விநா புருஷோத்தமம்* என்றுமுள்ள பிரமாணங்களை யடியொற்றி யருளிச் செய்ததாமிது. ஆக இந்தப் பாசுரத்தின் ப்ரமேயத்தையும் சேர்த்துக்கொண்டு ஸ்வாதீநத்ரிவித சேதநா சேதநஸ்வரூப ஸ்திதி" என்றார் ஸ்வாமி ஸ்திதியாவது ரக்ஷணமே.

இனி, இதற்கடுத்த ஆறுவது பாட்டு *நின்றனரிருந்தனர்* என்பது. இப்பாட்டின் கருத்தாவது, நிற்பவர்கள் இருப்பவர்கள் கிடப்பவர்கள் திரிபவர்கள் ஆக இப்படிப்பட்ட ப்ரவ்ருத்தி சீலர்களும், நில்லாதவர்கள் இராதவர்கள் கிடவாதவர்கள் திரியாதவர்கள் ஆக இப்படிப்பட்ட நிவ்ருத்தி சீலர்களும் எம்பெருமானிட்ட வழக்கே யென்பதாம். இதில், ப்ரவ்ருத்தி சீலர்களையும் நிவ்ருத்தி சீலர்களையும் சொல்லி யிருந்தாலும் அவர்கள் இங்கு விவக்ஷிதர்களல்லர்; கீழே *நாமவனிவனுவன்* என்கிற பாட்டிலேயே தர்மிகளான ஸகலரையும் சேரப்பிடித்தெடுத்து அவர்கள் யாவரும் எம்பெருமானிட்ட வழக்கே யென்பது சொல்லி முடிந்த விஷயமாதலால் இப்பாட்டு அத்தோடு புநருக்தமாகக் கூடாது; அதில் சொல்லப்படாத விஷயமே இங்கு சொல்லப்பட்டதாக வேண்டும்; ஆகவே, ப்ரவ்ருத்தி நிவ்ருத்திமான்கள் எம்பெருமானிட்ட வழக்கு என்று சொல்லுகிற விப்பாசுரமானது, அவரவர்களின் ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளாகிற தர்மங்கள்

எம்பெருமானிட்ட வழக்கே யென்று சொல்லிற்றாகிறது. இப்போது, நின்றனரிருந்தனரித் யாதிக்குப் பொருள்—நிற்றல் இருத்தல் கிடத்தல் திரிதலாகிற ப்ரவ்ருத்திகளும், நில்லாமை இராமை கிடவாமை திரியாமையாகிற நிவ்ருத்திகளுமெல்லாம் எம்பெருமான தீனமே யென்கை.

நின்றனர் என்கிற சொல்லுக்கு நிற்றல் என்னும் பொருள் எங்ஙனே கொள்ளக் கூடுமென்று சிலருடைய உள்ளம் கலங்கியே யிருக்கும்; அன்னவர்களுக்குத் தெளிவு பிறக்கச் சொல்லுகிறோம். வேதத்தில், யாகஞ் செய்பவன் ஸோமபானஞ் செய்ய வேண்டுமென்று சொல்லப்பட்டது. ஸோமபானமானது ஸோமலதையின் ரஸத்தைப் பருகுவது. [ஸோமலதை—ஆட்லாங்கொடி யென்பர்.] அந்த லதையை எப்படி ஸம்பாதிப்பது? காடுகளில் சென்று ஸம்பாதித்து வருவதா? அல்லது விலைகொடுத்து வாங்குவதா? என்று விசாரம் வருகையில், *கோ அர்க்கமேவ ஸோமம் கரோதி* என்கிற வேதவாக்கியமானது பசுவைக் கொடுத்து ஸோமலதை வாங்கவேண்டு மென்றது; அந்த வேதத்திலேயே மற்றோரிடத்தில் *அருணயா பிங்காக்ஷ்யா ஸோமம் க்ரீணாதி* என்று ஓதிற்று. ஸோமலதையின் க்ரயமான பசு சிவப்பு நிறமுள்ளதாயும் பிங்கவர்ணமான கண்ணுடையதாயுமிருக்க வேண்டுமென்று சொல்லிற்று. ஆக, சிவந்த பசுவைக்கொண்டு ஸோமலதையை வாங்கவேணு மென்று சொல்லி யிருந்தாலும், பசுவைக் கொண்டு வாங்குவதென்பது முன்னமே ப்ராப்தமாயிருப்பதால், அப்ராப்த மானதே விதிவிஷயமாகவேண்டுதலால் இங்குச் சிவப்பு மாத்திரமே விதிக்கப் படுகிற தாகக் கொள்ளப்படுகின்றது. *நின்றனரிருந்தனர்* என்னுமிவ்விடத்திலும் இதே ரீதிதான்.

மற்றொரு த்ருஷ்டாந்தமுங் கேண்மின்; அபிசாரகருமத்தில் ரித்விக்குக்கள் தலைப்பாகையுடன் உலாவவேண்டுமென்று வேதத்தில் ஓரிடத்தில் சொல்லிற்று, மற்றோரிடத்தில் *லோஹிதோஷ்ணீஷா ருத்விஜ: ப்ரசரந்தி* என்று ஓதிற்று. அதாவது, சிவப்புநிறமுள்ள தலைப்பாகையுடையவர்களாக ரித்விக்குக்கள் உலாவக் கடவர்களென்கை. இவ்விடத்திலும் தலைப்பாகை என்பது ஏற்கெனவே ப்ராப்த மானபடியால் அதில் லோஹிதத்வம் [சிவப்பு] மாத்திரமே ப்ரக்ருதத்தில் விதிவிஷய மென்று கொள்ளப்படுகிறது.* நின்றனரிருந்தனர் பாசுரத்தின் ப்ரக்ரியையும் இதுவே தான். ப்ரவ்ருத்திமான்களும் நிவ்ருத்திமான்களும் சொல்லப்பட்டாலும் ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி மாத்ரமே இங்கு விவக்ஷிதமென்க. ஆக இந்தப் பாசுரத்தின் ப்ரமேயத்தையும் சேர்த்துக்கொண்டு "ஸ்வாதீந த்ரிவித சேதநாசேதந ஸ்வரூப ஸ்திதி ப்ரவ்ருத்திபேதம்" என்றருளிச்செய்தார் ஸ்வாமி. எனவே, திருவாய்மொழிப் பாசுரங்கள் மூன்றின் பொரார்த்த ஸங்க்ரஹமாக *ஸ்வாதீநேத்யாதி சூர்ணையை எம்பெருமானார் அருளிச் செய்தா ரென்றதாயிற்று. .... ... ... 22

## 23. ஸம்ப்ரதாய ஸங்கேத விவரணம்

நம்முடைய பூருவாசாரியர்கள் கம்பீரமாகச் சில ஸ்ரீஸூக்திகளையருளிச் செய்து வைக்கின்றனர். அவை ஸங்கேதச் சொற்களாக வழங்குகின்றன. அவற்றின் பொருள் கள் ஆங்காங்கு வியாக்கியானங்களினால் தெரியவரும். அப்படிப்பட்ட ஸ்ரீஸூக்திகளில் சில காட்டி விவரிக்கிறோமிங்கு.

### —பண்டை நாளில் பிறவி—

இதுவொரு ஸங்கேதமாய்ப் பரமபோக்யமான ஸ்ரீஸூக்தி. ஆசார்யஹ்ருதயத்தில் (31) "பண்டைநாளில் பிறவி உண்ணாட்டுத்தேசிறே" என்று வருகிறது. திருவாய் மொழியில் ஒன்பதாம்பத்தில் இரண்டாம்பதிகம் *பண்டைநாளாலே நின் திருவருளும்* என்று தொடங்குவது. அதில் முதல் மூன்று பாசுரங்களில் வரிசையாக ஒரு விலக்ஷண விஷயம் சொல்லப்படுகிறது. முதற்பாட்டில் "நின்கோயில் சீய்த்துப் பல்படிகால் குடி

குடிவழிவந் தாட்செய்யுந் தொண்டர்" என்கிறது. இரண்டாம் பாட்டில் "உன் பொன்னடிக்கடவாதே வழிவருகின்றவடியார்" என்கிறது. மூன்றும் பாட்டில் "தொடர்ந்து குற்றேவல்செய்து தொல்லடிமை வழிவருந்தொண்டர்" என்கிறது. இவற்றால், ஆத்மாவின் இயற்கை வடிவமான தாஸ்யத்திற்கு விரோதியான அஹங்காரம் குடிபுகாததாய், கைங்கரியத்திற்கு அநுரூபமான குடிப்பிறவி இவ்வளவு விசதமாக வேறு எந்த பதிகத்திலுங் காணப்படவில்லை. இச்சிறப்பைத் திருவுள்ளம்பற்றிப் பூருவர்கள் "பண்டை நாளில் பிறவி" என்று ஒரு ஸங்கேத மிட்டனர். *பண்டைநாளாலே யென்கிற பதிகத்தில் பலகாலும் சிறப்பித்துக் கூறப்படுகிற பிறவி என்றபடி.

— ஐந்து நகர்கள் —

தென்னகர், நன்னகர், மாநகர், நீணகர், பெருநகர் என்று ஐந்து நகர்கள் ஆசார்ய ஹ்ருதயம் மூன்றும் ப்ரகரணத்தில் குறிக்கப்படுகின்றன. தென், நன், மா, நீள், பெரு என்று விசேஷணங்களில் பேதமொழிய, நகர் என்பதே ஐந்திடங்களிலும் விசேஷ்யம். மேலேகுறித்த விசேஷணங்கள் பொதுவாகச் சிறப்பையே தெரிவிக்கும். எவ்வூருக்குத் தென்னகரென்று பெயர்? எவ்வூருக்கு மாநகரென்று பெயர்?.........என்று கேட்டால் பாசுரங்களின் உபஸ்திதியும் விசேஷாநுபவமுமில்லாதவர்கள் விடையிறுக்க முடியாது.

(1) மலைநாட்டுத் திருப்பதிகளுள் ஒன்றான திருவல்லவாழென்னும் திருப்பதியைப்பற்றி நம்மாழ்வாரருளிச்செய்த *மானேய்நோக்குப் பதிகத்தில் ஈற்றுப் பாசுரத்தில் "ஆயிரத்துள்ளிவைபத்தும் திருவல்லவாழ்ச் சேமங்கொள் தென்னகர்மேல்" என்றருளிச்செய்திருக்கையாலே திருவல்லவாழ்க்குத் தென்னகரென்று ஸங்கேதமிட்டனர்.

(2) ஒப்பிலியப்பன் ஸந்நிதியென்கிற திருவிண்ணகர்ப்பதிக்கு இட்டருளின திருவாய்மொழியில் (6-3-2)* தெண்டிரைப்புனல்சூழ் திருவிண்ணகர் நன்னகரே * என்றருளிச்செய்திருக்கையாலே திருவிண்ணகர்க்கு நன்னகரென்று ஸங்கேதமிட்டனர்.

(3) தென் திருப்பேரைத் திருப்பதிக்கு இட்டருளின * வெள்ளைச்சுரிசங்கு பதிகத்தில் * ஏர்வளவொண்கழனிப் பழனத் தென் திருப்பேரெயில் மாநகரே * என்றருளிச் செய்திருக்கையாலே தென் திருப்பேரைக்கு மாநகரென்று ஸங்கேதமிட்டனர்.

(4) திருவாறன் விளையென்னும் மலைநாட்டுத்திருப்பதிக்கு இட்டருளின *இன்பம் பயக்கவென்னும் பதிகத்தில் "திருவாறன்விளை யென்னும் நீணகரமதுவே" என்றருளிச் செய்திருக்கையாலே திருவாறன்விளைக்கு நீணகரென்று ஸங்கேதமிட்டனர்.

(5) சோழநாட்டுத் திருப்பதிகளுள் ஒன்றான அப்பக்குடத்தான் ஸந்நிதிக்குத் திருமங்கையாழ்வாரிட்டருளின * கையிலங்காழி சங்கன் * என்னும் பதிகத்தில் *பெருவரை மதில்கள் சூழ்ந்த பெருநகர் அரவணைமேல் * என்றருளிச் செய்திருக்கையாலே அத்தலத்திற்குப் பெருநகரென்று ஸங்கேதமிட்டனர்.

— உறையிலிடாதவர் —

திருமழிசைப்பிரானுக்கு இதுவொரு ஸங்கேதத் திருநாமம். (ஆசார்யஹ்—155.) எதை உறையிலிடாதவர்? என்று கேள்வி பிறக்கும். உறையிலிடுவதென்கிற வழக்கு கத்தியைப் பற்றியதாதலால், உருவின வாளை உறையிலிடாதவர் என்பதாகும். *வாள் வீசும் பரகாலன் கலிகன்றி* என்கிறபடியே திருமங்கையாழ்வார்க்குக் கத்தி நிரூபமாகவுண்டேயல்லது திருமழிசைப்பிரானுக்குக் கத்தியிருந்ததாக ப்ரஸித்தியில்லையே; ஆகவே உருவின்வாளை உறையிலிடாதவரென்று திருமழிசைப்பிரானை எப்படிச் சொல்லலாம்? என்று சிலர் சங்கிக்கக்கூடும். 'உருவினவாளை உறையிலிடாதவர்' என்பதற்கு ஸ்வாபதேசார்த்தத்தில் பொருள் கொள்ளவேணும். ப்ரதிபக்ஷிகளை நிரஸிப்பதற்காகவே கத்தியை உறையிலிடாமல் கையிலே கொண்டிருப்பது வீரர்களின் வழக்கம். அப்படியே, தேவதாந்தரங்களுக்குப் பரத்வஞ் சொல்லுகிற ப்ரதிபக்ஷிகளை நிரஸித்து

ஸ்ரீமந்நாராயணன பரத்வத்தை ஸ்தாபித்து வெற்றி பெறுவதற்கு எப்போதும் ஸன்னத்த ராயிருப்பவர் இ[redacted]வார்—என்பது பற்றியே [redacted] உறையிலிடாதவரென்று திருநாமஸங்கேதமாயிற்று. இவர் ப்ரபந்தம் தொடங்கும்போதே *நான்முகனை நாராயணன் படைத்தான்; நான்முகனும் தான் முகமாய்ச் சங்கரனைத் தான் படைத்தான்* என்றார். இடையில், *பொல்லாத தேவரைத் தேவரல்லாரைத் திருவில்லாத் தேவரைத் தேறேன்மின் தேவு* (2434) என்றார். முடிவில் *இனியறிந்தேனீசற்கும் நான்முகற்குந் தெய்வம், இனியறிந்தே னெம்பெருமானுன்னை* என்றார். திருச்சந்த விருத்தத்திலுமிப்படியே பல பாசுரங்கள் காணலாம். *காணிலும் முருப்பொலார் செவிக்கினாத கீர்த்தியார், பேணிலும் வரந்தரமிடுக்கிலாத தேவரை, ஆணமென்றடைந்துவாழு மாதர்கள்* என்றும் *வந்தவாணனீரைஞ்ஞூறு தோள்களைத் துணித்த நாள், அந்த வந்தவாறுமம் அமரரேயறிவரே* என்றுமுள்ள பல பாசுரங்கள் காண்க.

— புஷ்ப த்யாக போக மண்டபங்கள் —

'கோயில் திருமலை பெருமாள்கோயில்' என்று மூன்று திவ்ய தேசங்களையே நூற்றெட்டுத் திருப்பதிகளுள் தலையாகக் கொண்டு எங்கும் வழங்கிவருகிறார்கள். இம்மூன்று திருப்பதிகட்குத் தலைமையுண்டானதற்கு யாது காரணமென்னில், நம்மாழ்வார் தமது முதற்ப்ரபந்தமாகிய திருவிருத்தத்தில் இம்மூன்று திவ்யதேசங்களை மாத்திரமே மங்களா சாஸனம் செய்தருளியதுதான் காரணம். இம்மூன்று திவ்ய தேசங்களைப் புஷ்ப த்யாக போகமண்டபங்களென்றும் பூருவர்கள் ஸங்கேதித்ததுண்டு. (ஆசார்யஹ்ருதயம்—85.) புஷ்பமண்டபமென்பது திருமலை; த்யாக மண்டபமென்பது பெருமாள் கோயிலென்கிற காஞ்சி; போகமண்டபமென்பது கோயில். எங்ஙனேயென்னில்; நம்மாழ்வார் திருமலை விஷயமாக அருளிச்செய்த *ஒழிவில்காலப் பதிகத்தில்* வானவர் வானவர்கோனொடுஞ்சிந்து பூமகிழும் திருவேங்கடம்* என்று அருளிச்செய்திருக்கையாலே திருமலை புஷ்பமண்டப மெனப்பட்டது. *வேகவத்யுத்தரே தீரே புண்யகோட்யாம் ஹரிஸ் ஸ்வயம், வரதஸ் ஸர்வ பூதாநாம் அத்யாபி பரித்ருச்யதே* என்கிற புராண வசனப்படியே வேண்டுவார் வேண்டின படியே தியாகம் செய்யும் வரதன் எழுந்தருளியிருக்குமிடமாகையாலே பெருமாள்கோயில் த்யாகமண்டபமெனப்பட்டது. *பொங்கோதஞ் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும் அங்காதுஞ்சோராமேயாள்கின்ற வெம்பெருமான்றனக்கிடமான திருவரங்கம் பெரிய கோயிலானது *தெண்ணீர்ப் பொன்னிதிரைக் கையாலடிவருடப்பள்ளி கொள்ளும்* என்கிற படியே திவ்யபோக ஸ்தானமாயிருக்கையாலே போகமண்டப மெனப்பட்டது. ... ... .... 23

## 24. பகவத்ராமாநுஜ ஸூக்தி வைலக்ஷண்யம்

கீதாபாஷ்யத்திலோ ஸ்ரீபாஷ்யத்திலோ ஸ்வாமியருளிச்செய்யும் ஸ்ரீஸூக்திகளில் வெகுஸமயுருக்கும்படியான வொரு அதிசயம் அடியேனுடைய அநுபவத்தில் காண்கிறது. இவ்வதிசயம் வேறு எந்த பாஷ்யத்திலும் லக்ஷத்தும் காணமுடியாது. அஃது என்னென்னில், மூலத்தில் பரமபுருஷனுடைய ப்ரஸ்தாவம் வருமிடங்களில் பெரும்பாலும் அவனுடைய ஸ்வரூபரூபகுண விபூதிப்பெருமைகளை விளக்கிப் பல விசேஷணங்களை யடுக்கடுக்காக அருளிச் செய்தாலொழிய ஸ்வாமிக்குத் தரிப்பு உண்டாவதில்லை. இங்கு ஓரிடமெடுத்துக் காட்டுகிறேன்.

பகவத்கீதையில் ஒன்பதாமத்யாயத்தில் முடிவு ச்லோகம் *மந்மநா பவ மத்பக்த:* என்பது. இதில் மந்மநா பவ, என்பதற்கு என்னிடத்தில் மனத்தை வைத்திடு என்று பொருள். இப்பொருள் யாவர்க்கும் தெரிந்ததே, எளிதில் தெரியக்கூடியதே என்கிற கருத்தினால் மத்வபாஷ்யகாரர் அடியோடு அர்த்தம் செய்யவேயில்லை. சங்கராசாரியர் "மயி வாஸுதேவே மந: யஸ்ய தவ ஸ த்வம் மந்மநா பவ" என்று உரைத்தார். என்னிடத்தில் என்பதற்கு வாஸுதேவனாகிய என்னிடத்தில் என்று அர்த்தம் என்ப

தாக விவரித்தாராயிற்று. இனி ஸ்வாமி பாஷ்யத்தை யெடுத்துக் கொள்வோம். அவ்விடத்துப் பங்க்திகளை ஸேவிக்கும்போது கல்நெஞ்சினனுக்கும் கண்ணீர் பெருகும்:

"மந்மநா பவ—மயி ஸர்வேச்வரே நிகிலஹேயப்ரத்யநீக கல்யாணைகதாநே ஸர்வஜ்ஞே ஸத்யஸங்கல்பே நிகிலஜகதேககாரணே பரஸ்மிந் ப்ரஹ்மணி புருஷோத்தமே புண்டரீகதலாமலாயதேக்ஷணே ஸ்வச்சநீலஜீமூத ஸங்காசே யுகபதுதித திநகரஸஹஸ்ரஸத்ருசதேஜஸி லாவண்யாம்ருதமஹோததௌ உதாரபீவரசதுர்பாஹௌ அத்யுஜ்ஜ்வல பீதாம்பரே அமலகிரீட மகரகுண்டலஹாரகேயூரகடகபூஷிதே அபாரகாருண்ய ஸௌசீல்ய ஸௌந்தர்ய மாதுர்யகாம்பீர்யௌதார்ய வாத்ஸல்யஜலதௌ அநாலோசிதவிசேஷாசேஷ லோகசரண்யே ஸர்வஸ்வாமிநி தைலதாராவத் அவிச்சேதேந நிவிஷ்டமநா பவ"

என்கிற இவ்வளவும் அதிகம்பீரமாக அவதரித்துள்ள ஸ்வாமி ஸூக்தியாகும்.

இந்த மஹாவாக்யத்தில் எம்பெருமானைப் பற்றின விசேஷணங்கள் பதினெட்டு உள்ளன. இத்தனை விசேஷணங்கள் இங்கு அவசியமோ வென்று சிலர் நினைக்கக் கூடும். உண்மையில் அவச்யமன்றென்றும் சொல்லலாம். விஸ்தரத்தில் ருசியில்லாதவரான ஸ்வாமி இவ்வளவு ஏன் அருளிச் செய்தாரென்று ஆலோசிக்க வேண்டும். ஸ்ரீவைஷ்ணவர்களிலும் பலர் இதற்கு நிதானமறியாரென்றே அடியேன் எண்ணுகிறேன். ஸ்வாமி யெம்பெருமானார் *பண்டருமாறன் பசுந்தமிழ் ஆனந்தம் பாய்மதமாய் விண்டிட வெங்களிராமானுசமுனி வேழம்* என்றும், *நவமிக்க செந்நெற்குமரிக் குறையல்கலைப் பெருமானொலிமிக்க பாடலையுண்டு தன்னுள்ளம் தடித்து அதனால் வலிமிக்க சீயமிராமானுசன்* என்றும் நூற்றந்தாதியில் அமுதனார் அருளிச் செய்தபடியே ஆழ்வாரருளிச் செயற்கடலில் அநவரதம் அவகாஹித்தவராதலால் அதன் பலனாகவே இப்படிப்பட்ட ஸ்ரீஸூக்திகளை ஸ்வாமி பலகாலும் அருளிச்செய்ய ப்ராப்தமாகிறது. கண்ணபிரான் தன்னிடத்தில் பக்தி பண்ணும்படி விதிக்கிற இவ்விடத்தில் எம்பெருமான் றன்னுடைய இத்தனை விசேஷங்களை யெடுத்துக் காட்டாவிடில் எங்ஙனே பக்தியுண்டாகும். அவனுடைய ஸ்வரூப வைலக்ஷண்யத்தையும் திவ்ய மங்கள விக்ரஹ ஸௌந்தர்யத்தையும் திவ்ய பூஷணாதி வைசிஷ்ட்யத்தையும் திருக்கல்யாண குண பௌஷ்கல்யத்தையும் எடுத்துக் காட்டுவதானது கண்ணபிரான் தானே இவற்றை யெடுத்துரைத்து இவற்றிலே யீடுபடும்படி சொல்லுவதாகவன்றோவுள்ளது. இதர பாஷ்யகாரர்களுக்கு திவ்ய ப்ரபந்த ஸம்பத்து சிறிதுமில்லாமையினாலேயே அவர்கள் இப்படிப்பட்ட விசேஷணங்களை ஓரிடத்தில்கூட எழுதிவைக்க ப்ரஸக்தியில்லையாயிற்று.

ஸ்ரீபாஷ்யத்திலும் ஓரிடம் காட்டுகிறோம் காண்மின். அதில் கடைசியான ஸூத்ரம் *அநாவ்ருத்திச் சப்தாத் அநாவ்ருத்திச் சப்தாத்* என்பது. இங்கு மூலத்தில் பரமபுருஷனுடைய ப்ரஸ்தாவமேயில்லை. பரமபுருஷனைச் சென்றடைந்த முக்தர்கள் மீண்டும் இந்நிலத்தில் திரும்பிவருவது உண்டா இல்லையா? என்கிற சங்கைக்குப் பரிஹாரமாக இந்த ஸூத்ரம் அவதரித்துள்ளது. 'புநராவ்ருத்தி கிடையாதென்று சாஸ்த்ரம் சொல்லியிருக்கையாலே அது இல்லை' என்றிவ்வளவே ஸூத்ரம் சொல்லுகின்றது. இதை விவரிக்குமிடத்து ஸ்வாமி யெம்பெருமானார் "பகவானொருவனுளனென்று எந்த சாஸ்த்ரம் அறிவிக்கின்றதோ அந்த சாஸ்த்ரமே பகவானை அடைந்தவர்க்குப் புநராவ்ருத்தியில்லை யென்றும் தெரிவிக்கின்றது" என்றருளிச் செய்கிறார். இங்கு ["யதா பரமபுருஷ அஸ்தி சப்தாத் அவகம்யதே"] என்றிவ்வளவே அருளிச்செய்தால் போதுமானது. ஆயினும், ஸ்வாமி இங்கே அந்த பரமபுருஷனுக்கு இட்டருளுகிற விசேஷணங்களைப் பாரீர்:—

"யதா நிகிலஹேயப்ரத்யநீக கல்யாணைகதாந: ஜகஜ்ஜந்மாதிகாரணம் ஸமஸ்த வஸ்துவிலக்ஷண: ஸர்வஜ்ஞ: ஸத்யஸங்கல்ப: ஆச்ரித வாத்ஸல்யைகஜலதி:

பிரஸ்த ஸமாப்யதிகஸம்பாவந: பரமகாருணிக: பரப்ரஹ்மாபிதாந: பரம புருஷ:........"
என்று இவ்வளவு விசேஷங்களை யருளிச்செய்கிறார்.

இங்ஙனே ஓரிடமன்று இரண்டிடமன்று; பலபல விடங்கள் காணலாம். மற்ற பாஷ்யகாரர்களுக்கு இப்படிப்பட்ட வாக்யவிந்யாஸம் பண்ணத்தெரியாமையில்லை. பகவானிடத்தில் பக்தியில்லாமையுமில்லை. ஆயினும் அவர்களுடைய கையிலிருந்து இப்படிப்பட்ட ஸ்ரீஸூக்திகளில் ஏகதேசமும் அவதரிக்கக்காண்கின்றிலோம். *செந்தாமரைத் தடங்கண் செங்கனிவாய் செங்கமலம் செந்தாமரையடிக்கள் செம்பொன் திருவுடம்பே* என்றும் *கைவண்ணம் தாமரை வாய் கமலம்போலும் கண்ணிணையுமரவிந்தமடியுமஃதே* என்றும் *செக்கமலத்தலர்போலும் கண்கைகால் செங்கனிவாய், அக்கமலத்திலைபோலுந் திருமேனி யடிகளுக்கே* என்றும் வாய்வெருவுகின்ற ஆழ்வார்களின் ஸாரச்சொற்களிலே ஆழங்காற் பட்டிருக்குமாசிரியர்கட்கு இப்படிப்பட்ட ஸ்ரீஸூக்தி விந்யாஸவைபவம் வாய்ப்பது வியப்பன்றே.

பகவத்கீதையில் *பரித்ராணாய ஸாதூநாம்* என்ற விடத்திற்கு பாஷ்யமருளிச்செய்யாநின்ற ஸ்வாமி ஸாதுக்கள் யாவர்? என்பதை விவரிக்குமிடத்து ஆழ்வார்களே ஸாதுக்களென்று ஸுஸ்பஷ்ட சப்தங்களால் விளக்கியருளினவரன்றோ நம்பாஷ்யகாரர். *காணவாராயென்றென்று கண்ணும்வாயும் துவர்ந்து, *ஒரு பகலாயிரமூழியாலோ வென்று தளர்ந்து, *நினைந்துநைந்துள் கரைந்துருகி நிற்பவர்களே ஸாதுக்களென்று அங்கு அருளிச்செய்திருக்கிற பரமபோக்ய பங்க்திகளை திவ்யஸூக்திரஸிகர்கள் சிந்தனை செய்யவேணும். ... ... ... ... ... 24

## 25. யசோதையும் - கோபிகளும் - கண்ணனும்

(கண்ணபிரானுடைய தீம்புகளைக் கோபிகள் யசோதைப்பிராட்டி பக்கலில் முறையிடுதலும், யசோதை கண்ணனை சிக்ஷித்தலும்.)

[பெரியாழ்வாருடைய ஆச்சரியமான அநுபவங்களில் இதுவொரு விலக்ஷணாநுபவம். பெரியாழ்வார் திருமொழி யிரண்டாம்பத்தில் *வெண்ணெய்விழுங்கி வெறுங்கலத்தை* யென்னும் பதிகத்தில் சில பாசுரங்களின் அநுபவம்.]

கோபிகள்:—யசோதை நங்காய்! நீ நல்லபிள்ளைபெற்றாயம்மா; வீடுதோறும் புகுந்து புண்ணிலே புளிரஸம் பெய்தாற்போன்று பொறுக்கவொண்ணாத தீமைகளையன்றோ உன் மகன் செய்கின்றான். இவனுடைய அண்ணனான பலராமனும் இச்சேரியில் வளர்ந்து திரிகின்றானே; அவனால் ஒருவர்க்கு ஒருவித கஷ்டமுண்டா? அவனைப் பற்றி ஒருவராவது ஒரு நாளாவது முறையிடுவதுண்டா? அவன் தம்பியென்று சொல்லிக்கொள்ளுகிறவிவன் அவனோடு சிறிதும் சேர்த்தியுடையவனாக இல்லையே; இவனை நீ இப்படி தீம்பிலே தகணேறும்படி விட்டிருப்பது நியாயமா? உடனே அவனை அருகேயழைத்துக்கொள்.

யசோதை:—ஆய்ப்பெண்டுகளே! 'உன்மகன் தீமைசெய்கிறான், தீமைசெய்கிறான்' என்கிறீர்களே யல்லது இன்னதீமையென்று சொல்லுகிறீர்களில்லையே; இன்னது செய்தானென்று சொல்லுங்கள், கேட்போம். (கண்ணன் தீம்புகளைக் கேட்க யசோதைக்கு வெகு குதூஹலம்.)

கோபிகள்:—நாங்கள் வெகு சிரமப்பட்டுச் சேமித்துவைத்த வெண்ணெயைச் சிறிதும் மிச்சப்படாமல் எடுத்து விழுங்கிவிட்டானே; எங்கள் மகன் உன் வீட்டில் வந்து இப்படி விழுங்கினானாகில் நீ பொறுத்திருப்பாயா?

யசோதை:—கோபிகாள்! என் மகன் வெண்ணெயைத் தானே விழுங்கினான்; வேறொன்றும் செய்திலனே. இதற்கென்ன ப்ரமாதம்! எவ்வளவு வெண்ணெயை

அவன் விழுங்கினானே அவ்வளவும் நான் கொடுத்துவிடுகிறேன்; இதோ பெற்றுக் கொள்ளுங்கள்; தெருவதிரக் கூப்பாடு போடாதீர்கள்; வாளாவிருங்கள்.

கோபிகள்:—அம்மா! வெண்ணெய் விழுங்கினதொன்றேயோ? அது மாத்திரமே யானால் நாங்கள் இவ்வளவு வருந்துவோமா? அது வைத்திருந்த பாத்திரம் எப்படிப் பட்டது தெரியுமா? அதன் அருமை பெருமை உனக்கென்ன தெரியும்? அதைப் பாறைமேலிட்டு உடைத்திட்டானே! இப்படியொரு கேள்வியற்ற செயலைச் செய்யலாமா?

யசோதை:—பெண்காள்! அவனையே நீங்கள் கேட்கலாகாதா? 'ஏனப்பா! வெண்ணெயைத் தான் விழுங்கினாய், வெறுங்கலத்தை ஏதுக்கு இப்படியுடைக்கிறாய்? இதன்மேல் உனக்கு என்ன கோபம்?' என்று நீங்களே அவனைக் கேட்டிருக்கலாமே.

கோபிகள்:—யசோதாய்! நாங்கள் அது கேளாமலில்லை; கேட்டோம்; கலத்தைக் கல்லிலிட்டு உடைக்கும்போது செவிக்கினிய ஓசையொன்று உண்டாகிறதாம்; அதைக் கேட்பதில் தனக்கு மிகுந்த குதூஹலமாம்; அதற்காகவே கலத்தையுடைப்ப தாகச் சொல்லுகிறான். இங்ஙனே பேசவன்றோ அவன் கல்வி கற்றிருக்கிறான். இப்படி ஒன்றல்ல இரண்டல்ல; வெண்ணெய் விழுங்கினதும் வெறுங்கலத்தை வெற்பிடை யிட்டதும் மாத்திரமேயா? ஒவ்வொரு மனையிலும் அவன் புகுந்து பொறுக்கொணாத படி செய்த தீமைகளை எங்களால் தடுக்கமுடியவில்லையே; இப்படி அவனை விட்டிராமே சடக்கென அழைத்துக்கொள்.

யசோதை கண்ணனையழைக்கிறாள்.

யசோதை:—கண்ணா! இப்படியும் தீம்பு செய்வாயோ? நீ நம் வீட்டைவிட்டு வெளியே செல்வது ந்யாயமேயன்று; இங்கு வந்து சேர்வாயாக; உடனே வந்துசேர்; காலதாமதம் செய்யாமல் சீக்கிரம் வந்து சேர். வாமனாவதாரத்தில் செய்த கள்வத்தை என்னிடமும் செய்யாதே வந்து சேர்; உன்னுடைய குழலழகையும் வாயழகையும் கண்டு உகப்பார் வீடுகளிலே சென்று நீ எதுசெய்தாலும் அவர்களுக்கு போக்யமாகும்; உன் வடிவழகிலே யீடுபட வறியாத பெண்களிடஞ் சென்று தீம்புகளைச் செய்யாதே வந்துசேர் பிரானே! உன்னுடைய பண்டைக்குலப் பெருமையை நன்கறிந்து கொண்டு, அதற்குத் தகாதபடி தீமைசெய்து திரியாமே வந்து சேர்.

(யசோதை இப்படிச் சொல்லியழைக்கவும் கண்ணன் வந்திலனாக,
ஒரு கோபியைப் பார்த்துச் சொல்லுகிறாள்.)

நங்காய்! இப்பிள்ளை முன்போலில்லையம்மா; முன்பெல்லாம் சொன்ன சொல் தட்டாது கேட்பன்; கூப்பிட்டால் உடனே வந்து நிற்பன். இப்போது அப்படியில்லை. எனக்கு அடியோடு அடங்குவதில்லையிவன். (என்று சொல்லிவிட்டு மறுபடியும் கண்ணனை நோக்கியே சொல்லுகிறாள்.)

கண்ணா! உன்னைப்பற்றி என் காதில் விழும் அபகீர்த்திகளைக் கேட்டாலோ உன்னைக் கட்டியடிக்க எவ்வளவோ கோபமுண்டாகிறது எனக்கு; ஆனால் உன் அஞ்சன மேனியைக் கண்டாலோ 'மாணிக்கமே யென்மணியே! என்று சொல்லி உருகவேண்டி யிருக்கிறதே யொழிய அடிக்கக் கையெழுவதில்லையப்பா; என் அஞ்சன வண்ணா! நம்முடைய குடிப்பெருமை உனக்குச் சிறிதும் தெரியவில்லையே!; உன்னைப்பற்றி அவமானமாக ஒருவர் ஒன்று சொன்னால் அது கேட்டுத் தரித்திருக்க என்னால் முடிய வில்லையே. உன்னுடைய ஸௌலப்ய ஸௌசீல்யாதி குணங்களுக்கு உகப்பாரில்லையே; அசலகத்தாரன்றோ பரிபவம் பேசுகிறார்கள். அவர்கள் நின்ற திக்கில் கூட நீ நிற்க லாகாதே; என் கண்மணீ! இங்கே வந்து சேர்.

[“பாவியேனுக்கிங்கே போதராயே” என்பது பாசுரத்தின் முடிவு. பாவியேனுக்கென்றது பரம ஸந்தோஷத்தோடு சொல்லிக் கொள்ளும் வார்த்தையேயொழிய வெறுப்புடன் சொல்லும் வார்த்தை யன்று. கீழே இவள் தானே *என்ன நோன்பு நோற்றாள் கொலோ இவளைப்பெற்ற வயிறுடையாள்! என்னும் வார்த்தையெய்துவித்தவிருடீகேசா !* என்று சொல்லியிருக்கையாலே, கண்ணன் தீம்பு செய்து வளர்வதைத் தனக்குப் பரமபாக்யமாக நினைத்திருப்பவளாதலால் பாவியேனுக் கென்றது 25
எதிர்மறையிலக்கணையால் பொருள்தரும்.] ... ... ....

## 26. நிகண்டுக்களின் கோளாறுகள்

இக்காலத்தில் பலர் நிகண்டுக்கள் எழுத விரும்புகிறார்கள். தம்தம் நெஞ்சில் தோன்றினபடியே எதையாவது எழுதி அச்சிட்டு வெளியிட்டுவிடுகிறார்கள். திருஞானசம்பந்தப்புலவரென்னுமொரு பெரியார் “சைவவைணவப்பெயர் விளக்கம்” என்றொரு நிகண்டு எழுதி சென்னையில் ஓர் அச்சுக்கூடத்தில் பதிப்பித்து வருகிறார். சைவ சம்பிரதாயத்திலும் வைணவ சம்பிரதாயத்திலும் தோன்றியுள்ள பல பெரியார்களின் பெயர்களை அகராதிமுறையில் வரிசைப்படுத்தி அவர்களின் வரலாறுகளையும் ஒருவாறு எழுதியுள்ளது இந்த நிகண்டில். இதில் சில பகுதிகளை நாம் யாத்ருச்சிகமாகக் காண நேர்ந்தது. ஸ்ரீவைஷ்ணவ ஆசிரியர்களின் பெயர்கள் சிலவற்றை உற்றுநோக்கினோம். பெரும்பாலும் விபரீதமாகவே காண்கிறது. அப்புள்ளார் என்கிற பெயரை யெழுதி அவருடைய வரலாறு எழுதிவருகையில் “இவர் திருவாய்மொழிப் பிள்ளையென்னும் ஆசிரியரின் சீடரான வரவரமுனியென்கிற மணவாளமாமுனியால் தாபிக்கப்பட்ட எட்டுதிக்சர்களில் ஒருவர். இவர் ஆத்ரேய குலத்துத் தோன்றியவர். பத்மநாபாசாரியரென்பவருடைய செல்வப்புதல்வர். வேதாந்ததேசிகரென்கிற உலகப்பிரசித்தரான பேராசிரியர் முதலானோர் இவருடைய சீடராவர்” என்று எழுதப்பட்டுள்ளது. இந்த விபரீதத்தை என்னவென்று சொல்லுவோம். மணவாளமாமுனிகளின் சிஷ்யர்களான அஷ்டதிக்கஜாசாரியர்களில் அப்புள்ளார் என்பவர் ஒருவருளரென்பது உண்மையே. அவர் ஆத்ரேயகுலத்தில் தோன்றியவருமல்லர். பத்மநாபாசாரியரென்பவருடைய புதல்வருமல்லர்; வேதாந்ததேசிகருடைய குருவுமல்லர். ஆத்ரேய பத்மநாபாசார்யருடைய புதல்வரான அப்புள்ளார் கடாதூரம்மாளென்னும் பேராசிரியருடைய பதம் பணிந்தவர். அவர் மணவாளமாமுனிகளுக்கு மிக முற்பட்டவர். அப்பேராசிரியரைப் பணிந்தவர் வேதாந்த தேசிகர் என்பது உண்மையே. ஆகவே அப்புள்ளாரென்னும் பெயரால் இருவருளர். ஒருவர் தேசிகருடைய ஆசாரியர். மற்றொருவர் மணவாளமாமுனிகளின் சிஷ்யர். உண்மை இப்படியிருக்க, தேசிகர் அப்புள்ளாருடைய சிஷ்யர் என்கிற வளவு அறிந்திருந்து அந்தக்கிடாம்பியப்புள்ளாரையும் மணவாளமாமுனிகளின் சிஷ்யரான அப்புள்ளாரையும் ஒருவராகவே மயங்கி விபரீதமாக எழுதிவிட்டார். இப்படி ஒன்றிரண்டல்ல; பல விபரீதங்கள் காண்கின்றன. பிள்ளைலோகாசார்யர் செய்த நூல்களைப் பிள்ளைப்பெருமாளையங்கார் செய்ததாகவும், அவர் செய்த நூல்களைப் பிள்ளைலோகாசாரியர் செய்ததாகவும் எழுதப்படுகிற இத்தகைய விபரீதங்களும் பல.

பல வருடங்களுக்கு முன்னமே அச்சிடப்பட்டு வெளிவந்திருக்கின்ற நிகண்டுகளிலும் இப்படிப்பட்ட விபரீதங்களை விபுலமாகக் காண்கிறோம். சென்னைப் பச்சையப்பன் கலாசாலைத் தமிழாசிரியர் ஆ. சிங்காரவேலு முதலியாரவர்கள் அபிதான சிந்தாமணி யென்றொரு பெரிய நிகண்டு இயற்றி 1934-ஆம் வருடத்தில் அச்சிடுவித்து வெளியிட்டிருக்கிறார். அதில் மொத்தம் 1634 பக்கங்களுள்ளன. அதில் 1242-ஆம் பக்கத்தில் மணவாளமாமுனிகள் என்று பெயர் குறித்து அவருடைய வரலாறும் எழுதப்பட்டுள்ளது. அவர் க்ருஹஸ்தராயிருந்தபோது அரசாங்கத்தில் உத்யோகஸ்தராயிருந்தாராம்; ஏராளமான பணம் கையாண்டு விட்டாராம். அதைப்பற்றிக் கேள்வியுண்டான

காலத்தில் பயப்பட்டு ஸன்னியாசியாக மாறிவிட்டாராம். இப்படியெல்லாம் கைபோன போக்கில் பலரைப்பற்றிப் பல கதைகள் எழுதப்பட்டிருக்கின்றன. இதை ஆதாரமாகக்கொண்டு வைணவர்களும் இக்கதைகளைத் தங்கள் புத்தகங்களில் ஆதரிக்கத் தொடங்கியிருக்கிறார்கள். 600 ஆண்டுகட்கு முன்பிருந்த வைணவப்பேராசிரியர்களின் வரலாறுகள் குருபரம்பராப்ரபாவம் முதலிய நூல்களைத் தவிர்த்து வேறு நூல்களால் அறியப்பட ப்ரஸக்தியில்லை. ஒருவருடைய வரலாற்றை மற்றொருவருடைய வரலாறாக மயங்கியெழுதுவதும், காரண விசேஷங்களால் கற்பனைபண்ணி யெழுதுவதுமான ஸம்பவங்கள் மிகுதியாகக் காணப்படுகின்றன. சைவசமய குரவர்களின் வரலாறுகளை வைணவர்கள் தங்கள் பரம்பரையில் தெரிந்துகொள்ள ப்ரஸக்தியில்லை. அப்படியே சைவர்களும் ஸ்ரீவைஷ்ணவாசாரியர்களின் வரலாறுகளைத் தெரிந்து கொ[ள்]ள இடமில்லை. இதற்காகப் பிறருடைய உதவியை நாடும்போது, அவர்கள் மாச்சரியம் காரணமாகவோ தமது விபரீதஜ்ஞானம் காரணமாகவோ எழுதிக்கொடுப்பதை வேதமென நம்பி வெளியிட்டு விடுகிறார்கள். நாளடைவில் அவை பிரபலப்பிரமாணமாக உலகில் கௌரவம் பெற்று விடுகின்றன. இவ்வநியாயங்களை எங்கே முறையிடுவது. இருளும் மருளுமான இந்தவகைய ஆபாஸ நூல்களைக்கண்டு பிராமாணிகர்கள் மருள வேண்டாவென்று இப்போது சுருக்கமாக எச்சரிக்கை செய்து நிற்கிறோம். .... 26

## 27. அபத்தங்களில் ஒரு ஆச்சரியம்

ஸந்தியா வந்தன மந்த்ரம் தர்ப்பண மந்த்ரம் ஸ்தோத்ர பாடங்கள் முதலானவை இளமையில் கற்பிக்கப்படும்போது கற்பிக்கின்றவர்களாலோ கற்கின்றவர்களாலோ அவற்றில் அபத்தங்கள் ஏற்படுகின்றனவென்பதில் ஆச்சரியமில்லை. ஆனால் அந்த அபத்தங்கள் இமவந்தந்தொடங்கியிருங்கடலளவும் பெரும்பாலும் ஏகரீதியாயிருந்து வருவது மிகவும் ஆச்சரியத்தைத் தருகின்றது. ஒன்றிரண்டு விஷயங்கள் கேண்மின்.

திருக்கச்சிநம்பிகள் அருளிச்செய்த தேவராஜாஷ்டகம் ஸகல தேசங்களிலும் பரவியுள்ளது. இதில் *ஸம்ஸார மருகாந்தாரே துர்வ்யாதி வ்யாக்ரபீஷணே, விஷய க்ஷுத்ர குல்மாட்யே த்ருஷாபாதப சாலிநி* என்பது ஒரு ச்லோகம். இந்த ச்லோகத்தின் முடிவில் சாலிநி என்றுதானுள்ளது; "சாலிநே" என்று கிடையாது. அது அஸங்கதம். ஆனால் மற்ற மூன்று பாதங்களும் ஏகாரந்தமாகவேயிருப்பதால் இதுவும் ஏகாரந்தமாகவேதான் இருக்கவேணுமென்று கருதியோ வேறு எந்த காரணத்தைக் கொண்டோ "சாலிநே" என்றே சொல்லிவருமவர்களை நாட்டில் பெரும்பாலும் காண்கிறோம். இப்போது யாத்திரையில் பல வூர்களில் பல பேர்களின் வாயில் இந்த ச்லோகம் அநுஸந்திக்கப்படுவதைக் கேட்க நேர்ந்தது; ஒருவர் தப்பாமல் சாலிநே என்றே சொல்லக் கேட்டு வருகிறோம். இது ஒரு ஆச்சரியமான விஷயமாகவே யெமக்குத் தோன்றுகிறது. மற்றொன்றுங்கேண்மின். ஆளவந்தாரருளிச்செய்த காந்தஸ்தே என்று தொடங்குகிற சதுச்லோகியும் உலகமெங்கும் பரவியுள்ளது. இதில் *சாந்தாநந்த* என்கிற நாலாவது ச்லோகத்தில் இரண்டாவது பாதம்—*மூர்த்தம் ப்ரஹ்ம ததோபி தத்ப்ரியதரம்...* என்பது. ஆனால் நமது நாட்டினர் யாவரும் 'தத்ப்ரியதரம்' என்பதை 'யத்ப்ரியதரம்' என்றே [ஒருவர் தப்பாமல்] சொல்லி வருகிறார்கள். இந்த அபத்தம் பதரிகாச்ரமம் வரையில் ஒரே ரீதியாயிருப்பதைக் கண்டிருக்கிறோம். இதைப் பார்த்தால் ஆளவந்தார் திருவாக்கிலேயே "யத்ப்ரியதரம்" என்றுதான் அவதரித்திருக்குமோ! என்று கூட சங்கிக்கவேண்டியதாகிறது. ஆனால் அப்படியில்லை. "தத்ப்ரியதரம்" என்பது தான் அவதரித்தபாடம். எந்த காரணத்தாலோ தப்புப்பாடம் ஸகல தேச வ்யாபியாய் விட்டது. எந்த பதிப்பை யெடுத்துப் பார்த்தாலும் இந்தத் தப்புப்பாடந்தான் காண்கிறது. இனி இது எந்த யுகத்தில் எப்படி மாறப்போகிறது! இங்ஙனே பரவியுள்ள தப்புப் பாடங்கள் ஒன்றா இரண்டா? அபரிமிதம். படிப்பில்லாதவர்கள் சொல்லுகிறார்களென்றால் அதில் ஆச்சரியமில்லை. படித்தவர்களுங்கூட ஆராய்ச்சியின்றியே சொல்லி வருவது தான் ஆச்சரியம். ... 27

# 28. எம்பெருமானாரும் எம்பாரும்

எம்பெருமானார் திருவடிகளில் பலபல முதலிகள் ஆச்ரயித்திருந்தாலும் அவர்களுள் எம்பாரே தலைமை பெற்றனர். நம்முடைய குருபரம்பரையானது—ஆளவந்தார், பெரிய நம்பி, எம்பெருமானார், எம்பார், பட்டர், நஞ்சீயர் என்றிப்படியன்றோ வருகிறது. "மொழியைக் கடக்கும் பெரும்புகழான் வஞ்சமுக்குறும்பாங்குழியைக் கடக்கும் நங்கூரத்தாழ்வான்" என்று ஒப்புயர்வற்ற பெரும்புகழ்பெற்ற கூரத்தாழ்வான் இருக்கச் செய்தேயும் எம்பார்க்கே ப்ராதாந்ய மானதற்கு யாது காரணம்? என்று சிலர் வினவுவதுண்டு. கூரத்தாழ்வான் திருக்குமாரரான பட்டரை ஸ்வாமி யெம்பெருமானார் எம்பார் திருவடிகளிலே காட்டிக் கொடுத்ததுதான் இதற்குக்காரணம்.

அப்படி அவர் காட்டிக் கொடுத்ததற்குத்தான் யாது காரணமென்னில்; கூரத்தாழ்வானுக்கு இரண்டு திருக்குமாரர்கள் திருவவதரித்தார்க ளென்கிற ஆனந்தச் செய்தியைக் கேட்டருளின எம்பெருமானார் பேரின்ப வெள்ளத்தில் மூழ்கி ஒருநாள் அந்த திவ்ய சிசுக்களைக் கடாக்ஷிக்க எம்பாருடன் ஆழ்வான் திருமாளிகைக்கு எழுந்தருள, அப்போது எம்பார் உள்ளே சென்று பட்டரையும் சீராமப்பிள்ளையையும் கைத்தலத்தில் எழுந்தருளப் பண்ணிக்கொண்டு வருமளவில் குழந்தைகட்குக் காப்பாக த்வயாநுஸந்தானம் செய்து கொண்டே வந்தார். பிறகு எம்பெருமானார் அத்திவ்ய சிசுக்களைக் கடாக்ஷிக்கையில் 'கோவிந்தப் பெருமாளே! இக் குழந்தைகளின் மேனியில் த்வயம் மணக்கிறதே; என் செய்தீர்?' என்று கேட்க, 'குழந்தைகட்கு அனுக்கம் வாராமைக்காக த்வயாநுஸந்தானம் செய்து காப்பிட்டேன்' என்று எம்பார் கூற, அப்போது எம்பெருமானார் "இக்குழந்தைகளின் நன்மைக்கு நீரே முற்பட்டீராதலால் இவர்கட்கு நீரே ஆசார்யராகக் கடவீர்" என்று எம்பார்க்கு நியமனம் தந்தருளினார். அந்த நியமனத்தின்படி எம்பாரே பட்டர்க்கு ஆசார்யராக அமைந்தார்.

இதனால், கூரத்தாழ்வான் பட்டர்க்கு ஆசார்யரல்லர் என்று கொள்ளலாகாது. பட்டரும் சீராமப்பிள்ளையும் ஆழ்வான் திருவடிகளில் திருவாய்மொழிப் பொருள் கேட்டதாக இதிஹாஸ முள்ளது. இவ்விஷயம் திருவாய்மொழியில் (1—2—10) *எண்பெருக்கந் நலத்து* என்கிற பாட்டின் ஈடு முப்பத்தாறாயிரப் படியிலுள்ள இதிஹாஸத்தினாலும் விசதம். ஆகவே பட்டர்க்கு எம்பார் ஆழ்வான் ஆகிய இரண்டு ஆசார்யர்களினுடையவும் ஸம்பந்த முண்டு; ஆனது பற்றியே பட்டர் ஸஹஸ்ரநாம பாஷ்யத்தின் உபக்ரமத்தில் இட்டருளின ச்லோகத்தில் "வந்தே கோவிந்த தாதௌ" என்று எம்பாரையும் ஆழ்வானையும் ஆசார்ய ஸ்தானத்தில் வைத்துத் துதிசெய்தார். *ராமாநுஜபதச்சாயா* என்கிற எம்பார் தனியனும், *ஸ்ரீவத்ஸசிஹ்ந மிச்ரேப்ய:* என்கிற ஆழ்வான் தனியனுமாக இரண்டு தனியன்களும் பட்டரே யருளிச் செய்தவையிறே.

இனி, எம்பாரென்னுஞ் சொல்லுக்குப் பொருளென்ன வென்று பார்ப்போம்; எம்பெருமானாரென்னுஞ் சொல்லின் சிதைவாகவே எம்பாரென்னுந் திருநாமம் சாத்தப்பட்டதென்று காண்கிறது. ஆனாலும் பட்டர் 'எம், பார்' என்றிரண்டு சொற்களின் சேர்க்கையாகக் கொண்டு, எம்முடைய பார்—யாம் தங்குமிடம். என்ற பொருளைக் காட்டி (தனியனில்) *மத் விச்ரமஸ்தலீ* என்றருளிச் செய்தார். ஸம்ஸாரதாபதப்தர்களான நாம் ஒதுங்கி இளைப்பாறுமிடம் என்றபடி. எம்பார் ராமாநுஜ பதச் சாயை யென்று ப்ரஸித்தி பெற்றவ ராதலால் சாயையின் தன்மைக்குச் சேர மத்விச்ரம ஸ்தலீ என்றது மிகப் பொருத்தம்.

ஸம்ப்ரதாயத்தில் எம்பாரைப்பற்றி ஒரு விசாரமுண்டு: இவர் திருமலை நம்பிகளால் திருத்தப்பட்டு அவர் திருவடிகளிலேயே திருவிலச்சினை (சக்ராங்கனம்) பெற்றவராயிருக்க, ஸமாச்ரயண பரம்பரையில் எம்பெருமானாருடைய திருவடியாக இவரை அநுஸந்தித்தல் எங்ஙனே கூடுமென்று. இதற்குச் சிலர் சொல்லுவதென்னவென்றால்,

ஸ்வாமி எம்பெருமானார் திருமலைநம்பிகளிடத்தில் இவரை உதகதாராபூர்வகமாக பரிக்ரஹித்த பின்பு மறுபடியும் தாம் இவர்க்குத் திருவிலச்சினை செய்தருளினாரென்று.

இந்தப் பலர் ஏற்றுக்கொள்வதில்லை. நம்பிகள் இவரை உதகதாராபூர்வகமாக ஸ்வாமிக்குக் கொடுத்தருளினதே போதுமானது. இவர் திருவடிகளில் ஆச்ரயித்த பட்டர் ராமாநுஜபதச்சாயா என்று எம்பெருமானாருடைய திருவடிஸம்பந்தமே நிருபகமாக அருளிச்செய்திருக்கையாலே இதற்குமேல் எவ்விதமான சங்கைக்கும் அவகாசமில்லையென்று விடுக்க.

எம்பெருமானார் வடிவழகிலீடுபாடு (எம்பார் அருளிச் செய்தது.)

பற்பமெனத்திகழ் பைங்கழலுன்றன் பல்லவமேவிரலும்
பாவனமாகிய பைந்துவராடை பதிந்தமருங்கழகும் *
முப்புரிநூலொடு முன்கையிலேந்திய முக்கோல்தன்னழகும்
முன்னவர்தந்திருமொழிகள்நிறைந்திடுமுறுவல்நிலாவழகும் *
கற்பகமேவிழி கருணைபொழிந்திடு கமலக்கண்ணழகும்
காரிசுதன்கழல்சூடியமுடியும் கனநற்சிகைமுடியும் *
எப்பொழுதும் எதிராசன்வடிவழகென்னிதயத்துளதால்
இல்லையெனக் கெதிரில்லையெனக் கெதிரில்லையெனக் கெதிரே.

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

## 29. பெரியாழ்வாருடைய அநுபவம்

வ்யாஸபராசராதி மஹர்ஷிகளும் ஆழ்வார்களும் ஸ்ரீ க்ருஷ்ணாவதாரத்தை விசேஷமாக அநுபவித்திருந்தாலும் பெரியாழ்வாரநுபவித்த விதமாக ஒருவரும் அநுபவித்திலர். இவருடைய அநுபவம் வெகு ஆச்சரியமாக அமைந்தது. "திருவிலேனொன்றும் பெற்றிலேன் எல்லாம் தெய்வநங்கை யசோதை பெற்றாளே" என்ற பெருமாள் திருமொழிப் பாசுரத்தின்படி தேவகியிழந்த அனுபவங்களையெல்லாம் யசோதைப்பிராட்டி குறையொன்றுமின்றியே அநுபவிக்கப் பெற்றாளெனினும் பெரியாழ்வாரனுபவித்தவற்றில் ஏகதேசமே யசோதை அநுபவித்தாளென்று சொல்லில் இழுக்காகாது. *வண்ணமாடங்கள் சூழ்திருக்கோட்டியூர்* என்று தொடங்கி *குழலை வென்ற குளிர்வாயினராகிச் சாது கோட்டியுட்கொள்ளப் படுவாரே* என்பதளவாக இருநூற்றறுபது பாசுரங்களினால் பெரியாழ்வாரநுபவித்திருக்கும் க்ருஷ்ணாவதார திவ்யாநுபவம் அநுபவரஸிகர்களின் நெஞ்சை நீர்ப்பண்டமாக உருக்கவல்லதென்பதில் தட்டுண்டோ?

"பெரியாழ்வாரும் திருமகளாரும் கோபஜன்மத்தை ஆஸ்தானம் பண்ணினார்கள்" என்று ஸ்ரீவசநபூஷணத்திலருளிச் செய்யப்பட்டிருப்பதில் சில குருகுலவிழுகர்கள் ஒரு ஆக்ஷேபம் சொல்லுவதுண்டு; அதாவது—'யசோதை இப்படி யநுபவித்தாள், கோபிகள் இப்படி யநுபவித்தார்கள்' என்று பெரியாழ்வார் சொல்லியிருக்கிறாரேயொழிய வேறில்லையே; இதனால் பெரியாழ்வார் கோபஜன்மத்தை ஆஸ்தானம் பண்ணினதாகச் சொல்லப் பொருத்தமுண்டோ? ஸ்ரீவிஷ்ணுபுராண ஸ்ரீபாகவதாதிகளில் கதை சொல்லியிருக்கிறவிதமாகத்தானே பெரியாழ்வாரும் சொல்லியிருக்கிறார்; பராசராதிகள் கோபஜன்மத்தை ஆஸ்தானம் பண்ணினதாகச் சொல்லுவாருண்டோ? இல்லையே; அப்படியிருக்க, "எசோதை சொன்னதை விட்டுசித்தனாகிய நான் சொல்லி வைத்தேன்" என்று பதிகந்தோறும் நிகமனப் பாசுரத்தில் பேசியிருக்கின்ற பெரியாழ்வார் கோபஜன்மத்தை ஆஸ்தானம் பண்ணினாராகச் சொல்லப்படுவதற்கு என்ன பொருத்தமுள்ளது? என்று.

இதற்கு இங்குச் சுருக்கமாக ஸமாதானம் தெரிவிக்கிறோம்; கேண்மின்; பெரியாழ்வார் திருமொழியின் முதற்பதிகமாகிய *வண்ணமாடங்கள் பதிகம் பெரியாழ்வார் தாமான தன்மையில் அருளிச்செய்ததேயன்றி யசோதையின் பாசுரத்தை அநுவதித்து அருளிச்செய்ததன்று என்பது அத்திருமொழியின் அமைப்பினாலும் முடிவு பாசுரத்தினாலும் வ்யக்தமாக விளங்கும்; *செந்நெலார்வயல் சூழ்திருக்கோட்டியூர், மன்னு நாரணன் நம்பி பிறந்தமை, மின்னுநூல் விட்டுசித்தன்விரித்த, இப்பன்னுபாடல்வல்லார்க்கில்லை பாவமே* என்ற (அப்பதிகத்தின்) நிகமனப்பாசுரம் காண்க. இங்ஙனே தாமான தன்மையில் நின்று பேசுமிப்பதிகத்தில் ஒன்பதாவது பாசுரம் எவ்வாறு அமைந்துளதென்று பார்க்கவேணும்; *கிடக்கில் தொட்டில் கிழியவுதைத்திடும், எடுத்துக்கொள்ளில் மருங்கையிறுத்திடும், ஒடுக்கிப்புல்கில் உதரத்தே பாய்ந்திடும், மிடுக்கிலாமையால் நான் மெலிந்தேன் நங்காய்* என்றன்றோ அப்பாசுரமுள்ளது; இப்பாசுரம் பேசும்போது ஆழ்வார் தாமே யசோதையாக மாறிவிட்டாரென்பதை இசைந்து தீரவேண்டுமே. இல்லையாகில் இப்பாட்டு அந்வயிக்கமாட்டாதன்றோ. "இப்படி யசோதை மெலிந்து மொழிந்தாள்" என்று இப்பதிகத்தில் சிறிதும் காட்டப்படவில்லையே. ஆகவே குருகுலவிமுகர்களின் ஆக்ஷேபம் அஸங்கதமென்று முடிந்தது. இது நிற்க.

இப்பெரியாழ்வார் திருமொழியில் மூன்றாம்பத்தின் முதற்பதிகம் *தன்னேராயிரம் பிள்ளைகளோடு* என்று தொடங்குவது. இப்பதிகத்தில் ஒவ்வொரு பாசுரமும் *உனக்கஞ்சுவன் அம்மம் தரவே* என்று முடிகின்றது. யசோதைப்பிராட்டி கண்ணனுக்கு முலைப்பால் கொடுக்க அஞ்சுவதாகச் சொன்னதை அவளுடைய பாவனை கொண்டு சொன்ன பதிகமிது. இதுவரையில் கண்ணனை ஸாதாரணக் குழந்தையாகவே நினைத்திருந்ததனால் முலைப்பால் கொடுத்து வந்ததாகவும், இப்போது பூதநாவதம், சகடாஸுரபங்கம், யமளார்ஜுநபங்கம் முதலான அதிமாநுஷசேஷ்டிதங்களைக் கண்டதனால் அன்னவனுக்கு முலைப்பால் கொடுக்க அஞ்சுவதாகவும் இப்பதிகத்தில் சொல்லப்படுகிறது. இதனால், கண்ணன் முலைப்பாலுண்ணும் பருவத்தில் இது சொல்லப்படுவதாக நன்கு விளங்குகிற்று.

இத்தகையதான இப்பதிகத்தில் சில பாசுரங்களில் கண்ணபிரானுடைய ஜாரசோர சேஷ்டிதங்களும் அநுபவிக்கப்படுகின்றன: இரண்டாம் பாட்டுக் காண்மின்; *பொன்போல் மஞ்சனமாட்டி அமுதூட்டிப்போனேன் வருமளவிப்பால், வன்பாரச் சகடமிறச்சாடி* என்று சகடபங்கம் செய்தவாற்றைச் சொல்லி, உடனே *வடக்கிலகம் புக்கிருந்து மின்போல் நுண்ணிடையாளொரு கன்னியை வேற்றுருவஞ் செய்துவைத்த அன்பா உன்னை யறிந்து கொண்டேன் உனக்கஞ்சுவன் அம்மந்தரவே* என்றுள்ளது. மேல் நான்காம் பாட்டில், *மாயார்கன் மடவாச்சியர் மக்களை மையன்மை செய்தவர் பின்போய், கொய்யார் பூந்துகில் பற்றித் தனி நின்று குற்றம் பல பல செய்தாய்* என்றும், மேல் ஆறாம் பாட்டில் *சுரும்பார் மென்குழல்கன்னி யொருத்திக்குச் சூழ்வலை வைத்துத் திரியும் அரம்பாவுன்னை யறிந்து கொண்டேன் உனக்கஞ்சுவன் அம்மந் தரவே* என்றும், மேல் ஏழாம் பாட்டில் *மருட்டார்மென்குழல் கொண்டு பொழில் புக்கு வாய்வைத்து அவ்வாயர் தம்பாடி, சுருட்டார்மென்குழல் கன்னியர் வந்துன்னைச் சுற்றுந்தொழ நின்றசோதி* என்றும். மேல் எட்டாம்பாட்டில் *பிறர்மக்களை மையன்மை செய்து தோளாவிட்டவரோடு திளைத்து நீ சொல்லப்படாதன செய்தாய்* என்றும், மேல் *நீ ஆய்ப்பாடியிளங்கன்னிமார்களை நேர்படவே கொண்டு போதி* என்றும், *தொத்தார் பூங்குழல் கன்னி யொருத்தியைச் சோலைத்தடங் கொண்டுபுக்கு முத்தார் கொங்கை புணர்ந்து இரா நாழிகை மூவேழு சென்றபின் வந்தாய்* என்றும் இப்படி கண்ணனுடைய ஜார சேஷ்டிதங்கள் மிக மிகப் பேசப்பட்டிருக்கின்றன. பருமுலையுண்ணும் பருவத்தில் இவ்வகையான சேஷ்டிதங்கள் ஸம்பாவிதமன்றே; பருவத்திற்கு அஸம்பாவிதமான விஷயங்களைச் சொல்லி யநுபவிக்கலாமோ? என்று சங்கிக்க நேர்கின்றது.

இதற்கு நாம் சொல்லக்கூடிய பரிஹாரமாவது—இங்குச் சொல்லப்படுகிற ஜார க்ருத்யங்கள் அப்பருவத்திலே நடந்தவை யென்றே கொள்ளவேண்டிய அவசியம் சிறிதுமில்லை. யசோதையின் பாவனையிற்பேசுகிற ஆழ்வார் மிகவும் பிற்பட்டவராத லாலும், யௌவன பருவத்திற் செய்த செயல்களும் அவருடைய அநுஸந்தானத்திற்குக் கோசரமாயிருப்பதனாலும் அந்தச் சரிதைகளையும் தாம் கூட்டிக்கொண்டு அருளிச் செய்கிறாரென்றே கொள்ள வேணும். வஸுதேவர் திருமாளிகையில் நின்றும் திரு வாய்ப்பாடிக்கு வந்து சேர்ந்த கண்ணபிரானது பாதாதிகேசாந்த திவ்யாவயவ ஸௌந் தர்யங்களை அயலகத்துப்பெண்களுக்குக் காட்டுகின்ற யசோதைப்பிராட்டி "உழந்தாள் நறுநெய் ஓரோதடாவுண்ண, இழந்தாளெரிவினால் ஈர்த்தெழின்மத்தின், பழந்தாம்பா லோச்சப் பயத்தால் தவழ்ந்தான் முழந்தாளிருந்தவாகாணீரே" என்றும் "பிறங்கிய பேய்ச்சிமுலை சுவைத்துண்டிட்டு, உறங்குவான் போலே கிடந்தவிப்பிள்ளை—குறங்கு களை வந்து காணீரே" என்றும் சொல்லி யிருப்பதெல்லாம் அப்போது ஸம்பாவிதமன் றிக்கேயிருக்கச் செய்தேயும் பவிஷ்யத்கதாநு ஸந்தானம் ஆழ்வார்க்கு உள்ளதாகை யாலே பொருந்து மென்று நிர்வஹிக்கப்படுவது போலவே இதுவும் நிர்வஹிக்கக் குறையில்லையென்று கண்டு கொள்வது. ... ... ... ... 29

# 30. கிரீடமகுடசூடாவதம்ஸ—திவ்யஸூக்தி விசேஷம்

ஸ்வாமி யெம்பெருமானாரருளிச் செய்த திவ்ய க்ரந்தங்களுள் கத்யத்ரயம் என்ப தொன்று. சரணாகதி கத்யம், ஸ்ரீரங்க கத்யம், ஸ்ரீவைகுண்ட கத்யம் என்று திருநாமம் பூண்ட மூன்று கத்யங்களுக்கு கத்யத்ரய மென்று வ்யவஹாரம். ஆனால், கத்யத்ரய மென்கிற விது ஸ்வாமி தாமே சாத்திய திருநாமமன்று. மூன்று கத்யங்களுக்கும் தனித்தனியே பெயரிட்டு மூன்று திவ்ய க்ரந்தமாகவே ஸ்வாமியருளிச் செய்தது. பின்புள்ளார்தாம் அம்மூன்று கத்யங்களுக்கும் தொகுத்த வொரு திருநாமமாக கத்யத் ரயமென்று பெயரிட்டார்களெனத் தெரிகிறது. இவற்றுக்கு முறையே ப்ருஹத்கத்யம், மிதகத்யம், ஸ்ரீவைகுண்டகத்யம் என்னுந் திருநாமங்களு முண்டு.

இவற்றுள் முதலதான சரணாகதி கத்யத்தில் *அகிலஹேய ப்ரத்யநீக இத்யாதியான பெரிய சூர்ணையில், திவ்யரூப வர்ண்னம், திவ்யகுண வர்ண்னம், திவ்யபூஷண வர்ண் னம், திவ்யாயுத வர்ண்னம், திவ்யமஹிஷீ வர்ண்னம் முதலான பல வர்ணனங்கள் ஆச்சர்யமாகச் செய்யப்பட்டுள்ளன. அவற்றுள் திவ்யபூஷண வர்ண்ன பரமான *ஸ்வோசித விவித விசித்ராநந்தேத்யாதி வாக்யத்தில் "கிரீட மகுட சூடாவதம்ஸ" என்றுள்ள ஸ்ரீஸூக்தியின் ஆழ்பொருளைப் பற்றிச் சிறிது விமர்சிப்போ மிங்கு.

கிரீடமென்றும் மகுடமென்றும் சூடாவதம்ஸமென்றும் தனித்தனியாக மூன்று சொற்கள் இருந்தாலும் இவை மூன்றும் திருமுடியிலணியும் ஆபரணத்தையே சொல்லும். அந்த ஆபரணம் ஒரேவிதமாக இருப்பதில்லை; திருவபிஷேக மென்றும், கொண்டை யென்றும், தொப்பார மென்றும் மூன்று விதமாக வழங்கி வருவதுண் டாதலால் அம்மூவகைத் திருவாபரணங்களுக்கும் வாசகமாக கிரீடமென்றும் மகுட மென்றும் சூடாவதம்ஸமென்றும் மூன்று பதங்கள் இங்கு ப்ரயோகிக்கப்பட்டன வென்னலாம்.

முக்கியமாயும் உபதேச பரம்பராப்ராப்தமாயுமுள்ள ரஸ்ய ரஹஸ்யார்த்த மொன்று இங்கு அறியவேண்டியதுண்டு. "தமிழ்மறைகளாயிரமும் ஈன்ற முதல்தாய் சடகோபன், மொய்ம்பால் வளர்த்த இதத்தாய் இராமானுசன்" என்கிறபடியே எம் பெருமானார் திருவாய்மொழியை வளர்த்தவராய் அநவரதம் அதனையே ஆழ்ந்து அநுப விப்பவராய் இருந்தபடியால் நம்மாழ்வாருடைய திவ்ய ஸூக்தியொன்றைத் திருவுள் ளம்பற்றியே "கிரீட மகுட சூடாவதம்ஸ" என்று மூன்று சிரோபூஷணங்களைப் பேசி யுள்ளார்.

அந்த திவ்ய ஸூக்தி யெதுவென்னில், திருவிருத்தத்தில் *பாரளந்த பேரரசே! எம்விசும்பரசே! எம்மைநீத்து வஞ்சித்தோரரசே!* என்றுள்ள பாசுரமாம். இதில், அரசே! அரசே! அரசே! என்று மூன்று விசை விளிந்தருளுகிறார். பாரளந்த பேரரசே! என்பதனால், உலகளக்கிற வியாஜத்தினால் எல்லார் தலையிலும் திருவடியை வைக்கை யாகிற ஸௌலப்யகுணம் அநுபவிக்கப்பட்டது. விசும்பரசே! என்பதனால் நித்ய ஸூரிநாதத்வமாகிற பரத்வம் அநுபவிக்கப்பட்டது. எம்மை நீத்து வஞ்சித்தோரரசே! என்பதனால் தம்மோடு ஸம்ச்லேஷ விச்லேஷங்கள் பண்ணிப் போருகையாகிற ப்ரணயித்வகுணம் அநுபவிக்கப்பட்டது. ஆக, ஸௌலப்யத்துக்காகக் கவித்த முடியும் பரத்வத்துக்காகக் கவித்த முடியும் ப்ரணயித்வத்துக்காகக் கவித்த முடியுமாக மூன்று முடிகள் நம்மாழ்வாரால் எம்பெருமானுக்குச் சூட்டப்பட்டனவாயின. இவ்விஷயம் ஆசார்யஹ்ருதயத்தில் "பாரளந்தவென்னும் மூன்று முடிக்குரிய இளவரசுக்கு" என்பதனால் காட்டப்பட்டுள்ளது.

இங்ஙனே எம்பெருமானுக்கு மூன்று ஸாம்ராஜ்யாபிஷேகம் ஆழ்வார் திருவுள்ளத்தினால் நேர்ந்திருப்பதைத் திருவுள்ளம்பற்றியே ஸ்வாமி யெம்பெருமானார் கிரீட, மகுட, சூடாவதம்ஸங்களாகிற மூன்று முடிகளை யருளிச் செய்தாரென்று கொள்ளக்கடவது.

இனி, இதில் ஒரு சிறிய கேள்வியுண்டாகும்; ப்ரணயித்வகுண மென்பது ஸௌலப்ய குணத்திலே அந்தர்ப்பவியாதோ? அதைத் தனிப்படச் சொல்லி அதற்காக வொரு திருவபிஷேகம் சூட்டினதாகச் சொல்லவேணுமோ? என்று. இதற்குக் கேண்மின்; அந்தரங்க பக்தர்களிடத்தில் அஸாதாரணமாகக் காட்டும் ப்ரணயித்வகுணத்தை ஸர்வ ஸாதாரணமான ஸௌலப்யகுணத்திலே அந்தர்ப்பவித்ததாகக் கொள்ளுவது பொருந்தாது. ஸ்ரீபாஷ்யத்தின் மங்கள ச்லோகமான *அகிலபுவநஜந்மேத்யாதி ச்லோகத்தில் முதல் பாதத்தில் ஸ்நேம சப்தத்தினால் ரக்ஷணம் சொல்லப்பட்டிருக்கச் செய்தேயும் மீண்டும் இரண்டாவது பாதத்தில் *விநத விவிதபூத வ்ராத ரக்ஷை சொல்லப்பட்டிருக்கின்றது. இது தனிப்படச் சொல்ல வேணுமோ? முதல் பாதத்தில் சொன்ன ஸ்நேம சப்தார்த்தமான ரக்ஷணத்திலேயே இதுவும் அந்தர்ப்பவியாதோ? என்று கேட்டால், 'அது ஸாமாந்ய ரக்ஷணம் சொன்னபடி, இது விசேஷ ரக்ஷணம் சொல்லுகிறபடி' என்று ஸமாதானம் சொல்ல ப்ராப்தமாகிறது. புபுக்ஷுக்களின் ரக்ஷணம் வேறாய், முமுக்ஷுக்களின் ரக்ஷணம் வேறாயிறே யிருப்பது; அது போலவே *உண்டியே உடையே உகந்தோடுமிம்மண்டலத்தாரிடத்தில் காட்டும் ஸௌலப்யமும் *உண்ணுஞ்சோறு பருகு நீர்தின்னும் வெற்றிலையுமெல்லாங் கண்ணனெம்பெருமானென்றே யிருக்குமாழ்வார்போல்வார் பக்கலிலே காட்டும் ஸௌலப்யமும் நெடுவாசி பெற்ற தாகையாலே ஒன்றாய்விடாது. அதற்கு ஸௌலப்யமென்று பெயர்; இதற்கு ப்ரணயித்வமென்று பெயர். ஆகவே மூன்று திருக்குணங்களுக்கான ஸாம்ராஜ்யாபிஷேகத்துக்காக மூன்று முடிகள் மிகப் பொருந்தும். ... ... ... 30

## 31. இராமாநுச நூற்றந்தாதி விமர்சம்

இப்பெயர் பூண்ட திவ்யப்ரபந்தமானது திருவரங்கத்தமுதனாரால் ஸ்வாமி யெம்பெருமானார் தோத்திரமாகப் பணிக்கப்பட்டதொரு பிரபந்தமாகும். உடையவர் காலத்திலேயே தோன்றியது இது. இதனை ஸ்வாமி ராமாநுஜர் ஏற்றுக்கொள்ளத் திருவுள்ளம் பற்றாமல் மறுத்துவிட்டார். தம்மைப்பற்றின புகழுரைகளைத் தாமே ஆமோதிப்பதென்பது தகுதியற்றதாதலால் ஸ்வாமி அங்கீகரியாமல் மறுத்தது யுக்தமே. ஆனாலும், ஆழ்வான் ஆண்டான் எம்பார் பிள்ளான் முதலான அந்தரங்க சிஷ்யர்கள் பலரும ஸ்வாமி திருவடிகளைப் பிடித்துக் கொண்டு "சிஷ்யவர்க்கங்களின் உகப்புக்காக இப்பிரபந்தத்தை ஸ்வாமி ஆமோதித்தருளவே வேணும். ஸ்ரீராமபிரான் தன்னுடைய சரிதையான ஸ்ரீராமாயணத்தைத் தான் உகந்து கேட்டருளவில்லையா? அப்படியே ஸ்வாமியும் இந்த நூற்றந்தாதியை அடியோங்களின் உகப்புக்காகக் கேட்டருளிப்

பரிக்ரஹித்து அத்யயந அத்யாபந பாராயணங்களிலும் நியமித்தருள வேணும்" என்று கனமாக வேண்டிக் கொள்ள, ஸ்வாமி தாமும் அவர்களின் ப்ரார்த்தனையை மறுக்க மாட்டாமல் அப்படியே உகந்து திருச்செவி சாத்தியருளி, மற்ற திவ்யப்ரபந்தங்களோடு கூட இதனையும் சேர்த்து அநுஸந்தானம் செய்து வருமாறு திருவோலக்கத்திலே நியமனம் தந்தருளினாரென்றும், அன்று முதலாக இப்பிரபந்தமும் நாலாயிரத் திவ்யப் பிரபந்த பரிகணிதமாய் கோவில்களிலும் க்ருஹங்களிலும் ஸேவிக்கப்பட்டு வருகிறதென்றும் பெரியோர்களால் பணிக்கப்பட்டு வரும் விஷயம்.

திருக்கார்த்திகைக்குப் பிறகு திவ்யப்ரபந்தங்களுக்கு ப்ராப்தமான அநத்யயனம் இந்த நூற்றந்தாதிக்குமுள்ளதென்பதை ஸர்வத்ர ஸமரூபமாகக் கண்டு வருகிறோம். இதில் அபிப்ராயபேதமாவது அநுஷ்டான பேதமாவது ஓரிடத்திலும் காணப்படவில்லை. ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயஸ்தர்கள் யாவருமே இவ்விஷயத்தில் ஏககண்டராயிருக்கக் காணாநின்றோம்.

மணவாளமாமுனிகள் உபதேசரத்தினமாலையில் இப்பிரபந்தத்தைப் பற்றி ப்ரஸ்தாவமே செய்தருளவில்லை. மதுரகவிகளின் கண்ணிநுண் சிறுத்தாம்பைப்பற்றி "வாய்த்த திருமந்திரத்தின் மத்திமமாம் பதம் போல், சீர்த்த மதுரகவி செய்கலையை—ஆர்த்தபுகழ் ஆரியர்கள் தாங்கள் அருளிச் செயல் நடுவே, சேர்வித்தார் தாற்பரியம் தேர்ந்து" என்றொரு பாசுரமருளிச் செய்தது போல இந்த நூற்றந்தாதியைப் பற்றியும் ஒரு பாசுரம் அருளிச் செய்திருக்க வேண்டுமே. மாமுனிகள் இதற்கு வியாக்கியானமும் செய்தருளியிருப்பதால் இப்பிரபந்தம் திவ்யப்ரபந்த பரிகணிதமென்பது நிர்விவாதம். உபதேசரத்தினமாலையில் ஆழ்வார்கள் பதின்மர்க்கும் ஆண்டாளுக்கும் மதுரகவிகளுக்கும் எம்பெருமானார்க்குமே நாள்பாட்டுக்கள் அருளிச் செய்யப்பட்டிருக்கின்றன. பிள்ளான் நஞ்சீயர் நம்பிள்ளை பெரியவாச்சான்பிள்ளை வடக்குத் திருவீதிப்பிள்ளை அழகிய மணவாளச்சீயர் பிள்ளைலோகாசார்யர் முதலான ஆசிரியர்களைப் பற்றின ப்ரசம்ஸைகள் உபதேசரத்தினமாலையில் விசேஷமாக இருந்தாலும் இவ்வாசிரியர்களில் ஒருவர்க்கும் நாள்பாட்டு அதில் கிடையாது. இவர்கள் வ்யாக்யான கர்த்தாக்களேயன்றி (திவ்யப்ரபந்த) மூலவக்தாக்களல்லர் என்னும் காரணத்தினாலேயே இவர்களுக்கு நாள்பாட்டு பணித்தருளவில்லையென்பது நனகு விளங்குகின்றது. இக்காரணங்கொண்டே எம்பெருமானார்க்கும் நாள்பாட்டு பணிக்க ப்ரஸக்தியில்லாதிருக்கவும் "இன்றுலகீர் சித்திரையில் ஏய்ந்த திருவாதிரை நாள்" என்று தொடங்கி மூன்று பாசுரங்கள் நாட்பாட்டாகவே அருளிச்செய்யப்பட்டிருப்பதானது இராமாநுச நூற்றந்தாதிக்காகவேயென்பது அறுதியிடக்கூடிய விஷயம்.

நூற்றந்தாதிக்குக் கர்த்தாவான அமுதனார் இருக்க, பங்குனி ஹஸ்தத்தில் அவருடைய திருவவதாரமென்றும் தெரிந்திருக்க, அவ்வாசிரியர்க்கு நாள்பாட்டிடாதே அவரது பிரபந்தத்திற்கு வாச்யரான எம்பெருமானார்க்கு ஏன் நாள்பாட்டிடவேணும்? என்று விமர்சிக்க ப்ராப்தமாகும். மஹாப்ராமாணிகரான மணவாளமாமுனிகள் அநாவச்யகமாக ஒன்றைச் சேர்ப்பதும் ஒன்றை விடுவதும் செய்தருளார். பட்டர் அருளிச் செய்ததான *பூதம் ஸரச்ச மஹதாஹ்வய இத்யாதி ச்லோகத்தில் "பரகால யதீந்த்ரமிச்ராந் ஸ்ரீமத் பராங்குசமுநிம்" என்று ஆழ்வார்கள் கோஷ்டியில் எம்பெருமானார் சேர்க்கப்பட்டு உபச்லோகிதராயிருப்பதை உற்று நோக்கவேணும். இந்த ச்லோகத்தில் நம்மாழ்வாரை முடிவிலே வைத்திருப்பதால் அவரை அவயவியாகவும் முன் மூன்று பாதங்களில் சொல்லப்பட்டவர்கள் அவயவபூதர்களாகவும் கொள்ளப்பட்டிருக்கிறார்களென்பது விளங்குகின்றது. ஆக, எம்பெருமானாரும் மற்றையாழ்வார்களைப்போல் நம்மாழ்வார்க்கு அவயவ பூதராகவே கொள்ளப்பட்டபடியால் இதையடியொற்றியே மாமுனிகள் ஆழ்வார்களுக்கு அடுத்தபடியாக எம்பெருமானார்க்கு நாட்பாட்டு இட்டருளினது மிகப்பொருத்தம். அமுதனாரைப்பற்றின ப்ரசம்ஸை இதிலேயே அந்தர்ப்பவிக்குமென்று திருவுள்ளம். அமுதனார்க்கு விக்ரஹ ப்ரதிஷ்டையில்லாமையும் ஒரு காரணம். ... ... ... ... ... 31

# 32. பஞ்சாம்ருதம்

அம்ருதமென்பது தேவலோகத்திலுள்ளதென்றும் அது மானிடர்க்குக் கிடைக்க மாட்டாதென்றும் பலர் நினைப்பதும் சொல்வதுமுண்டு. ஆனால் நிச்சலும் அமுதமுண்டு களிக்கின்ற நாம் அப்படி நினைப்பதற்கு ப்ரஸக்தி யில்லை. உலகில் நூல்களைப் பாடினவர்கள் பல்லாயிரவரிருந்தாலும் "தொண்டர்க்கு அமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்" என்று அணிந்து சொன்னவர் ப்ரபந்நஜந கூடஸ்தரான நம்மாழ்வாரொருவரே யன்றி மற்றொருவரிலர். ஸ்ரீமந்நாதமுனிகளும் *பக்தாம்ருதம்விச்வஜநாநுமோதநம் என்று மருமமறிந்து பேசும்படியான தன்றோ அவ்வமுதம். பிள்ளைப்பெருமாளையங்காரும் திருவரங்கக் கலம்பகத்தின் காப்புச் செய்யுள்களுள் :

"மறைப்பாற்கடலைத் திருநாவின் மந்தரத்தாற் கடைந்து
துறைப்பாற்படுத்தித் தமிழாயிரத்தின் சுவை யமிழ்தம்
கறைப்பாம்பணைப்பள்ளியா னன்பரீட்டங் களித்தருந்த
நிறைப்பான்கழலன்றிச் சன்மவிடாய்க்கு நிழலில்லையே"

என்ற செய்யுளினால் நம்மாழ்வாரை அமுதமளித்த பெருவள்ளலாகவே பேசிப் போந்தார். எம்பெருமான் உப்புக் கடலைக் கடைந்து ப்ரயோஜநாந்தரபரர்களான அமரர்கட்கு அமுதமளித்தான். ஆழ்வாரோ வென்னில், வேதமாகிற பாற்கடலைக் கடைந்து அநந்யப்ரயோஜநர்களான அத்புத பக்தியுக்தர்கள் அநவரதம் அருந்திக் களிக்கும்படியான திவ்யாம்ருதத்தை யநுக்ரஹித் தருளினர். இவ்வம்ருத ப்ரவாஹத்தில் கண்ட பஞ்சாம்ருதத்தை எண்டெடுத்துக் காட்டுவோம்.

மாறன் பணித்த தமிழ் மறைக்கு ஆறங்கங்கூற வவதரித்த திருநாவீறுடைய பிரானை திருமங்கையாழ்வார் சிறிய திருமடலென்றும் பெரிய திருமடலென்றும் இரண்டு திவ்ய ப்ரபந்தங்களை யருளிச் செய்திருப்பது உலகறிய நின்றது. இவற்றுள் முக்கியமான விஷயம் என்னவென்றால், 'மோக்ஷமென்கிற வொரு புருஷார்த்தம் கிடையவே கிடையாது; அஃதொன்றிருப்பதாகச் சொல்லுவார் அவிவேகிகளே யொழிய விவேகிகளல்லர்; அஃது உண்டு என்று கொண்டாலும் அது அநுபவரஸிகர்களுக்கு உத்தமமான புருஷார்த்தமென்று கொள்ளத் தகாததே' என்று அறுதியிடுவது இதில் தலையான விஷயமாகக் காண்கிறது. ஆஸ்திகர்களில் தலைவரான திருமங்கையாழ்வாரா இப்படி யருளிச் செய்கிறாரென்று பலரும் அதிசயிக்கக்கூடும். ஒருகாலும் இப்படி யருளிச் செய்திருக்கமாட்டார் என்றும் சிலர் சொல்லக்கூடும். திருமடல்களின் தலைப்பிலேயே ஸுஸ்பஷ்டமாகக் காணுமிவ் விஷயத்தில் ஸந்தேஹமென்ன?

இவ்வாழ்வார் நாஸ்திகரல்லர்; ஆஸ்திகர்களில் அக்ரேஸரர் என்பதும் அசைக்க முடியாததே. தம்முடைய பதிகங்களுக்குப் பயன் கூறுமிடத்து "இம்மன்னு பாடல் வல்லார்க்கு இடமாகும் வானுலகே" "வெங்கதிர்ப் பரிதிவட்டத்தூடு போய் விளங்குவாரே" "ஒளி விசும்பாள்வர்தாமே" என்றிப்படி அடிக்கடி யருளிச் செய்து போருகின்றார். தம்முடைய திவ்யஸூக்திகளை யோதுகைக்குத் திருநாட்டில் வாழ்ச்சியையே பலனாகக் கூறியுள்ள இவ்வாழ்வார் மோக்ஷமென்கிற புருஷார்த்தமே கிடையாதென்று ஸ்தாபித்து இரண்டு திவ்ய ப்ரபந்த மருளிச் செய்தாரென்னில், இதன் கருத்தை ஆராய வேண்டும்.

சாஸ்த்ரஜ்ஞர்கள் *ந ஹி நிந்தா ந்யாயமென்று ஒரு நியாயம் சொல்லுவர்கள். "न हि निन्दा निन्द्यं निन्दितुं प्रवर्तते ; अपि तु निन्द्यादितरं प्रशंसितुम्"—ந ஹி நிந்தா நிந்த்யம் நிந்திதும் ப்ரவர்த்ததே, அபி து நிந்த்யாத் இதரம் ப்ரசம்ஸிதும்" என்பதே அந்த நியாயமாகும். விவேகிகள் ஒன்றை நிந்தித்தார்களாகில் அதற்கு நிந்தையில் நோக்கன்று; புகழ நினைத்த வொன்றைப் புகழ்வதிலேயே நோக்கு—என்பது இந்த ந்யாயத்தின் போக்கு.

இந்த ரீதியின்படி மஹான்கள் சிலவற்றை நிந்தித்தார்களாகில் நிந்தையிலே சிறிதும் தாற்பரியமின்றிக்கே உத்தேச்யமான தொன்றின் புகழ்ச்சியிலேயே தாற்பரியமாகின்றமையை நிரம்பக் காணுகின்றோம். ப்ரக்ருதத்தில், மோக்ஷபுருஷார்த்த மென்பதொன்று இல்லையாதென்றும் இருந்தாலும் அது அஸாரமென்றும் மோக்ஷநிந்தையாக்கூறின விதற்கு இந்த நிந்தையில் சிறிதும் நோக்கில்லை; மோக்ஷத்திற் காட்டிலும் மிகவும் உத்தேச்யமாக ஆழ்வார் தாம் கொண்ட திவ்ய தேசாநுபவமே மிகச் சீரியதென்று இதனைப் புகழ்வதொன்றிலேயே நோக்கெனக் கொள்ளத் தக்கதாம். இதனை ஆழ்வார் வெகு அழகாக அருளிச் செய்யும்படி காண்மின்;

சிறிய திருமடலில் மோக்ஷமுண்டென்பாரை அவிவேகிகளென்று கூறிவருமிடத்து "ஆராவமுதமங்கெய்தி அதில் நின்றும் வாராதொழிவதொன்றுண்டே" என்கிறார். இதன் உட்கருத்து யாதெனில்; ஆராவமுதம் உண்மையில் இந்த லீலாவிபூதியில் இருக்க அந்த நித்ய விபூதியில் அஃதிருப்பதாகவும், அங்குச் சென்றவர்கள் உண்மையான இவ்வுலகத்தாராவமுதத்தை யநுபவிக்க மறுபடியும் வரவேமாட்டார்களென்பதாகவும் சொல்லுவது பொருத்தமுடைத்தோ? ஆராவமுதமென்பது இங்குத் தானுள்ளது—என்னுமிதுவே திருமங்கைமன்னனுடைய திருவுள்ளம்.

தேன், வாழைப்பழம் முதலான ஐந்து வஸ்துக்களைச் சேர்த்துப் பஞ்சாமிருதமென்று சொல்லிப் புசிக்கின்றோம் நாம். ஆழ்வார்கள் கண்ட பஞ்சாமிருதம் கேளீர்;

1. *சீரார் செந்நெற் கவரிவீசுஞ் செழுநீர்த் திருக்குடந்தையில் ஆராவமுதே! என்றும்* ஆராவமுதாயடியேனுடலம் நின்பாலன்பாயே நீராயலைந்து கரைய* என்றும் நம்மாழ்வாராலநுபவிக்கப்பட்ட அமுதம்.

2. *கொண்டல்வண்ணனைக் கோவலனாய் வெண்ணெயுண்ட வாயன் என்னுள்ளங் கவர்ந்தான் அண்டர்கோனணி யரங்க னென்னமுது* என்று திருப்பாணாழ்வார் கண்ட வமுதம்.

3. *அடியேன் மேவியமர்கின்ற வமுதே...திருவேங்கடத் தெம்பெருமானே! என்று நம்மாழ்வார் திருவேங்கடத்திற் கண்ட வமுதம்.

4. *எனக்குத் தேனேபாலே கன்னலேயமுதே திருமாலிருஞ்சோலைக்கோனே என்று நம்மாழ்வார் தாமே தெற்குத் திருமலையிற் கண்ட வமுதம்.

5. *மன்னு குறுங்குடியாய் வெள்ளறையாய் மதிள்சூழ் சோலைமலைக்கரசே! கண்ணபுரத்தமுதே!* என்று பெரியாழ்வார் திருக்கண்ணபுரத்திலே கண்ட வமுதம். ஆக இவ்வம்ருதங்கள் ஆழ்வார்களுடைய பஞ்சாம்ருதமாகும். இந்த அம்ருதாநுபவத்திற் காட்டிலுமா அந்த அம்ருதாநுபவம் சிறந்தது?

க்ருஷ்ணயஜுர்வேதத்தில் ஆறுவது காண்டம் ஆரம்பிக்கும் போதே "को हि तद्वेद यद्यमुष्मिन् लोकेऽस्ति वा न वेति" என்று ஓதப்படுகிறது. "பரலோகத்தில் இருக்கிறதோ இல்லையோ, யார் கண்டார்?" என்கிறது. இதுவும் பரலோகத்தில்லாமையைச் சொல்லுகிறதன்று; த்ருஷ்டபுருஷார்த்த மொன்றின் புகழ்ச்சியிலே நோக்காக இங்ஙனே ஓதிற்றென்று வியாக்கியானம் செய்கிறார்கள். வேதாந்த தேசிகனுடைய பரமத பங்கரஹஸ்யத்திலும் இது காணலாம்.

*இச்சுவை தவிர யான் போய் இந்திரலோகமாளுமச்சுவை பெறினும் வேண்டேன்* என்றும் *அண்டர்கோனணி யரங்கன் என்னமுதினைக் கண்டகண்கள் மற்றொன்றினைக் காணாவே* என்றும் *ஸத்யம் சபே வாரணசைலநாத! வைகுண்ட வாஸேபி ந மேபிலாஷ:* என்றும் ஆழ்வாராசாரியர்கள் சொல்லுவது மாத்திரமன்றிக்கே, ஸ்ரீராம திவ்யசரிதாம்ருதத்தின் சுவடறிந்த திருவடியும் "स्नेहो मे परमो राजन्! त्वयि नित्यं प्रतिष्ठितः। भक्तिश्च नियता वीर! भावो नान्यत्र गच्छति—ஸ்நேஹோ மே பரமோ ராஜந்! த்வயி நித்யம் ப்ரதிஷ்டித:, பக்திச் ச நியதா வீர! பாவோ நாந்யத்ர கச்சதி." என்னக் காணுகின்றோம். ... ... ... ... ... ...

# 33. விசிஷ்டாத்வைதிகளுக்கு மோக்ஷமாவது என்ன ?

“ தத்வஜ்ஞாநாத் முக்திः, அஜ்ஞாநாத் ஸம்ஸாரः ” என்பதொன்றுண்டு. இது பெரும்பாலும் ஸகல மதஸ்தர்களாலும் ஒப்புக்கொள்ளப்படுகிறது. ஆனால் இந்த வாக்யத்திற்குப் பொருள் சொல்லப் புகும்போது ஒருவர் சொல்லும் பொருளை மற்றொருவர் சொல்லுவதில்லை. தத்வஜ்ஞானமென்றால் என்ன? முக்தி யென்றாலென்ன? என்பதில் விஷயத்தில் பலபல மதபேதங்கள் தோன்றியுள்ளன. விசிஷ்டாத்வைத ஸித்தாந்தரீதியில் தத்வஜ்ஞானமென்பது இன்னது, முக்தியென்பது இன்னது என்று கொள்கைகளை தெரிந்து கொள்ளவேண்டும். தத்வஜ்ஞானமென்பது பற்றி மற்றொருகால் சொல்லுவோம்; ப்ரஸங்காத் இப்போது முக்தியைப் பற்றிச் சுருக்கச் சொல்லுகிறோம்.

‘ பாஷாணகல்பதைவ முக்திः ’ என்றும், ‘ ஆத்யந்திக து:க்கத்வம்ஸ ஏவ முக்தி: ’ என்றும் இப்படி பலவாறு பிறர் கூறுவர். நம்மைப் பிடித்த பீடைகளெல்லாம் விட்டுத் தொலைகைதான் மோக்ஷமென்பது பிறருடைய கொள்கையாகத் தேறுகின்றது.

ஒரு மஹாப்ரபு அத்வைத ஸம்பிரதாயத்தில் பரிபூர்ண ஜ்ஞானமுடைய தனது மந்த்ரியிடத்தில் ‘ மோக்ஷமாவது என்ன ? என்பதை எனக்கு விளக்கமாகச் சொல்ல வேணும் ’ என்று கேட்டாராம். அந்த மந்த்ரி ‘ இவருக்கு நாம் சாஸ்த்ரங்கொண்டு காட்டுவதைவிட அநுபவத்தை யிட்டே காட்டிவிடுவது நன்று ’ என்று நினைத்து ஒருபாயம் செய்தாராம். அதாவது, அந்த மஹாப்ரபு சயனக்ருஹத்தில் படுத்து உறங்கின பிறகு அந்த அறையை வெளியே பூட்டிக்கொண்டு அங்கேயே படுத்துக் கொண்டார் மந்த்ரி. மஹாப்ரபு மலஜலபாதையை விஸர்ஜனம் செய்ய வேண்டி யெழுந்து கதவைத் திறக்கப் பார்த்தபோது கதவு திறக்கமுடியாமற் போகவே வெளியில் பூட்டப்பட்டிருப்பதை யறிந்து கதறத் தொடங்கினார். வெளியே கிடக்கிற மந்த்ரி தாம் ஒன்றும் அறியாதவர் போல, “ கதவு பூட்டிக் கிடக்கிறதே, யார் பூட்டினார்களோ தெரியவில்லையே, இதோ பார்க்கிறேன் ” என்று சொல்லி மாயஞ் செய்திருந்தார். ப்ரபுவுக்கு தேஹபாதை பொறுக்க முடியாத நிலைமையாகிக் கூக்குரலிட்டு ‘ பூட்டு திறக்கத் திறவுகோல் கிடைக்கவில்லை யென்றால் பூட்டை யுடைத்திடு; இனி என்னால் ஒரு நொடியும் பொறுத்திருக்க முடியாது ’ என்று கத்த, மந்த்ரி உடனே கதவைத் திறந்து விட்டார்; ப்ரபு உடனே வெளிவந்து மலஜலபாதையைக் கழித்துக் கொண்டு அப்பாடா ! என்றாராம். அப்போது மந்த்ரி அருகே வந்து, ‘ ப்ரபோ ! இதுதான் மோக்ஷமென்பது; இப்போது அப்பாடா ! என்றீரே, என்ன ஸுகங்கண்டு இது சொன்னீர் ? தேஹத்திலிருந்த பாதை தொலைந்ததிற் காட்டில் அபூர்வமான வொரு ஸுகம் வந்ததில்லையே; இருந்த பாதையின் நிவ்ருத்தியைத் தானே ஸுகமாகக் கருதுகின்றீர்; இதுபோலவே பிறப்பிறப்பு மூப்புப் பிணித் துன்பங்களினின்று நாம் விடுபடுவதற்கு மேற்பட அபூர்வமாக ஒரு ஸுகமும் வருவதன்று; ஆத்யந்திக துக்க த்வம்ஸமே மோக்ஷமென்று கொள்வீர் ’ என்றாராம். “ பாஷாணகல்பதைவ முக்தி: ” என்கிற நையாயிகாதிகளுக்கும் இதுவே கருத்தாகத் தேறும்.

நம்முடைய ஸித்தாந்தமோ வென்னில்; அபூர்வமாக வொரு மஹானந்த மநுபவிப்பதே மோக்ஷமென்பதாம். ஆளவந்தார் “ कादाऽहमैकान्तिकनित्यकिङ्करः प्रहर्षयिष्यामि — கதாஹமைகாந்திக நித்ய கிங்கர: ப்ரஹர்ஷயிஷ்யாமி ” என்றருளிச் செய்தார். *ஒழிவில் காலமெல்லா முடனாய் மன்னி வழுவிலாவடிமை செய்து அநுபவிக்கிற ஆனந்தம் அவரவர்களுக்கு ஆத்மைக வேத்யம். “ வேதமனைத்துக்கும் வித்தாகும் கோதை தமிழ் ஐயைந்துமைந்தும் ” என்னப்பட்ட திருப்பாவையில் *ஒருத்தி மகனாய்ப் பாசுரத்தில் *வருத்தமுந் தீர்ந்து மகிழ்ந்தேலோ ரெம்பாவாய்* என்றது உயிரான வார்த்தை. வருத்

தம் தீர்ந்ததோடு நில்லாமல் மகிழ்ந்து என்னும்படியான வொரு நிலைமையுண்மை கூட்டப்பட்டது. நம்மாழ்வாரும் திருவாய்மொழியில் (7—5—10) *வார்த்தையறிபவர்* என்ற பாட்டில் *போர்த்த பிறப்பொடு நோயொடு மூப்பொடு இறப்பிவை பேர்த்துப் பெருந்துன்பம் வேரற நீக்கி* என்றிவ்வளவு சொன்னதற்கும் மேற்பட "தன் தாளின் கீழ்ச் சேர்த்து அவன் செய்யுஞ் சேமத்தை யெண்ணி" என்றருளிச் செய்திருப்பது நோக்கத்தக்கது.

* तदा विद्वान् पुण्यपापे विधूय निरञ्जनः परमं साम्यमुपैति *என்றும்* ब्रह्म वेद ब्रह्मैव भवति * என்றும் இந்த ஜீவாத்மா பரமாத்மாவோடு ஐக்யம் பெறுவதாக உபநிஷத்துக்களில் சொல்லியிருக்கையாலே இவன் தனியே நின்று கைங்கரியம் பண்ணிக்களிக்கை யென்பதற்கு அவகாசமேது? என்பர் பிறர். மேலே குறித்த ப்ரமாணங்களில் ஐக்யம் சொல்லப்பட்டிருக்கவில்லை. *ஸாம்யம் உபைதி* என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஸாம்யமாவது என்ன? ஐக்யமன்று. * उपमा यत्र सादृश्यलक्ष्मीरुल्लसति द्वयोः—உபமா யத்ர ஸாத்ருச்யலக்ஷ்மீ ருல்லஸதி த்வயோః* என்கிற ஆலங்காரிகர்கள் "तद्भिन्नत्वे सति तद्गतभूयोधर्मवत्त्वं साम्यम्" என்று தெளிவாகச் சொல்லுவர்கள். இரண்டு வஸ்துக்கள் தனிப்பட இருந்து தீரவேண்டும். தன்மைகளில் பெரும்பாலு மொற்றுமையே யொழிய வஸ்துவில் ஐக்யமல்ல. 'சந்த்ர ஸமம் முகம்' என்றால் சந்திரன் வேறாகவும் முகம் வேறாகவும் இருப்பதை ப்ரத்யக்ஷத்திற் காண்கிறோம். இப்படி பல த்ருஷ்டாந்தங்கள் பார்க்கலாம். ஆகவே, பரமாத்மா வேறுதத்துவமாகவும் ஜீவாத்மா வேறுதத்வமாகவும் இருந்தாலொழிய ஸாம்யமுபைதி என்பது நிர்வஹியாது. "ब्रह्मैव भवति—ப்ரஹ்மைவ பவதி" என்றவிடத்திலுள்ள ஏவகாரத்திற்கு இவகாரத்தின் பொருள் கொள்ள வேணுமென்பதை வேதமே காட்டியிருக்கின்றது. எங்கே யென்னில்; யஜுர்வேதம் இரண்டாவது காண்டம் முதல் ப்ரச்நத்தில் "विष्णुरेव भूत्वेमान् लोकान् अभिजयति" என்றவிடத்தில் 'விஷ்ணுரேவ' என்றதற்கு 'விஷ்ணுரிவ' [விஷ்ணு போல] என்றே பொருள் கொள்ள வேண்டியிருப்பது பிறர்க்கும் உடன்பாடு. ஏனெனில், மேலே இமாந் லோகாந் அபிஜயதி என்று சொல்லியிருக்கையாலே.

ஸ்ரீஹர்ஷகவி இயற்றிய நைஷத காவியத்தில் இரண்டாவது ஸர்க்கத்தின் முதல் ச்லோகம் வெகு அற்புதமாக அமைந்திருக்கின்றது. நளமஹாராஜன் ஒரு தடாகத்திற்குச் சென்று ஹம்ஸபக்ஷி யொன்றைப் பிடித்துக் கொண்டான். அது விடுபடுவதற்குப் பலவாறு முயன்றும் பயன் பெறவில்லை. அரசன் மனமிரங்குமாறு பலபேசி விடுபட்டது. அதைச் சொல்லுகிறார் மஹாகவி *அதிகந்ய ஜகந்ய நீச்வராத்* என்னும் (2-1.) ச்லோகத்தினால். அதில் உத்தரார்த்தம்—* वचसामपि गोचरो न यः स तमानन्दमविन्दत द्विजः * [வசஸாமபி கோசரோ ந யஸ் ஸ தமாநந்தமவிந்தத த்விஜః] என்பது. விடுபட்ட அந்த ஹம்ஸபக்ஷியானது வாசாமகோசரமான மஹானந்தத்தை யடைந்திட்டதாக இங்குச் சொல்லப்படுகிறது. இந்த ச்லோகம் சிலேடையாகவும் அமைக்கப்பட்டிருக்கிறது. ஹம்ஸபக்ஷி விடுபட்டு இன்பமெய்தினது மாத்திரம் இங்குச் சொல்லப்பட்டிருக்கவில்லை. ஒரு வேதாந்தி முக்தி பெற்றுப் பேரின்பம் நுகர்வதும் இங்கு சப்த ஸந்நிவேச விசேஷங்களால் வெகு அழகாகக் காட்டப்பட்டிருக்கின்றது. 'விடுபட்டுப் பீடை தொலைந்தது' என்று இவ்வளவே சொல்லாமல் வாசாமகோசரமான ஆனந்தமடைந்தது என்றும் சொல்லியிருப்பது நல்ல தெளிவைப் பிறப்பிக்கவல்லது. *முக்திர் மோக்ஷோ மஹாநந்தః.*

கைங்கரியம் பண்ணுவதாவது வேலை செய்வது தானே; இது துக்கரூபமாக இருக்குமேயல்லது ஆனந்த ரூபமாக இருக்குமோவென்று சிலர் சங்கிக்கக்கூடும். வேட்டையாடச் சென்ற துஷ்யந்தமஹாராஜன் கண்வருடைய ஆச்ரமத்திலே புகுந்து

அங்கே சகுந்தலையைக் கண்டான்; அவளிடத்து முன்னைவிட மோஹங் கொண்டான். தான் மஹாப்ரபு என்னும் நிலையையும் மறந்து அவளுக்குக் கைங்கர்யம் செய்யப் பார்க்கிறான்—*ஸம்விஜயாமி நலிநீதல தாலவ்ருந்தை:—திருவாலவட்டம் பணிமாறட்டுமா? என்கிறான். *அங்கே நிதாய கரபோரு! யதாஸுகம் தே ஸம்வாஹயாமி சரணவுத பத்மதாம்ரௌ*—அம்மா! உனது செங்கமலத் திருவடிகளை என் மடி மீது இட்டுக்கொண்டு வருடட்டுமா? என்கிறான். இந்த கைங்கர்யம் செய்வதற்கு மேல் தனக்கு ஆனந்தமில்லையென்று நினைக்கிறானன்றோ. இதைத்தான் நம் ஆசாரியர்கள் (முமுக்ஷுப்படியில்) "சேஷத்வம் துக்கரூபமாகவன்றோ நாட்டில் காண்கிற தென்னில், அந்த நியமமில்லை; உகந்த விஷயத்துக்கு சேஷமாயிருக்கு மிருப்பு ஸுகமாகக் காண்கையாலே" என்ற திவ்ய ஸூக்திகளினால் வெளியிட்டருளினர். வேதார்த்த ஸங்க்ரஹத்தின் முடிவிலும் ஸ்வாமி இங்ஙனே பணித்தது காண்க. ... ... ... ... 33

## 34. மதுஸூதந ப்ரபந்நர் யார்?

" स्वपुरुषमभिवीक्ष्य पाशहस्तं वदति यमः किल तस्य कर्णमूले ।
परिहर मधुसूदनप्रपन्नान् प्रभुरहमन्यनृणां न वैष्णवानाम् ॥ "

ஸ்வபுருஷமபிவீக்ஷ்ய பாசஹஸ்தம் வததி யம: கில தஸ்ய கர்ணமூலே,
பரிஹர மதுஸூதநப்ரபந்நாந் ப்ரபுரஹமந்யந்ருணாம் ந வைஷ்ணவாநாம்.

யமகிங்கரன் பாசத்தைக் கையிற் கொண்டு புறப்பட, யமன் அவனை யழைத்துக் காதோடே ஒன்று சொன்னானாம்—*மதுஸூதநப்ரபந்நாந் பரிஹர—பகவந்நாராயணனிடத்தில் ப்ரபந்நரானவர்கள் யாவரோ அவர்களிடம் நீ செல்லாதே; உன் அதிகாரத்தை அவர்களிடத்தில் செலுத்தாதே; நான் அவைஷ்ணவர்களுக்கு ப்ரபுவேயொழிய வைஷ்ணவர்களுக்கு ப்ரபுவல்லேன் (அவர்கள் தாம் எனக்கு ப்ரபுக்கள்); அன்னவர்களை ஹிம்ஸிப்பதை விட்டு மற்ற பேர்களிடத்துச் செல்வாயாக என்று கிங்கரனுக்கு யமன் கட்டளையிடுவதாக இந்த ச்லோகமுள்ளது. இங்கு மதுஸூதநப்ரபந்நாந் என்கிற பதத்தினால் விவக்ஷிதர்களான பகவத் ப்ரபந்நர் யாவர்? என்று விமர்சிக்கவேணும். இதைத் திருமழிசைப் பிரான் தெளிவாக வெளியிட்டருளுகிறார்.

எங்ஙனேயென்னில்: நான்முகன் திருவந்தாதியில்—"திறம்பேன்மின் கண்டீர் திருவடிதன்னாமம், மறந்தும் புறந்தொழாமாந்தர்—இறைஞ்சியும் சாதுவராய்ப் போதுமின்களென்றான், நமனும் தன் தூதுவரைக்கூவிச் செவிக்கு" என்கிற பாட்டு மேலெடுத்த யமகிங்கரஸம்வாத ச்லோகத்திற்கு நேர்மொழிபெயர்ப்பாக அமைந்தது. அந்த ச்லோகத்தின் கருத்தும் இப்பாட்டின் கருத்தும் சிறிதும் வேற்றுமையின்றிக்கே ஒற்றுமைப்பட்டுள்ளது. ச்லோகத்தில் மதுஸூதநப்ரபந்நாந் என்றிருப்பதை மொழிபெயர்க்கின்ற ஆழ்வார் "திருவடி தன்னாமம் மறந்தும் புறந்தொழா மாந்தர்" என்றருளிச் செய்கிறார். எம்பெருமானைப் பணியாவிட்டாலும் தேவதாந்தர பஜனம் பண்ணாதேயிருப்பார் யாவரோ, அவர்களே மதுஸூதநப்ரபந்நர்கள் என்பது திருமழிசைப் பிரானுடைய திருவுள்ளம்.

ஒருவன் தேவதாந்தரபஜனமும் பண்ணுவதில்லை, ஸ்ரீமந்நாராயண பஜனமும் பண்ணுவதில்லை; இவன் ப்ரபந்நனென்று கொள்ளத்தகுவனோ? என்கிற சங்கை தோன்றக்கூடியது. ஒரு தெய்வத்தையும் பஜிப்பதில்லை யென்றால் சேஷத்வத்திற்கே இசையாதவன் என்று தானே தேறும். இது ஆத்மாபஹாரக்கள்வத்தில் சென்று முடியுமே. *கிம் தேந ந க்ருதம் பாபம் சோரேணாத்மாபஹாரிணா* என்னப்பட்ட பாபிகள் யமகிங்கரர்களுக்கு வசப்பட வேண்டியவர்களல்லவோ? இவர்களை இறைஞ்சும்படி யமன் கட்டளையிடுவது தகுமோ! என்று சங்கிக்க ப்ராப்தமேயாகும்.

திருமழிசைப் பிரானுடைய திருவுள்ளம் யாதெனில்; பகவச்சேஷத்வத்தோடு கூட தேவதாந்தர சேஷத்வத்தையும் கொண்டிருப்பார் பலருளரே இவ்வுலகில்; அது

மிகக்கொடிது என்று காட்டுவதேயாம். பகவச்சேஷத்வமில்லாமற் போனாலும் போகட்டும்; அந்ய சேஷத்வமில்லாமலிருந்தால் அதுவே மிக்க சிறப்பு என்பதே. நமக்கு துஷ்டஸஹவாஸமொழிந்து ஸத்ஸஹவாஸ முண்டாக வேணும். ஸத்ஸஹவாஸமில்லாமல் துஷ்டஸஹவாஸம் செய்வதும் தவறு; ஸத்ஸஹவாஸத்தோடு கூட துஷ்ட ஸஹவாஸமும் செய்வதும் தவறு. ஸத்ஸஹவாஸமில்லாமற் போனாலும் போகட்டும், துஷ்ட ஸஹவாஸமில்லாதிருப்பது நன்று என்று ஒரு பெரியவர் சொன்னால், இதன் கருத்து யாது? ஸத்ஸஹவாஸம் வேண்டாமென்பதன்று. துஷ்ட ஸஹவாஸம் மிகக் கொடிது என்பதே. இதை அவசியம் பரிஹரித்துத் தீரவேணும் என்பதில் முழுநோக்கு. இவ்வண்ணமாகவே, *காணிலுமுருப்பொலார் செவிக்கினாத கீர்த்தியார், பேணிலும் வரந்தர மிடுக்கிலாத* (திருச்சந்தவிருத்தம்—) என்னப்பட்ட தேவதாந்தரங்களை பஜிப்பது அவச்ய பரிஹரணீயம் என்று சொல்லிற்றாகிறது.

இன்னமும் சிறிது ஆழ்ந்து நோக்கினால் ஒரு விசேஷமும் புலப்படும்; திருமழிசைப்பிரான் பாசுரத்தில் "திருவடி தன்னாமம் மறந்தும்" என்றுள்ளது. ஒரு கால் பரிசயம் பண்ணாதவளவில் மறந்து என்று சொல்வதற்கு ப்ரஸக்தி கிடையாது. வேதத்தை அடியோடு ஓதாதவொருவன் 'நான் வேதத்தை மறந்தேன்' என்னமாட்டானே. மறப்புச் சொல்லும்போது பூர்வபரிசயம் ஸித்தித்தாக வேண்டும். ஆகவே, திருவடி தன்னாமம் மறந்துமென்ற விதனால் ஒரு கால் பகவத்ப்ரத்யாஸத்தியுண்டானமை விளக்கப்பட்டதாயிற்று. அஃதுண்டானவர்கள் அதை மறக்கவுமாம்; அந்யசேஷத்வ கந்தமும் தலைகாட்டப் பெறலாகாது என்றதாயிற்று.

இன்னமும் இதிலே மிக நுட்பமானதொரு கருத்துண்டு; அதையும் வெளியிடுவோம். ஒருவன் ஸ்ரீமந்நாராயண பஜனம் செய்யாததோடு த்வேஷமுங் கொண்டு தேவதாந்தரபஜனம் செய்து கொண்டிருந்தான்; அது தவறென்றும் ஸ்ரீமந்நாராயண பஜனமே செய்யவடுப்பதென்றும் ஒரு பெரியவர் பக்கலில் கேட்டுத் தெளிந்து அன்றே தேவதாந்தர பஜனத்தைத் தவிர்ந்தான். ஆனால் ஸ்ரீமந்நாராயணனிடத்தில் நெடுங்காலமாக த்வேஷங் கொண்டிருந்தனாதலால் அந்த த்வேஷநிலை மாத்திரம் மாறிற்றேயொழிய [அதாவது அத்வேஷநிலை யுண்டாயிற்றே யொழிய] ஆபிமுக்ய்யம் உண்டாகப் பெற்றிலன். ஆனாலும் அல்பத்வாரஸாபேக்ஷனை எம்பெருமான் இவனுடைய இந்த அத்வேஷநிலையையே கனத்ததாகக் கொண்டு இவனை ப்ரபந்ந கோடியிலே பரிகணனம் செய்து கொண்டால் அந்தத் தடைசெய்வாரில்லை. ஆக இந்த நிலையிலுள்ளவர்களும் ஸ்ரீவைஷ்ணவப்ரபந்நர்களென்று கொள்ளத் தகுந்தவர்களென்றதாயிற்று. ஸுக்ருதம் செய்கையும் துஷ்க்ருதம் தவிருகையுமாகிற இரண்டும் வேண்டியிருந்ததேயாகிலும் துஷ்க்ருதம் தவிர்ந்தவனையே கொண்டு எம்பெருமான் சிலரை ப்ரபந்ந கோடியிலே சேர்த்துத் கொள்ளக் குறையில்லை.

பகவத் ப்ரவ்ருத்திக்கு விரோதியான ஸ்வப்ரவ்ருத்தியில் நின்றும் நிவ்ருத்தியடைவதே ப்ரபத்தி—என்று நிஷ்கர்ஷித்தருளியுள்ள நம் முன்னோர்களின் திருவுள்ளத்தை நாம் ஒரு விதமாக முடிவு செய்யகில்லோம். பகவத் ப்ரவ்ருத்தி விரோதியான ஸ்வப்ரவ்ருத்தி சிலரிடத்தில் துஷ்கார்ய ரூபமாயிருக்கும், சிலரிடத்தில் ஸத்கார்ய ரூபமாயிருக்கும்; இரண்டிலும் வாசியில்லை. இரண்டும் பகவத்ப்ரவ்ருத்திக்கு விரோதியேயாதலால் அவற்றில் நின்றும் நிவ்ருத்தியடைந்த மாத்திரமே ப்ரபத்தியாக எம்பெருமானால் கொள்ளப்படும். இதைப் பற்றின விரிவு மற்றொரு காலாகும். ... 34

# 35. முமுக்ஷுப்படியின் ஏற்றம்

* மாறிமாறிப் பல பிறப்பும் பிறந்து துன்பக்கடலுள் துவள்கின்ற நம்போலியர் கல் வீடு பெறுவதற்கு உறுப்பாகத் தெரிந்து கொள்ளவேண்டிய விஷயங்கள் பலபலவுண்டு. அவற்றுள் அர்த்த பஞ்சக்ஜ்ஞானம் மிகவும் முக்கியமானது.

1. பரப்ரஹ்ம ஸ்வரூபஜ்ஞானம், 2. ஜீவாத்ம ஸ்வரூபஜ்ஞானம்,
3. உபாய ஸ்வரூபஜ்ஞானம், 4. புருஷார்த்த ஸ்வரூபஜ்ஞானம்,
5. விரோதி ஸ்வரூபஜ்ஞானம்.

என்கிற இவ்வைந்து விஷயவுணர்ச்சியே அர்த்தபஞ்சகஜ்ஞான மெனப்படும்.

இவ்வர்த்த பஞ்சக ஜ்ஞானத்தைத் திருமந்த்ரம் த்வயம் சரமச்லோகம் என்கிற மூன்று ரஹஸ்யங்களும் வெகு விசதமாகவுண்டாக்குகின்றபடியால் முமுக்ஷுக்களுக்கு இந்த ரஹஸ்ய த்ரயமே முக்கியமாக அறியத்தக்கதாயிற்று.

இந்த ரஹஸ்யத்ரயம் அவதரித்த க்ரமம் யாதெனில்; பெரிய திருமந்த்ர மென்றும் மூலமந்த்ர மென்றும் சொல்லப்படுகிற திருவஷ்டாக்ஷர மஹாமந்த்ரமானது பதரிகாச்ரமத்தில் அவதரித்தது. அதாவது, நாராயணமூர்த்தி நரமூர்த்திக்கு இதனை உபதேசித்ததாகச் சொல்லப்படுகிறது. மந்த்ரரத்நமாகிய த்வயமானது ஸ்ரீ விஷ்ணு லோகத்திலே பிராட்டிக்காக வெளியிடப்பட்டதென்று சொல்லப்படுகிறது. சரமச் லோகமென்பது ஸ்ரீபகவத்கீதையிற் சேர்ந்ததாகையாலே திருத்தேர்த்தட்டிலேயிருந்து அர்ஜுநனுக்காக அவதரிப்பிக்கப்பட்டதாம். ஆகவே இம்மூன்று ரஹஸ்யங்களுக்கும் ப்ரவர்த்தகன் ஸர்வேச்வரனேயாவன். இக்காரணத்தினால் ஆசார்யபரம்பரையில் முதல் ஸ்தானம் ஸர்வேச்வரனுடையதாக ஆயிற்று. “லக்ஷ்மீநாத ஸமாரம்பாம்.........வந்தே குருபரம்பராம்” என்று கூரத்தாழ்வான் அருளிச் செய்ததும் இது பற்றியேயாம்.

ஆகவிப்படி மஹாதயாளுவான ஸர்வேச்வரனாலே இந்நிலவுலகத்தில் ப்ரவர்த் திப்பிக்கப்பட்ட இந்த ரஹஸ்யத்ரயமானது சொல்வடிவத்தில் சுருங்கியிருந்தாலும் மிகவும் கம்பீரமான அரிய பெரிய பொருள்களையுடையதாதலால் ஸகல சாஸ்த்ர ப்ர வீணர்களான நம் பூருவாசாரியர்கள் இதில் பிரவேசித்து இதன் அர்த்த விசேஷங்களை யெல்லாம் அருமருந்தாக உபதேசித்து வந்தார்கள்.

எம்பெருமானார்க்கு முன்புள்ள பூருவாசாரியர்கள் இந்த ரஹஸ்யத்ரயப் பொருள் களை மிகவும் சேமித்து வைத்துக்கொண்டிருந்து வெகு ஏகாந்தமாகவே உபதேசித்து வந்தார்கள். இப்படி வருகையில், எம்பெருமானார் தமது விசாலமான திருவுள்ளத் தினால் ஸகல ஸம்ஸாரிகள் பக்கலிலும் கருணை கரைபுரண்டு, வரம்புகடந்து தாம் உபதேசித்து, தம்முடைய சிஷ்யர்களைக் கொண்டு உபதேசிப்பித்தும் போந்தார். இவ்விஷயம்—



“ ஓராண்வழியாய் உபதேசித்தார் முன்னோர், ஏராரெதிராசரின்னருளால்—பாருலகில்
ஆசையுடையோர்க்கெல்லா மாரியர்காள் கூறுமென்று, பேசி வரம்பறுத்தார் பின் ”

என்ற உபதேசரத்தினமாலைப் பாசுரத்தினாலும் அறியத்தக்கது.

எம்பெருமானார் காலம் தொடங்கி ஸம்ப்ரதாயார்த்த விசேஷங்கள் விரிவாகவே உபதேசிக்கப்பெற்றாலும் ரஹஸ்யத்ரயத்தின் அர்த்த விசேஷங்களை அவ்வெம்பெரு மானார் காலத்தில் ஏடுபடுத்தினவர்கள் யாருமில்லையென்றே சொல்லலாம்.

ரஹஸ்யத்ரய வியாக்கியானமாகக் கூரத்தாழ்வான் ஒரு க்ரந்தம் அருளிச்செய் திருந்தாரென்று ஊஹிக்க இடமுண்டு; ஸ்ரீமத் வேதாந்த தேசிகன் அருளிச்செய்த ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் சரமச்லோகாதிகாரத்திலே “ஆழ்வானுடைய சரமச் லோக வ்யாக்கியானத்திலும் இவ்வளவே விவக்ஷிதமாகையால் ஒரு விரோதமு மில்லை” என்கிற ஸ்ரீஸூக்தி காணப்படுவதால், கூரத்தாழ்வான் ரஹஸ்ய வ்யாக்கி யானம் அருளிச் செய்ததாகப் புலப்படுகின்றதன்றோ. ஆனால் அந்த க்ரந்தம் லுப்தம் [மறைந்து விட்டது] என்றே சொல்லப்படுகிறது.

*ஆழ்வானுடைய திருக்குமாரரான பட்டர் ரஹஸ்யத்ரய வியாக்கியானமாக அருளிச் செய்தது அஷ்டச்லோகீ என்கிற ஸம்ஸ்க்ருதக்ரந்தம். இது ஸுப்ரஸித்த மானதே. எட்டு ச்லோகங்கள் கொண்ட இச்சிறிய க்ரந்தத்தில் அர்த்த விசேஷங்கள்

பலவும் "பெரிய கனகவரையைச் சிறிய கடுகினில் அடைத்து வைப்பன்" (திருவரங்கக் கலம்பகம்) என்ற கணக்கிலே தொகுத்து வைக்கப்பட்டுள்ளன.

தேவப் பெருமாளுடைய அபராவதாரமென்று ப்ரஸித்தரும், வடக்குத் திருவீதிப்பிள்ளையின் திருக்குமாரரும் ஸர்வஜ்ஞருமான பிள்ளை லோகாசாரியர்தாமே ரஹஸ்ய க்ரந்தங்களை மிக விரிவாகவும் அழகாகவும் அநவத்யமாகவும் அருளிச் செய்தவராவர். அஷ்டாதச ரஹஸ்யம் என்று ஸுப்ரஸித்தமான க்ரந்தஜாலம் பிள்ளை லோகாசார்யர் அருளிச் செய்ததேயாம்.

அஷ்டாதசரஹஸ்யங்களுள், யாத்ருச்சிகப்படி, பரந்தபடி, ச்ரிய:பதிப்படி என்னும் க்ரந்தங்கள் ரஹஸ்யத்ரய வ்யாக்கியானமாக அவதரித்தவைகள். இருந்தாலும், முமுக்ஷுப்படி என்னும் திவ்ய க்ரந்தமே பலபடியாலும் பெருமை பெற்றதாயிற்று. மற்ற க்ரந்தங்களானவை அதிஸங்க்ரஹம், அதிக விஸ்தரம், ஸம்ஸ்க்ருத வாக்ய பாஹுள்யம் முதலியவற்றால் குறை பெற்றிருக்குமென்றும் அவ்வகைக் குறைகளுக்கு இடமின்றியே அவை யெல்லாவற்றுக்கும் பின்பு முமுக்ஷுப்படி யென்னும் இந்த க்ரந்தம் அருளிச் செய்யப் பட்டதென்றும், இதன் சீர்மையைக் கண்டு ஆஸ்திகர்கள் அனைவரும் இந்தக் க்ரந்தத்தையே விசேஷித்துப் பரிக்ரஹிக்கலாயினர் என்றும் அறியக் கிடக்கின்றது. மற்ற க்ரந்தங்களில் அருளிச் செய்யப்படாத பல அபூர்வ விஷயங்களும் இதனில் குடி கொண்டிருக்கின்றன வென்பதும் ஓர் ஏற்றம். ... ... 35

## 36. சதுர்தச வித்யாபாரங்கதத்வம்

சில மஹான்களை சதுர்தசவித்யாபாரங் கதர்களென்று கொண்டாடுவதுண்டு. பதினான்கு வித்யைகளில் கைதேர்ந்தவர்கள் என்பது இதன் கருத்து. பதினான்கு வித்யைகள் எவையென்னில், நான்கு வேதங்களுக்கும் அங்கமாக அமைந்த ஆறும், உபாங்கமாக அமைந்த எட்டுங்கூடிப் பதினான்கு என்கிறது. சிக்ஷா வ்யாகரணாதிகளான ஆறங்கங்களும், மீமாம்ஸா ந்யாய புராண தர்மசாஸ்ராதிகளான எட்டு உபாங்கங்களும் ப்ரஸித்தமானவை. இப் பதினான்கு வித்யைகளில் வல்லவர்களை சதுர்தசவித்யாபாரங் கதர்களென்று சொல்லுகிறோம். இங்ஙனே அர்த்தங்கொள்வது தவிர மற்றொரு விதம் நைஷத காவியம் முதல் ஸர்க்கத்தில் ஸ்ரீ ஹர்ஷ மஹாகவியினால் காட்டப்பட்டிருக்கின்றது. *அதீதிபோதாசரண ப்ரசாரணை:* என்கிற சுலோகம் காண்க. அதைச் சிறிது விவரிக்கிறோம். (சதுர்தச) என்பதற்கு நான்கோடே கூடிய பத்து என்று பொருள் கொள்ளுமளவில் பதினான்கென்று தேறுகிறது. அப்படியன்றிக்கே.

"चतस्रो दशाः यासां ताः विद्याः—चतुर्दशविद्याः"

என்று கொள்ளுமளவில் 'நான்கு அவஸ்தைகளையுடைய வித்தைகள்' என்று பொருள் தேறும். வித்யைகளுக்கு நான்கு அவஸ்தைகள் யாவை யென்னில்; வாசிக்கப்படுதல், அறியப்படுதல், அறிந்தபடியே அநுஷ்டிக்கப்படுதல், தாம் அநுஷ்டிப்பதோடு நில்லாமல் பிறரையும் அநுஷ்டிக்கச் செய்யப் பெறுதல் ஆகிய இவையாம்.

வித்தைகளை ஏடுபார்த்து உணருகையன்றிக்கே குருமுகமாய்க் கேட்கை அத்யயனம் செய்வது. இது முதல் அவஸ்தை. வாசிப்பவர்களெல்லாரும் விஷயம் தெரிந்து கொள்ளுகிறார்களென்பதில்லாமையாலே சிரமப்பட்டுப் படித்து விஷயங்களும் தெரிந்து கொள்ளப் பெறுதல் இரண்டாமவஸ்தை. தெரிந்து கொள்வதற்கு ப்ரயோஜனம் அநுஷ்டானமே யாதலால் தெரிந்து கொள்வதோடு நில்லாமல் அநுஷ்டானமும் செய்யப் பெறுகை மூன்றாமவஸ்தை. தான் அநுஷ்டிப்பதோடு நில்லாமல் பிறரையும் அநுஷ்டிப்பிக்கப் பெறுவது நான்காமவஸ்தை. ஆக இப்படிப்பட்ட சதுர்வித தசைகளையுடைய வித்யைகள்—சதுர்தச வித்யைகள். இப்படி சாடுவானவொரு நிர்வாஹத்தைக் காட்டின ஸ்ரீ ஹர்ஷமஹா கவியின் மேதை மெச்சத் தகுந்தது. ... ... 36

# 37. "ப்ராப்தாவும் ப்ராபகனும் ப்ராப்திக்கு உகப்பானும் அவனே."

ஸ்ரீவசந பூஷண திவ்ய சாஸ்த்ரத்தில் காணும் விலையுயர்ந்த ரத்னங்களில் இதுவொரு ரத்னம். (70 ஆம் சூர்ணை இது.) அடைகிறவனும் எம்பெருமானே, அடைவிப்பவனும் எம்பெருமானே, அடைந்ததற்குத் திருவுள்ள முகப்பவனும் எம்பெருமானே என்கிறது இந்த சூர்ணையில். தைத்திரீயோபநிஷத்தில் * ब्रह्मविदाप्नोति परम्—ப்ரஹ்மவித் ஆப்நோதி பரம் * என்று ஓதப்பட்டிருக்கிறது. ப்ரஹ்ம ஜ்ஞாநியானவன் பரம புருஷனை அடைகிறான் என்பது இதன்பொருள். இப்படிச் சொல்லியுள்ள விடம் ஒன்றிரண்டல்ல; பல பல வுண்டு. எம்பெருமானைச்சென்று கிட்டவேணுமென்று மநோரதிப்பவனும், அதற்குரிய க்ருஷிகளைச் செய்பவனும், க்ருஷி பலித்து அவன் திருவடிகளைச் சென்று சேர்பவனும் சேதநனாயிருக்க, 'ப்ராப்தா அவனே' என்று சொல்லி விடுவது சாஸ்த்ரார்த்தமாகுமோ வென்று கலங்கி யிருப்பர் பலர். "ப்ராபகன் அவனே" ப்ராப்திக்கு உகப்பானும் அவனே" என்று சொல்லுவதில் ஔசித்யமில்லையே யென்று பலர் கேட்கிறார்கள். அவர்கள் தெளியும்படி தெரிவிக்கிறோமிங்கு.

சேதநன்தான் பகவானை அடைகிறானே யொழிய பகவான் சேதநனை யடைகிறானல்லனே யென்று நினைப்பதில் தவறில்லை, இது யுக்தமே. ஆனால் ஆழ்ந்து பார்க்குமளவில் இந்த நினைவு ப்ரதிஷ்டிதமாகிறதா வென்று விமர்சிக்கவேணும். எம்பெருமான் நம்மைப் பெறுதற்காக எவ்வளவோ கிருஷிகளைப் பண்ணிப் போருகிறான். நாம் கரண களேபர தரித்ரர்களாய் भोग மோக்ஷசூந்யர்களாய் அசித்திற் காட்டில் வாசியற்றவர்களாய்க் கிடக்கிற தசையிலே நமக்குக் கரண களேபரங்களையும் தந்து ஞான விகாஸத்தையும் தந்து, இவ்வழியாலே நம்மை ஸ்ருஷ்டித்து நம்மை அங்கீகரிக்கைக்காகத் தான் அனேக அவதாரங்களையும் செய்தருளி, அப்படி அவதரித்த விடங்களிலே ஆச்ரயிப்பதற்கு ருசியை விளைக்க வேண்டித் தன்னுடைய திருக்குணங்கள் திவ்ய சேஷ்டிதங்கள் முதலானவற்றைப் பிரகாசிப்பித்து இவ்வழியாலே அவன் பண்ணின க்ருஷி பலித்ததையே நாம் நம்முடைய பற்றுதலாக நினைக்கிறோமத்தனை.

இவ்விஷயத்தை நம்மாழ்வாருடைய வொருபாசுரம் மிகத் தெளிவாகக் காட்டுகிறது: திருவாய்மொழியில் (8-8-3) *உணர்விலும்பரொருவனை அவன தருளாலுறல் பொருட்டு, என்னுணர்வினுள்ளேயிருத்தினேன்* என்னுமளவால் எம்பெருமானைத் தாம் ஸ்வீகரித்ததாகப் பேசி, உடனே *அதுவுமவனதின்னருளே* என்று, அந்த ஸ்வீகாரந்தானும் அவனுடைய நிர்ஹேதுக கிருபையினாலே யுண்டானதென்று ஆழ்வாரருளிச் செய்கையாலே நாம் ஸ்வீகரித்ததாக நினைக்கிற ஸ்வீகாரமும் அவனுடைய க்ருஷி பலமென்றே கொள்ளவேணும்—என்பது ஆழ்வார் திருவுள்ளமாகத் தேறுகின்றது. எம்பெருமானை ஸித்தோபாயமென்றும் ஸஹாயாந்தர நிரபேக்ஷனென்றும் சொல்லியிருக்கையாலே அந்த ஸித்தாந்தம் ஜீவிக்கவேண்டில் நாம் நினைக்க வேண்டிய நினைவு எப்படிப்பட்டதாக இருக்க வேணுமென்பதை நம் ஆசாரியர்கள் காட்டியருளுகிறார்கள்—"இத்தையொழியவும் தானே கார்யஞ் செய்யுமென்று நினைக்கக் கடவன்" என்று. நாம் செய்வதாக நினைக்கப்படுகிற ஸ்வீகாரத்துக்கும் எம்பெருமான் தானே க்ருஷி பண்ணுமவனாகையாலே, இந்த ஸ்வீகாரத்துக் காகவன்று அவன் நமக்குக் காரியஞ்செய்கிறது; இத்தை யொழியவும் இவ்வாத்மோஜ்ஜீவனத்தில் ப்ராவண்ய முடையனான தானே நம்முடைய இஷ்டங்களைத் தருகையும் அநிஷ்டங்களைத் தவிர்க்கையுமாகிற காரியத்தைச் செய்தருள்வனென்று நினைக்கக் கடவன் என்றபடி.

இவ்விஷயம் பக்தர்களின் நெஞ்சில் நன்கு படிவதற்காக அடுத்ததொரு வியாஸம் [பகவத்க்ருதஜ்ஞதையென்பது] எழுதுகின்றோம். அதனால் பரிபூர்ண த்ருப்தியை யடைவரோம். ... ... ... ... ...

# 38. பகவத்க்ருதஜ்ஞதை

எம்பெருமானுடைய பல திருக்குணங்களைத் திரட்டி ஆளவந்தார் ஒரே ச்லோகத்தில் அருளிச் செய்கிறார் ஸ்தோத்ரரத்னத்தில்; *வசீ வதாந்யோ குணவாந் ருஜு: சுசி: என்று தொடங்குவது அந்த ச்லோகம். அதில் க்ருதஜ்ஞ: என்பதும் ஒரு குணமாகப் பேசப்பட்டிருக்கிறது. செய்த நன்றியை மறவாதவனுக்கு க்ருதஜ்ஞனென்று பெயர். மனிதர்களுக்கு உரிய குணங்களுள் இக்குணமே முதன்மை பெறும். "எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டாம் உய்வில்லை, செய்ந் நன்றி கொன்ற மகற்கு" என்பது திருக்குறள். வடமொழியறநூல்களும் "कृतघ्ने नास्ति निष्कृति: —க்ருதக்நே நாஸ்தி நிஷ்க்ருதி:" என்று அன்றகின்றது. எல்லாப் பாவங்களுக்கும் ப்ராயச்சித்தங்களினால் போக்கடியுண்டு; செய்ந்நன்றி மறக்கை அல்லது செய்ந்நன்றி கொல்லுகையாகிற பாவமொன்றுக்கு மாத்திரம் ப்ராயச்சித்தம் ஒரு சாஸ்த்ரத்திலும் காணக் கிடைக்காதென்றே வடநூலாரும் தமிழ் நூலாரும் ஒருமிடறாகக் கூறியுள்ளார்கள்.

இந்த க்ருதஜ்ஞதை நம்போன்ற மனிதர்கட்கு இருக்க ப்ராப்தம். எம்பெருமானுக்கு இக்குணமிருக்கவேண்டியது அவசியமோ? நாம் பரஸ்பரம் உதவிகளை அபேக்ஷித்திருப்பவர்களாகையாலே நம்முடைய உதவியைப் பிறர் மறவாதிருத்தலும் பிறருடைய உதவியை நாம் மறவாதிருத்தலும் ஆவச்யகமாகும். நம்மாலே எம்பெருமானுக்கு ஆகவேண்டிய உதவி அணுவளவுமில்லை. அவன்றான் அவாப்தஸமஸ்தகாமனாகையாலே அவனுக்கு நாம் செய்யவேண்டுமுதவி என்ன இருக்கிறது? ஒன்றுமில்லையென்பது திண்ணம். ஆகவே அப்பெருமானை க்ருதஜ்ஞன் என்று கொண்டாடுவதற்கு விஷயமில்லையே! விஷயமுள்ளதென்னில்; எம்பெருமான் நம் போல்வாரான க்ஷுத்ரர்களிடத்தும் உதவியை எதிர்பார்க்கக் கூடியவனென்று அவனுக்குக் குறையே தேறும் ஆதலால் அவனுக்குக் குணமாகச் சொல்லப்பட்ட க்ருதஜ்ஞதையை எங்ஙனம் நிர்வஹிப்பது? என்று சிலர் சங்கிப்பர்கள். ஆளவந்தார் பகவத்குணமாக அநுஸந்தித்த க்ருதஜ்ஞதையை நிர்வஹிக்கின்ற பூருவாசாரியர்கள்

*न स्मरत्यपकाराणां शतमप्यात्मवत्तया। कथञ्चिदुपकारेण कृतेनैकेन तुष्यति—

ந ஸ்மரத்யபகாராணாம் சதமபி ஆத்மவத்தயா, கதஞ்சிதுபகாரேண க்ருதேநைகேந துஷ்யதி* என்கிற ஸ்ரீராமாயண ச்லோகத்தைக் கொண்டு நிர்வஹித்திருக்கக் காண்கிறோம். இந்த ச்லோகமானது இராமபிரானுடையதான க்ருதஜ்ஞதா குணத்தை நன்கு வெளியிடுகின்றது. ஏதேனுமொருவிதத்தில் யாரேனும் ஒருதவி செய்தாலும் அதனால் இராமன் எப்போதும் உள்ளம் பூரித்திருப்பதாகவும் நூற்றுக்கணக்கான தீங்குகளிழைத்தாலும் அவற்றைச் சிறிதும் நெஞ்சிற் கொள்வதில்லையாகவும் இந்த ச்லோகத்தில் ஸ்ரீராமகுணநிசயம் கூறப்பட்டுள்ளது. இதில் கதஞ்சித் என்று முன்னம் ப்ரயோகிக்கப் பட்டுள்ள பதம் குறிக்கொள்ளத் தக்கது. உபகாரம் செய்யவேணுமென்கிற எண்ணத்தோடு செய்கையன்றியே அபுத்தி பூர்வகமாகச் செய்ததாயிருந்தாலும் அதையும் பேருதவியாகக் கொண்டு மகிழ்பவனும் இராமன். நெஞ்சாரவே நூற்றுக் கணக்கான தீங்குகள் செய்யினும் அவற்றை நெஞ்சிற்கொள்ளானும்.

ஆனால் இங்கு ஒன்று சொல்லவேண்டியதாகிறது; *வெறிதேயருள் செய்வர்* என்று ஆழ்வாரருளிச் செய்தபடி ஒன்றுமே செய்யாதவர்கட்குங்கூட மிகச்சிறந்த அருளைச் செய்யுமியல்வினரான பெருமாள் ஒன்று செய்தவர்களுக்கு உகந்திருக்கிறாரென்றால் இது வியப்போ? இது பாராட்டத்தக்கதொரு குணமாகுமோ? ஆகாது தான். ஆனாலும் இராமன் தன்னை ஒரு மனிதனாக நடித்துக் காட்டினனாதலால் 'உலகில் மனிதர்களிடத்துக் காணும் குணங்களெல்லாம் இராமபிரானிடத்து உள்ளன' என்று காட்ட வேண்டுவது ப்ராப்தமாகிறபடியால் அந்த முறையில் காட்டலாமன்றோ!

கேண்மின்; குரக்கரசனான ஸுக்ரீவனிடத்திலும் அரக்கர் கோமானான விபீடணனிடத்திலும் இராமபிரான் காட்டியருளின திருவருள் வாயால் சொல்ல வொண்ணாதது, நெஞ்சாலும் நினைப்பரிது. இதற்கீடாக அவர்கள் செய்த நன்றி யாதென்று பார்க்குமளவில், விபீஷணன் சரணாகதி செய்தானென்றாவது சொல்லத்தக்கதுண்டு. ஸுக்ரீவனிடத்திலோ: *லோகநாத: புரா பூத்வா ஸுக்ரீவம் நாதமிச்சதி* என்றும் *ஸுக்ரீவம் சரணம் கத:* என்றுமுள்ள பிரமாணங்களின்படி இராமன் ஸுக்ரீவனைச் சரணம் புக்கதாகச் சொல்கிறதேயல்லது ஸுக்ரீவன் இராமனைச் சரணம் புக்கதாக இல்லை. ஆனாலும் இராமபிரானது திருவுள்ளத்தினால் ஸுக்ரீவன் பேருதவி செய்தானாகக் கொள்ளப்பட்டான். அவ்வுதவி யாதெனில்; இராமன் பிராட்டியைப் பிரிந்து மிக வருந்தி இன்னது செய்வதென்று தோன்றாமல் சென்று கொண்டிருக்கையில் *பம்பாதீரே ஹநுமதா ஸங்கதோ வாநரேண ஹ* என்னும்படி பம்பைக் கரையில் அனுமன் வந்து சந்தித்தனனன்றோ. இது ஸுக்ரீவனது கட்டளையினால் தானே நிகழ்ந்தது. அனுமன் இராமனிடம் வந்து சேர்ந்தும் 'நான் ஸுக்ரீவனால் அனுப்பப்பட்டு இவ்விடம் வந்தேன் உங்களைக் காண' என்றே சொல்லியிருக்கின்றனன். இத்தகைய மஹா குணசாலியான திருவடியை யனுப்பினது ஸுக்ரீவன் தன்னுடைய காரியத்திற்காகவாயினும், இராமன் அங்ஙனம் கொள்ளாது அதனைத் தனக்குச் செய்த பேருதவியாகக் கொண்டே [அதாவது, தனக்கு உசாத்துணையனுப்பிவைத்ததாகக்கொண்டே] ஸுக்ரீவனிடத்தில் பேரருள் புரிந்தனன்.

இப்படிக்கதா ஸந்தர்ப்பங்களைக் கொண்டு இராமபிரானிடத்திலே நாம் க்ருதஜ்ஞதா குணத்தை நிரூபித்துக் காட்டுவது இருக்கட்டும். ஆளவந்தார் *வசீ வதாந்ய:* என்கிற ச்லோகத்தில் அநுஸந்தித்த திருக்குணங்கள் பரந்தாமனான ஸ்ரீமந் நாராயணமூர்த்தியிடத்தே யாதலால் அக்குணங்களுள் ஒன்றான க்ருதஜ்ஞதையை ஒன்றான ஸ்ரீமந் நாராயணமூர்த்தியிடத்திலேயே நிரூபித்துக் காட்டவேணும். அதை நம் ஆசாரியர்கள் நிரூபிக்கும் விதம் மிகவும் ஆச்சரியமானது, அதனை விவரிப்போமினி.

க்ருதஜ்ஞ: என்னும் சொல்லானது (कृतं जानातीति कृतज्ञः) என்கிற வ்யுத்பத்தியின்படி, செய்கிற காரியங்களை யுணருபவன் என்று பொருள்படும். சேதநர்களாகிய நாம் செய்கிற காரியங்களை யுணருபவர் பகவான் என்றதாயிற்று. அனந்த கோடி ஜீவராசிகள் ஒவ்வொரு க்ஷணத்திலும் செய்யுங்காரியங்களை எம்பெருமான் தனது சிறந்த சக்தி விசேஷத்தினால் உடனிருந்து அறிகிறானென்பது ஆச்சரியப்படத் தக்க விஷயமன்றே. அதையா இங்குச் சொல்லுகிறது? என்னில்; கேண்மின்.

ஸர்வேச்வரன் நம் போன்ற சேதநர்களைத் தன்னருளுக்கு இலக்காக்கிக் கொள்வதற்கு உறுப்பாக நாம் செய்ய வேண்டிய காரியங்களை சாஸ்திரங்களில் பலவாறு சொல்லிவைத்திருக்கிறானென்பதை யாவருமறிவர். அவற்றுக்கு ஸுக்ருதமென்று பொதுவான பெயர் வழங்கும். 'நன்றாகச் செய்யப்பட்டது' என்பது இதன் பொருள். நாம் செய்யும் காரியங்களில் நன்றாகச் செய்யப்படுவதும் தீதாகச் செய்யப்படுவதுமாக இரண்டு வகைகள் உள்ளனவன்றே. அவை வடமொழியில் ஸுக்ருத, துஷ்க்ருத பதங்களாலும், தென்மொழியில் நல்வினை தீவினை யென்னுஞ் சொற்களாலும் வழங்கப்பெறும். ஸுக்ருதத்தைப் பற்றியே இங்குப் பேசுவோம். இது பொதுவாக இருவகைப்படும்—ஜ்ஞாதஸுக்ருதமென்றும் அஜ்ஞாதஸுக்ருதமென்றும். மனப்பூர்வமாகத் தெரிந்து செய்யும் நன்மைகள் ஜ்ஞாதஸுக்ருதமெனப்படும். நமக்கும் தெரியாமல் விளையும் நன்மைகள் அஜ்ஞாதஸுக்ருதமெனப்படும். இவற்றுள் முதல் வகுப்பான ஜ்ஞாதஸுக்ருதங்கள் பல பலவாயிருக்கும். தவம் புரிவது, தானஞ் செய்வது, யஜ்ஞயாகங்களைச் செய்வது, கங்கை யமுனை காவேரி முதலிய புண்ணிய தீர்த்தங்களிற் சென்று குடைந்தாடுவது, கோயில் திருமலை பெருமாள் கோயில் திருநாராயணபுரம் முதலான திவ்ய தேசங்களிற் சென்று பகவத் ஸேவை செய்வது, 'பேராயிரமு மோதுமின்கள்' என்கிற கட்டளைக்கு உட்பட்டு ஸஹஸ்ரநாமம் முதலான துதிகளை வாயாரச்

சொல்லுவது திருவிளக்கெரிக்கை திருமாலையெடுக்கை யென்று சொல்லப்படுகிற பல வகைக் கைங்கரியங்களைச் செய்வது...ஆகிய இப்படிப்பட்ட காரியங்களை 'இது செய்யக் கடவோம்' என்று ஸங்கல்பித்துக் கொண்டு மனஸ்கரித்துச் செய்வதானது ஜ்ஞாத ஸுக்ருதமெனப்படும்.

மேலே சொன்னபடி இன்ன நல்வினையைச் செய்யவேணுமென்று நாம் ஸங்கல்பித்துக் கொண்டு செய்யாவிடினும் கோல் விழுக்காட்டாலே நல்வினையாகப் பரிணமிக்கும் செய்கைகள் அஜ்ஞாத ஸுக்ருதமென்னப்படும். நல்லது செய்ய வேணுமென்று நாம் நினைத்துச் செய்யாதவற்றை ஸுக்ருதமென்கிற சொல்லால் வழங்கலாமோ? சாஸ்த்ரங்களினால் விதிக்கப்பட்டதாய் கர்த்தாவான சேதநனாலே புத்தி பூர்வமநுஷ்டிக்கப் பட்டதான செய்கையையன்றோ ஸுக்ருதமென்று வழங்கலாம். இன்ன ஸுக்ருதம் பண்ணினேனென்று கர்த்தாவின சேதநன் அறியாதவற்றை ஸுக்ருதமென்று எப்படிச் சொல்லக்கூடும்? என்று ஆக்ஷேபிக்க இடமுண்டு: இதற்கு நம் பூருவாசாரியர்கள் அருளிச் செய்யும் ஸமாதானத்தையே இங்குத் தெரிவிக்கிறோம். ஸ்ரீவசநபூஷணத்தில் பகவந் நிர்ஹேதுக க்ருபாவைபவப்ரகரணத்தில் (396-)

"சாஸ்த்ரமும் விதியாதே நாமுமறியாதேயிருக்கிற வித்தை ஸுக்ருதமென்று நாம் பேரிடுகிறபடி யென்னென்னில்; நாமன்று, ஈச்வரனென்று கேட்டிருக்கையாயிருக்கும்" என்றுள்ளது.

நம்மையறியாமல் நேர்ந்த நல்வினைக்கு ஸுக்ருதமென்று பேரிடுகிறது நாமன்று; ஸர்வமுக்திப்ரஸங்கம் வாராமைக்காக ஸர்வஜ்ஞனான ஸர்வேச்வரன் தான் ஸுக்ருதமென்று பேரிட்டு வைத்தான் என்று ஆசாரியர்கள் அருளிச் செய்வர்களாம். இதனால்! என்ன தேறுகிறதென்னில்; நமக்குத் தெரியாததாயிருந்தாலும் எம்பெருமானுக்குத் தெரிந்திருக்கையாலே அவன் கருத்தாலே ஸுக்ருதமென்னக் குறையில்லை என்றதாயிற்று.

இதற்கு மேல் ஒரு கேள்வி பிறக்கும். எம்பெருமானோ யதார்த்தஜ்ஞானமுள்ளவன். அவனுக்கு அந்யதாஜ்ஞான விபரீத ஜ்ஞானங்கள் கிடையாதென்று சாஸ்த்ரங்களாலறிகிறோம். நாம் மனஸ்கரித்துச் செய்யாததொன்றை அவன் ஸுக்ருதமென்று கொண்டானாகில் அது யதார்த்த ஜ்ஞானமாகுமோ? ஒருவன் ஸந்நிபாத ஜ்வரம் முதலிய கொடிய நோய்களினால் துன்பப்படுங்காலங்களில் தன்னையறியாமல் ஏதேதோ உளறுகிறான்; அபுத்திபூர்வமாக வெளிவருமந்த வுளறல்களில் யாராவது அர்த்தம் காண்கிறார்களோ? இல்லையன்றோ. அப்படியே நம்மையறியாமல் நாம் செய்யும் செயல்களை எம்பெருமான் ஸுக்ருதமென்று எப்படிக் கொள்ளக்கூடும்? என்று.

கேண்மின்; எம்பெருமான் சேதநர்களிடத்தில் இயற்கையான இன்னருள் பொருந்தியவன். இவனை எவ்வகையினாலாவது தான் அங்கீகரிப்பதற்கு அப்பெருமான் வழி தேடுபவன். இச்சேதநன் புத்தி பூர்வமாகச் செய்யும் நல்வினைகளை முன்னிட்டே இவனை அங்கீகரிப்பதாக எம்பெருமான் வைத்துக் கொண்டால் ஒருவனைக் கூட அங்கீகரிக்க அவகாசம் நேராது. ஏனெனில், நாம் புத்தி பூர்வமாகச் செய்வது தீவினைகளேயாதலாலும் நல்வினையை நாம் நெஞ்சாலும் நினைப்பவர்களல்லோமாதலாலும் நம்மை அங்கீகரிக்க எம்பெருமானுக்கு அவகாசமேது? நாமும் இழந்து அவனும் இழந்து போக வேண்டியதாகிறது. நம்முடைய இழவு கிடக்கட்டும். இழந்தோமென்கிற இழவுமின்றிக்கேயிருக்கிற நாம் நம்மிழவைப் பற்றிக் கவலைப்படாதொழிந்தாலும் சொத்துக்கு உடையவனாய் ஸ்வாமி யென்று பேர்பெற்றிருக்குமெம்பெருமான் இழந்து தரிக்கமாட்டானன்றோ. 'ஸுக்ருதம் செய்தவர்களையன்றி மற்றையோரை நான் அங்கீகரிக்கமாட்டேன்' என்று சாஸ்த்ரங்களில் அவன் பொறித்து வைத்திருப்பதனால் ஸுக்ருதம் செய்யாதவர்களை அங்கீகரிக்க முடியாமலிருக்கிறது. ஆகவே எம்பெருமான் இழந்தே போக வேண்டியதாகிறது. இழவாமைக்காக அப்பெருமான்: ஒரு கள்ள

வழியில் நுழைகிறான். (அதாவது) கரண களேபரங்களைப் பெற்றிருக்கிற சேதநன் வாளாகிடப்பதில்லை; "न हि कश्चित् क्षणमपि जातु तिष्ठत्यकर्मकृत्—ந ஹி கச்சித் க்ஷணமபி ஜாது திஷ்டதி அகர்மக்ருத்" என்று கீதையில் சொன்னபடி எப்போதும் ஏதாவதொரு காரியம் செய்து கொண்டே போதைப் போக்கிவருகின்ற சேதநன் செய்யும் காரியங்களிலே நாம் நன்மை (ஸுக்ருதம்) என்று பேரிட்டுக் கொள்ளும்படியான காரியம் ஏதாவதிருக்குமாவென்று பார்ப்போம்-என்று ஆராயத் தொடங்குகிறான். அவனுடைய அத்ருஷ்டத்தாலே அப்படிப்பட்ட காரியங்கள் நம்மிடத்திலே அவனுக்குக் கிடைத்து விடுகின்றன; அவற்றை ஸுக்ருதமாகவே அவன் திருவுள்ளம் பற்றுகிறான். நாம் மனப்பூர்வமாக ஸுக்ருதமென்று செய்யாததாகையாலே அஜ்ஞாதமென்கிறது. அவன் திருவுள்ளத்தாலே இது ஸுக்ருதமாகக் கொள்ளப்பட்டு விட்டபடியால் ஸுக்ருதமென்கிறது. ஆகவே அஜ்ஞாதஸுக்ருதமென்று பேர் பெற்று விட்டது.

இந்த அஜ்ஞாதஸுக்ருதமானது—யாத்ருச்சிகஸுக்ருதமென்றும் ஆநுஷங்கிக ஸுக்ருதமென்றும் ப்ராஸங்கிக ஸுக்ருதமென்றும் பல பெயர்களை யுடையதா யிருக்கும். இவை நம் போல்வாரிடமிருந்து எம்பெருமானால் எவ்விதமாகக் கொள்ளப்படுகின்றன வென்பதைச் சிறிது நிரூபிப்போம்: நாம் ஸம்ஸாரிகளாகையாலே மக்களைப் பெறுகிறோம். மகளை ஒருவனுக்கு மணம் புரிவிக்க வேண்டிய தாகிறது. மகனுக்கு ஒரு பெண்ணைக் கொள்ள வேண்டியதாகிறது. ஆகவே ஸ்ரீரங்கத்திலுள்ள ஒரு வரனுக்குத் தன் மகளைக் கொடுக்கவும், திருவெள்ளறையிலுள்ள வொரு பெண்ணைத் தன் மகனுக்குக் கொள்ளவும் நேருகிறதென்று வைத்துக்கொள்ளுங்கள். இந்த ஸம்ஸாரி அடிக்கடி வாய்ப் பேச்சுக்களில் ஸ்ரீரங்கத்தையும் திருவெள்ளறையையும் வாயாரச் சொல்லவேண்டி வருகிறது. "என்னுடைய மாப்பிள்ளை ஸ்ரீரங்கத்திலிருக்கிறார்—ஸ்ரீரங்கத்திலிருந்து என்னுடையமாப்பிள்ளை நேற்று வந்தார்- மாப்பிள்ளையை யழைத்துவர ஸ்ரீரங்கம் போய் வரப் போகிறேன்; என்னுடைய நாட்டுப் பெண் திருவெள்ளறையிலிருந்து இன்றுவந்தாள்" என்றிப்படி பலகால் வ்யவஹரிக்க நேர்கின்றது. இந்த வ்யவஹாரங்களில் திருவரங்கத்தையும் திருவெள்ளறையையும் பலகால் சொல்லுவதானது 'இந்த திவ்ய தேசங்களை நாம் சொன்னால் ஸுக்ருதமுண்டு' என்கிற எண்ணத்தினாலன்று; அம்பத்தூர் ஆவடி என்கிற ஊர்ப்பெயர்களைச் சொல்லுவது போலவே திருவரங்கம் திருவெள்ளறையென்னு மூர்ப் பெயர்களையும் இவன் சொல்லா நின்றான். ஆனாலும் ஏதேனு மொரு வியாஜத்தை எதிர்பார்ப்பதில் நோக்குடையனான எம்பெருமான் 'என்னூரைச் சொன்னானிவன்' என்று இதை யொரு ஸுக்ருதமாகக் கணக்கிடாநின்றான்.

மற்றுங்கேண்மின்; ஸம்ஸாரிக்குப் பிறக்கும் மக்களுக்கு ரங்கன் ராகவன் திருவேங்கடன் கோவிந்தன் கோபாலன் நாராயணன் மாதவன் என்றிப்படி பெயரிட்டு அந்தப் பிள்ளைகளை ஆர்வத்தோடு அழைக்கும் போதெல்லாம் இந்தப் பெயர்களைச் சொல்லியழைக்க நேர்கின்றது. தவிரவும் வாய்ப் பேச்சுக்களில் 'ரங்கன் வந்தான்' ராகவன் போனான், க்ருஷ்ணனைக் கண்டேன், ராமனோடு பேசினேன்' என்றிப்படி பலகாலும் சொல்ல நேருகின்றது. எம்பெருமானுடைய திருநாமங்களைச் சொல்லுகிறோமென்கிற எண்ணம் சிறிதுமில்லாமல் இங்ஙனே நிகழும் ஸம்ஸாரிகளின் வ்யவஹாரங்களில் 'என் பெயரைச் சொன்னானிவன்' என்று எம்பெருமான் இதை யொரு ஸுக்ருதமாகக் கணக்கிடா நின்றான்.

சில பாகவதர்கள் திருவேங்கடயாத்திரையாக வழி நடந்து செல்லா நிற்கையில் கள்ளர்கள் அவர்களை யடித்துப் பொருள்களை யபஹரிப்பதாக அணுகினார்கள்; அந்த ஸமயத்தில் சில ராஜஸேவகர்கள் தங்களுடைய காரியமாக ஆயுதங்களைத் தாங்கிக் கொண்டு அவ்வழியே அவர்கள் பின்னால் வந்து கொண்டிருப்பதைக் கள்ளர்கள் கண்டு,

இவர்கள் இந்த பாகவதர்களுக்குத் திருமேனிக் காவலாக வருகின்றார்கள்போலும் இங்கு நம்முடைய எண்ணம் ஒன்றும் நிறைவேறாது.' என்றெண்ணி வாளா விலகி யொழிந்தனர். இந்த நிகழ்ச்சி அங்கு யாத்ருச்சிகமாக வந்த ராஜஸேவகர்களுக்கும் தெரியாது, யாத்திரை செல்லுகின்ற பாகவதர்களுக்கும் தெரியாது; ஆனாலும் அங்கீகரிக்க அவகாசம் பார்க்கிற ஸர்வேச்வரன் அந்த ராஜஸேவகர்களை பாகவதரக்ஷணம் பண்ணின ஸுக்ருதிகளாகத் திருவுள்ளம் பற்றுகிறான். அந்த ராஜஸேவகர்கள் அந்த பாகவதர்கள்சென்ற வழியில் சென்றதுதன்னையே ஒரு ஸுக்ருதமாகக் கணக்கிடா நின்றான்.

ஒருவன் ஓரிடத்திலே நிலம் வாங்கி அதிலே வெங்காயம் உள்ளி முதலானவற்றைப் பயிர் செய்கின்றான். தண்ணீரிறைக்க அங்கே ஸௌகரியமில்லாமையால் நெடுந்தூரத்திலே நீருள்ளவிடத்தில் துலையிட்டு, தன் வயலிலே வந்து சேரும்படி தண்ணீரிறைக்கின்றான். அந்தநீர் ஒரு பெரிய வாய்க்காலாகப் பெருகி வயலுக்குச் செல்லா நின்றது. யாத்திரை செல்கின்ற சில பாகவதர்கள் தாபார்த்தர்களாய் தாஹம் மிகுந்து எங்கும் தண்ணீர் கிடைக்காமல் வருந்தி வருகையில் இந்தத் தண்ணீர்ப் பெருக்கைக் கண்டு பரமானந்தங்கொண்டு காலுங்கையும் முகமுங்கழுவி விடாய் தீர்ந்து வாழ்த்திச் சென்றார்கள். நெடுகந்தூரத்தில் துலையிட்டுத் தண்ணீரிறைக்கின்ற அவன் இதைச் சிறிது மறியாதவனாயிருந்தாலும், ஸர்வஜ்ஞனான எம்பெருமான் 'என்னடியார்களது விடாயைத் தீர்த்தானிவன்' என்று கொண்டு இதையொரு ஸுக்ருதமாகக் கணக்கிடா நின்றான்.

ஒரு தனிகன் தான் சூது சதுரங்கமாடுவதற்காக ஒரு சாவடி கட்டி அதிலே சூதாடிக் காலங்கழிக்கிறான். ஆனால் இரவு முழுதும் சூதாடிக் கண் விழித்திருக்க முடியாதே நடுநிசி வரையில் சூதாடி விட்டு உறங்குவதற்கு வீடுபோய் விடுகிறான். அப்போது, யாத்திரையாக வழி நடந்து வருகின்ற சில பரமபாகவதர்கள் தாங்கள் சயனிப்பதற்கு இடம் கிடைக்காமல் வருந்தியிருந்து இந்தச் சாவடியிலே யொதுங்க நேர்கின்றது. இப்படி ஒரு நாளல்ல; நாடோறும் நேர்கின்றது. இதை அந்தத் தனிகன் அறியான்; அறிந்தானாகில் ஒருவரும் உள்ளே புகாதபடி கதவுகளிடவும் ஏற்பாடு செய்திடுவன். இங்ஙனே சில பாகவதர்கள் தங்கிப் போகிறார்களென்பதை அவனறியாமையாலே சேமக்காப்பு செய்யப்படாமலிருந்து யாத்திரை செய்வார்க்குப் பேரின்பமளிக்கும் வசதியாக இருந்து வருகின்றது. இது எம்பெருமான் திருவுள்ளத்திலே பட்டு 'என்னடியார்க்கு ஒதுங்க நிழலைக் கொடுத்தானிவன்,' என்று ஸுக்ருதமாகக் கணக்கிடலாகிறது.

ஒருவன் கோஹத்திபண்ணியே ஜீவிக்குமியல்வினன். அவன் ஒருநாள் ஒரு பசுவைக் கண்டு அதைப் பிடித்துக் கொல்ல முயன்று தொடரத் தொடங்கினான்; இதை யறிந்த அந்தப் பசு அஞ்சியோடத் தொடங்கிற்று. இவனும் விடாது அதைத் தொடர்ந்து ஓடுகிறான். பசு ஓடும் வழியில் ஒரு பெருமாள்கோவில் இருந்தது. அதன் வலமாக ஓடிற்று அந்தப் பசு. இந்தக் கிராதகன் அதைத் தொடர்ந்து பிடிக்க வேண்டியதற்காகத் தானும் அந்தக் கோவிலை வலஞ் செய்வானாய் ஓடுகிறான். ஒரு பகவதாலயத்தை வலஞ் செய்கிறோமென்கிற எண்ணம் அவனுக்கில்லை. கோவிலை வலஞ் செய்வது ஸுக்ருதமென்கிற அறிவுமில்லையவனுக்கு. ஆனாலும் ஆள்பார்த்துத் திரியுமெம்பெருமான் 'இவன் என் கோவிலை வலஞ்செய்தான்' என்று இதை யொரு ஸுக்ருதமாகக் கணக்கிடா நின்றான்.

இங்ஙனே பல நிகழ்ச்சிகள் ஸம்ஸார வாழ்க்கையில் ஸம்பவிப்பவையுள. இவையே அஜ்ஞாதஸுக்ருதமென்னப்படுவன. மேலே நிரூபிக்கப்பட்டவற்றில் யாத்ருச்சிக ஸுக்ருத கோஷ்டியில் சேர்வன சில; ஆநுஷங்கிகஸுக்ருத கோஷ்டியில் சேர்வன சில. ஆக இப்படிப்பட்ட ஸுக்ருதங்களை எம்பெருமான் தானாக அறிந்து நம்மை

விஜயிகரிப்பதற்கு இவற்றை ஹேதுவாகவோ வியாஜமாகவோ கொள்ளுகிருனென்று இதுதன்னையும் நாம் சாஸ்த்ரங்கொண்டேயறிகிறோம். இப்படிப்பட்ட ஸுக்ருதஜ்ஞானம் எம்பெருமானுக்கு உள்ளது பற்றியே அவனுக்கு க்ருதஜ்ஞன் என்னும் புகழ் தோன்றியது. ஆளவந்தார் *வசீ வதாந்ய:* என்னும் ச்லோகத்தில் க்ருதஜ்ஞ: என்று கூறியது இவ்வளவு விஷயங்களைத் திருவுள்ளம்பற்றியே.

வால்மீகி பகவான் இராமனைப் பற்றிச் சொல்லுமிடத்து “कथञ्चिदुपकारेण कृतेनैकेन तुष्यति—கதஞ்சிதுபகாரேண க்ருதே நைகேந துஷ்யதி” என்றதில் கதஞ்சித் என்றது இவ்வளவு பொருள்களையும் உட்கொண்டிருக்கும். கதஞ்சித் க்ருதேந ஏகேந உபகாரேண துஷ்யதி—கதஞ்சித்கரணமாவது என்ன? என்று விமர்சிக்க வேணும். மநஸ்கரித்துச் செய்யாமல் கீழ் நிரூபித்தவகைகளிலே செய்வதே கதஞ்சித் கரணமென்க.

விபீஷண பரிக்ரஹ விஷயமான விவாதங்கள் தீர்ந்து அவனைத் தன்னிடம் அழைத்து வரும்படி பெருமாள் ஸுக்ரீவனுக்குக் கட்டளையிட்டுச் சொல்லும்போது “आनयैनं हरिश्रेष्ठ! दत्तमस्याभयं मया—ஆநயைநம் ஹரிச்ரேஷ்ட தத்தமஸ்யாபயம் மயா* என்றார் ஸுக்ரீவ! விபீடணனுக்கு நாம் அபயமளித்தோமாதலால் அவனை நீயே யழைத்து வா என்று சொல்லி, உடனே “विभीषणो वा सुग्रीव! यदि वा रावणस्स्वयम्—விபீஷணோ வா ஸுக்ரீவ யதிவா ராவணஸ் ஸ்வயம்* என்றார். இதன் பொருளாவது, ஸுக்ரீவ! நம்மை அடைக்கலம் புகுவதாக வந்து நிற்பவன் விபீஷணனென்று நீங்கள் சொல்லுவதனால் அவனை யங்கீகரித்ததாகச் சொன்னேன்; ஒருகால் விபீஷணனல்லாமல் இராவணனே அவனது வேடம் பூண்டு வந்திருப்பதாகத் தெரியவந்தால் அவ்விராவணனை அங்கீகரிப்பதாவென்று மறுபடியும் ஒரு விசாரம் வைத்துக்கொள்ளாமல் அவனையே தாராளமாக அழைத்து வா என்றபடி. இங்ஙனம் தம்முடைய உதாரமான திருவுள்ளத்தைக் காட்டுகின்ற பெருமாள் இராவணனிடத்தில் என்ன ஸுக்ருதங்கண்டு இந்த வார்த்தை சொன்னாரென்று ஆராயுமளவில், மஹாபாபியான அவ்விராவணனிடத்தில் புத்தி பூர்வமான ஸுக்ருதம் காணமுடியாமற் போனாலும் மேலே விவரித்த வகையில் யாத்ருச்சிகம் முதலிய ஸுக்ருதங்கள் காணநேரு மென்கிற துணிவு கொண்டே அங்ஙனமருளிச் செய்யலாயிற்றென்று நம் ஆசாரியர்கள் திருவுள்ளம் பற்றுகிறார்கள். இவ்வகைகளை நன்கு விமர்சிக்குங்கால் எம்பெருமானே ப்ராப்தா வென்று சொல்லலாம் படியிருக்கும். தன் ஸொத்தைச் சோரவிடாமல் தான் ப்ராபிக்குமவனென்கை. ... ... ... ... ... ... 38

## 39. எம்பெருமானோடு பழக்கம்

ஒரு நகரில் பெரிய வணிகரொருவரிருந்தார். அவர்க்குப் பெரிய வியாபாரிகள் பலர் நண்பர்களாயிருந்தனர். பாங்கர்களின் பரிசயமும் அவர்க்கு விசேஷமாகவுண்டு. பல தொழிலாளர்களின் நேசமுமுண்டு. பெரிய அதிகாரிகள் பலரும் தெரியும். பெரிய ஸ்டீமர் வியாபாரிகளுடைய நட்புமுண்டு. தங்கம் வெள்ளி வியாபாரிகள் தரகர்கள் மற்றும் பல பெரிய மனிதர்களும் அவர்க்கு வசப்பட்டிருந்தார்கள். எல்லாரோடும் நன்றாய்ப் பழகிச் சாதுர்யமாய் அச்சமில்லாமல் அந்த வணிகர் பேசுவார். எல்லாவிதமான வியாபாரங்களிலும் பூர்ணமான ஸாமர்த்தியம் அவர்க்கு இருந்தது. ஆனால் அவர் தம் தகப்பனாரோடு மாத்திரம் பேசமாட்டார். பேசவும் தெரியாது அவர்க்கு. தகப்பனாரோடு பேச அவர் மிகவும் வெட்கப்படுவர். தகப்பனாரெதிரே போகவும் கூசுவர்.

இங்கு நாம் ஆலோசிக்க வேண்டியதென்ன? எவன் தகப்பனாரெதிரே போகவும் அவரோடு பேசவும் உற்சாகங்கொள்ளாமல் ஒதுங்கியிருக்கிறானோ அவனிடம் அவ

னது தகப்பனுருக்கு எப்படி அன்பு இருக்கும்? தகப்பனார் ஸம்பாதித்த ஸொத்தை அநுபவிக்கிறான்; தகப்பனுருடைய தயவினால் யதேஷ்டமாக ஸுகம் அனுபவித்துக் கொண்டுமிருக்கிறான். ஆனால் தகப்பனாரோடு பேசுவது மாத்திரமில்லையென்றால் இது நியாயமாகுமா?



அன்பர்களே!, அந்த வணிகரைப் போலவேதான் நாமும் உலக வியவஹாரங்களில் மிகவும் தேர்ச்சி பெற்றிருக்கிறோம். நமது காரியங்களுக்காகப் பலரோடும் பல விதமாகப் பேசுகிறோம், பழகுகிறோம். ஆனால் நமக்கெல்லாம் பிதாவும் பரமதயாளுவுமான பகவானோடு ஒரு நாளாவது ப்ரீதியோடு மனப்பூர்வமாக நாம் பேசுகிறோமா? பழகுகிறோமா என்றால் இல்லை. நாம் அந்த ஸர்வேச்வரனுடைய க்ருபையினால்தான் இவ்வுலகத்திற்கு வந்தோம்; அவருடைய தயவினால்தான் தரித்திருக்கிறோம். அவரருளிய உணவுகளைத் தான் புஜிக்கிறோம். அவருடைய கருணையால் தான் கூடிய வரையில் நோயற்ற வாழ்வும் குறைவற்ற செல்வமுமாய் இருந்து வருகின்றோம். அவருடைய ஸொத்துக்களைத் தான் நாம் உபயோகிக்கிறோம், அநுபவிக்கிறோம். ஆனால் இப்படிப்பட்ட பேருபகாரியாய்ப் பரமதயாளுவான எம்பெருமானோடு ஒரு நாளாவது பிரேமம் கசிந்து இளகிய மனதோடு பேசுகிறோமில்லை; பழகுகிறோமில்லை. அவரோடு பேசும் வழியையே அறியாதவர்களாயிருக்கின்றோம். இது எவ்வளவு துக்ககரமான விஷயம்!



எம்பெருமானோடு பேசுவதென்றால் என்ன? எப்படி? என்று நீங்கள் கேட்கக் கூடும். எம்பெருமான் நமது கண்ணுக்குப் புலப்படுகிறாரா? நம்மோடு ... பேசுவாரா? என்றும் நீங்கள் ஆலோசிக்கக்கூடும். கேளுங்கள். ஒரு பெரிய மஹாராஜாவிடம் நாம் போய் நமது குறைகளைச் சொல்லிக் கொள்ளுகிறோம். ஒரு பெரிய தனவானிடம் ஒரு ஏழை போய்த் தனக்கு வேண்டியதைக் கேட்கிறான். மஹாராஜாவும் தனவானும் அவர்களுடன் பேசுகிறார்களென்று சொல்ல முடியுமா? ஒரு கால் பேசினாலும் பேசுவார்கள். பேசாமலிருந்தாலுமிருப்பார்கள். இது தெரிந்திருந்தும் அவர்களிடம் நாம் போகிறோம். அவர்களிடம் நமக்கு உண்மையான அன்பு இருப்பதாகக் காட்டிக் கொள்ளுகிறோம். நமக்கு வேண்டியதைக் கேட்கிறோம். இவ்விதமாகவே பரம்பொருளான ஸர்வேச்வரனிடம் நாம் நமது உண்மையான ப்ரீதியைக் காட்டி ஏன் பேசக்கூடாது?



எம்பெருமானோடு பேசுவதென்றால் என்ன? பழகுவதென்றால் என்ன? ஏகாக்ரமான மனதுடன் எம்பெருமானை தியானஞ் செய்து நம்மெதிரிலிருப்பதாகவே பாவித்து ஆழ்ந்த பேரன்புடன் அவனது திருநாமங்களைச் சொல்லி அவனது திருக்குணங்களை நெஞ்சால் நினைத்தும் வாயாற் சொல்லிப் புகழ்ந்தும் வருவதேயாம். எங்கும் நிறைந்து நமது ஹ்ருதயங்களிலும் வாஸஞ் செய்கின்ற பரமதயாளுவாய் ஆநந்த ஸ்வரூபியான பரமாத்மாவைத் தானும் ப்ரேமமயனாய்த் தியானித்து ப்ரார்த்தனை செய்து வருவதே அவனோடு பழகுவதாகும். இதுவே எம்பெருமானோடு பேசும் வகை. இப்படிப்பட்ட நிலைமை தமக்கு ஏற்படவே எம்பெருமான் திருவுள்ளமுகந்து நம்மோடு கலந்து பழகுவான்; கருணைக்கடலான ஸர்வேச்வரன் நம்மேல் கருணை கூர்ந்து நமது குறைகளை நீக்குவான். நமக்கு ச்ரேயஸ்ஸைக் கொடுப்பான். ஆகவே துயரக்கடலுள் ஆழ்ந்து பரிதவிக்கும் நாம் இனியாவது பரமபிதாவான எம்பெருமானைக் கிட்டி நாடோறும் அவனோடு பழகவும் பேசவும் உற்சாகங் கொள்வோமாக. ... ... 39

## 40. ஸ்ரீபாகவத விமர்சம்

பன்னிரண்டு ஸ்கந்தங்கள் கொண்டதான ஸ்ரீபாகவதத்தை சுகமஹர்ஷியின் திருவாக்காக உலகமெல்லாம் நம்பி மெச்சிப் பாராயணஞ் செய்து வருகிறது. நம்

முடைய தேசத்தைவிட வட இந்தியாவில் ஸ்ரீபாகவதத்தின் ஏற்றம் அபரிமிதமானது. ஸ்ரீபாகவதத்தோடு ஒத்ததும் அதற்கு மேற்பட்டதுமான புராணநூல் வேறு கிடையா தென்பது வட இந்தியர்களின் திடமான நம்பிக்கை. இரவும் பகலும் இதனையே பாராயணம் செய்து போது போக்கும் பண்டிதர்கள் வடநாட்டில் பல்லாயிரவர். இப்படிப்பட்ட வைபவம் வாய்ந்த ஸ்ரீபாகவதம் மஹர்ஷிப்ரோக்தமன்றென்றும் நம்முடைய பூருவாசாரியர்களால் ஆதரிக்கப்படாததென்றும் ஒரு பிரசாரம் இக்காலத்தில் தலையெடுக்கத் தொடங்கியிருக்கின்றது.

நம்முடைய பூருவாசாரியர்கள் ஸ்ரீபாகவதத்திலிருந்து மேற்கோள்கள் எடுத்துக் காட்டியருளவில்லையென்று சொல்ல முடியாது. ஸ்ரீராமாயணம் ஸ்ரீவிஷ்ணுபுராணம் முதலானவற்றிலிருந்து எடுத்துக் காட்டுவது போல் அவ்வளவு விசேஷமாக ஸ்ரீபாகவதத்திலிருந்து காட்டுவதில்லையென்று சொல்லலாமே தவிர வேறுவிதமாகச் சொல்ல முடியாது. ஸ்ரீக்ருஷ்ணாவதார விஷயத்தில் ஸ்ரீவிஷ்ணுபுராணம் தலையான ப்ரமாணமாகக் கொள்ளப்பட்டிருந்தது. ஆளவந்தார் தமது ஸ்தோத்ரரத்னத்தில்—

"तत्त्वेन यश्चिदचिदीश्वरतत्स्वभाव भोगापवर्गतदुपायगतीरुदारः ।
संदर्शयन्निरमिमीत पुराणरत्नं तस्मै नमो मुनिवराय पराशराय ॥"

என்று ஸ்ரீபராசரமஹர்ஷியைப் போரப்பொலியக் கொண்டாடியருளினபடியால் நம்பிள்ளை முதலான பேராசிரியர்கள் யாவரும் அந்த மஹர்ஷியின் திருவாக்கான ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் மிகச் சிறந்த ஈடுபாடு கொண்டார்களென்பது வாஸ்தவம்; அவ்வளவையே கொண்டு ஸ்ரீபாகவதத்தில் உபேக்ஷை கொண்டிருந்தார்களென்பதற்குச் சிறிதும் ஔசித்யமில்லை. ஸ்ரீபாகவதத்திலிருந்து நம் ஆசாரியர்கள் எத்தனை ச்லோகங்களை மேற்கோளாகக் காட்டியிருக்கிறார்களென்பதைப் பற்றி மற்றொரு ஸமயம் விரிவாகப் பேசுவோம். இப்போது சுருக்கமாகச் சொல்லுகிறோம்.

ஸ்ரீபாகவதத்தில் பதினோராவது ஸ்கந்தத்தில் ஆழ்வார்களின் திருவவதார விஷயமான ச்லோகங்கள் உள்ளன—

"कलौ खलु भविष्यन्ति नारायणपरायणाः । क्वचित्क्वचिन्महाभागा द्रमिडेषु च भूरिशः । ताम्रपर्णी नदी यत्र कृतमाला पयस्विनी । कावेरी च महाभागा....[கலௌ கலு பவிஷ்யந்தி நாராயணபராயணா:, க்வசித் க்வசித் மஹாபாகா த்ரமிடேஷு ச பூரிச:; தாம்ரபர்ணீ நதீ யத்ர க்ருதமாலா பயஸ்விநீ, காவேரீ ச மஹாபாகா..."] இத்யாதிகள். இந்த ச்லோகங்களை நம் பூருவாசாரியர்கள், அடிக்கடி கையாண்டு வருவதைக் காணுகின்றோம். ஸ்ரீநிகமாந்த குருவும் குருபரம்பராஸாரத்திலே இந்த ச்லோகங்களை யெடுத்துக் காட்டியுள்ளார். மற்றது பின்... ... ... ... ... 40

# 41. பொறுமையின் பெருமை

மனிதர்களுக்கு அமையவேண்டுங் குணங்களுள் பொறுமையே மிகச் சிறந்ததாகும். 'பொறுத்தவன் பூமியாள்வான்' என்றொரு பழமொழியுண்டு. பொறுமைக் குணமுடையவன் பூலோக சக்ரவர்த்தியாகப் பெறுவன் என்பது இப்பழமொழியின் கருத்து. பொறுமையைப் பற்றிப் பலர் பிரஸங்கமேடைகளில் வெகு ஆச்சரியமாக உபந்யாஸங்கள் செய்ய முடியும். ஆனால் அப்பொறுமையை அனுட்டானத்தில் கொண்டு வருவது அஸாத்யமென்றே சொல்லலாம். கிறிஸ்துவர்கள் பிரசங்கம் செய்யும்போது 'ஒருவன் உனது வலத்தாடையில் அடித்தானாகில் உடனே அவனுக்கு நீ உன் இடத்தாடையைக் காட்டு' என்று ஏசு உபதேசம் செய்திருப்பதாக அடிக்கடி கூறுவது வழக்கமாம். இதைச் சொல்லுபவர்கள் இப்படி யனுட்டிக்க முன் வருகிறார்

களாவென்று கேட்டால் 'அது சிரமந்தான்' என்கிருர்கள். உண்மையில் பொறுமைக் குணத்தைப் பழக்கம் செய்து கொண்டால் அதனுலுண்டாகும் நன்மைக்கு அளவு காணவே முடியாது. 'பொறுமையை நாம் வஹிக்க வேணும்' என்று எவ்வளவு தீவ்ரமான அத்யவஸாயம் கொண்டிருந்தாலும் ஸமயத்தில் அது கார்யகரமாகிறதில்லை. எப்படியோ கோபதாபங்கள் மேலிட்டுப் பொறுமைக்கு விரோதமான காரியங்களே பரவசமாகச் செய்ய நேர்ந்து விடுகிறது.

ஒரு ஸமயம் நாம் ஒரு பண்டிதரோடு பேசிக்கொண்டிருக்கையில் பொறுமையைப் பற்றின விசாரம் வந்தது. அப்போது அவர் கூறினர்—'பொறுமை என்பது ஸம்பாவிதமேயன்று; பொறுக்க முடியாத துக்கமுண்டானல் நாம் கதறாமலிருக்க முடிகிறதோ? அளவுகடந்த குளிர் மிகுந்தால் போர்வைகளை யெடுத்துப் போர்த்துக் கொள்ளாமலிருக்க முடிகிறதோ? கனத்த பசியுண்டானல் எதையாவது வாயில் போடாமலிருக்க முடிகிறதோ? நடந்து செல்லும்போது கனத்த மழை பெய்தால் சரேலென்று ஓடாமலிருக்க முடிகிறதோ? மல மூத்திரங்கள் தாங்க முடியாமற்போனல் விஸர்ஜனம் செய்யாமலிருக்க முடிகிறதோ? செய்து தீரவேண்டிய காரியங்களைச் செய்யாதிருக்க முடிகிறதில்லையே, காரணமுண்டானல் காரியமுண்டாகித் தீருமென்பது நாற்கொள்கை. பிறர் நம்மை நிந்திப்பதோ அடிப்பதோ செய்தால் இந்த நிந்தா ப்ரஹாரங்கள் கோபகாரணமாதலால் இந்த காரணமிருக்கும்போது இதன் காரியமான கோபம் எப்படி உண்டாகாமலிருக்க முடியும்? வஸ்திரத்தைத் தண்ணீரில் போட்டு இது நனையாதிருக்க வேணுமென்ருல் நனையாதிருக்குமோ? 'காரணே ஸதி கார்யஜந்ம' ஆதலால் அந்தந்த காரண கலாபங்களுக்குத் தக்கபடி காரியங்கள் தோன்றியே தீருமே; ஆகவே பொறுமையென்பது எப்படி உண்டாக முடியும்?' என்று.

அந்த பண்டிதர் தர்க்கசாஸ்த்ரத்தில் பரிசயமுடையவராயிருந்தபடியால் அவருக்கு நாம் எளிதாக ஸமாதானம் சொல்லி அவரை த்ருப்தி செய்விக்க முடிந்தது. அவருக்கு நாம் சொன்ன ஸமாதானத்தை இங்கு விவரிக்கிறோம். (காரணே ஸதி கார்யஜந்ம) காரணமிருந்தால் காரியமுண்டாகியே தீரும் என்பது சாஸ்த்ரஜ்ஞர்கள் சொல்லுமதன்று. ஒரு பானையுண்டாவதற்கு வேண்டிய காரணங்கள் ஒன்று தப்பாமல் எல்லாம் புஷ்கலமாயிருந்தாலுங்கூட பானை பண்ணவேண்டு மிடத்தில் மழை பெய்து கொண்டேயிருந்தால் பானையாகிற காரியம் உண்டாவதில்லை யென்பதைக் கட்கூடாகக் காண்கிறோம். காரணகலாபம் குறையற்றிருக்கவும் இங்குக் காரியம் ஏன் உண்டாகவில்லை? என்று கேட்டால் ப்ரதிபந்தகமிருந்த தென்றும் அதனல் தான் காரியமுண்டாகவில்லை யென்றும் சொல்லித் தீரவேண்டியதாகிறது. ஆகவே காரண ஸாமக்ரியில் ப்ரதிபந்தகாபாவத்தையும் அவசியம் சேர்க்க வேண்டியதாயிற்று. "प्रतिबन्धकाभावविशिष्टकारणसामग्री कार्यसाधनम्"—ப்ரதிபந்தகமில்லாமையோடு கூடின காரண ஸாமக்ரியே கார்ய ஸாதனம் என்று முடிந்தது. பிறருடைய நிந்தா ப்ரஹாராதிகளான காரணம் பரிபூர்த்தியாக இருந்தாலும் சிறந்த விவேகமுள்ளவனுக்குக் கோபதாபங்களுண்டாகவே மாட்டா. கோபதாபமாகிற காரியத்தின் உற்பத்திக்கு விவேகம் ப்ரதிபந்தகம். விவேகியாயிருந்தால் கோபிக்கமாட்டான், அவிவேகியாயிருந்தால் கோபிப்பன் என்று தேறிற்று.

பகவத் கீதையில் (10—4.)

"बुद्धिर्ज्ञानमसम्मोहः क्षमा सत्यं दमश्शमः—புத்திர் ஜ்ஞாநமஸம்மோஹ: க்ஷமா ஸத்யம் தமச் சம:" என்ற விடத்தில் க்ஷமையாவது இன்னது என்பதை விவரித்தருளாநின்ற ஸ்ரீபாஷ்யகாரர், "क्षमा—मनोविकारहेतौ सत्यपि अविकृतमनस्त्वम्" மனம் விகாரமடைய வேண்டிய ஹேது இருக்கச் செய்தேயும் விகாரமடையாத மனமுடைமையே க்ஷமை" என்றருளிச் செய்தார். இவ்விடத்துத் தாத்பர்ய சந்த்ரிகையில்; "ननु कथं हेतौ सति

तत्कार्यनिवृत्तिः ? तथात्वे तस्य हेतुत्वमेव हीयेत'' என்று சங்கித்துக் கொண்டு. [illegible] என்று தொடங்கி அழகாகப் பேசியிருக்கிற ஸமாதானம் குறிக்கொள்ளத்தக்கது. [illegible] न अवश्यं हेतौ सति कार्येण भवितव्यमिति नियमः ; अपि तु प्रतिबन्धकरहितायां सामग्र्यां सत्याम् [illegible] அங்கு உயிரான வார்த்தை.

இராமபிரான் ஸுக்ரீவமஹாராஜர்க்குப் பட்டாபிஷேகஞ்செய்து [illegible]காலம் பொறுத்து வரும்படி அவர்க்கு விடை கொடுத்தனுப்பி விட்டு இளையபெருமாளும் தானுமாக மால்யவானிலே எழுந்தருளியிருக்கையில் மழைகாலம் முடிந்த பின்பும் ஸுக்ரீவமஹாராஜர் படை திரட்டிக்கொண்டு வந்திலராக இளையபெருமாள் பெருமாளுடைய நியமனத்தினால் சீறிச்சிவந்து கிஷ்கிந்தாத்வாரத்திலே புகுந்து கர்ணகடோரமான நாணொலியை யெழுப்பினவளவிலே தாரை ஓடி வந்து, "किं कोपमूलं मनुजेन्द्र पुत्र !—கிம் கோபமூலம் மநுஜேந்த்ரபுத்ர !"—சக்ரவர்த்தி திருமகனாரே ! நீர் இங்ஙனே சீறுகைக்கு மூலமென்ன ? என்று கேட்கிறாள், தாங்கள் சொன்னபடி நடந்து கொள்ளாமல் போகபரவசர்களாயிருந்தொழிந்ததுதான் கோபமூலம் என்பதை அவள் அறியாதவளோ ? அறிந்து வைத்தும் 'கிம் கோபமூலம் ?' என்று அவள் (தாரை) கேட்டிருப்பதானது ஆச்சரியமான சாஸ்த்ரார்த்தத்தை உட்கொண்டது. எங்களுடைய அபசாரம் கோபஹேதுவானாலும் அந்த ஹேது ப்ரதிபந்தகாபாவ விசிஷ்டமன்றே ; ப்ரதிபந்தகமிருக்கச் செய்தே (கோபமாகிற) காரியம் எப்படி பிறந்தது ? உம்முடைய க்ஷமாகுணம் கனத்ததாயிருக்க, எங்ஙனே சீற்றமுண்டாயிற்று ? என்பதன்றோ தாரையினது கேள்வியின் ஸாரம்.

திருவாய்மொழியில் (1—4—7) *என் பிழைத்தாள் திருவடியின் தகவினுக்கு* என்றவிடத்து ஈட்டில் உள்ள ஸ்ரீஸூக்திகள் : கல்னெஞ்சையும் உருக்கவல்லவை ; "கிம் கோபமூலம்" என்றாளிறே தாரை ; ராஜபுத்ரர்களை நாலுமாஸம் மின்னுக்குமிடிக்கும் இரையாக்கித் தாங்கள் போகப்ரவணராயிருந்தவத்தை யொன்றும் புத்திபண்ணாதே "உம்முடைய கோபத்துக்கு அடி யென் ?" என்றாளிறே—அவர்கள் பொறையை நினைத்திருந்த கனத்தாலே" என்பவை நம்பிள்ளை யீட்டு ஸ்ரீஸூக்திகள். ... 41

## 42. வடநாட்டினரின் பாதசாரயாத்திரை

வடநாட்டிலிருந்து எண்ணிறந்த பக்தர்கள் ராமேச்வரயாத்திரை யென்றும், பக்ஷிதீர்த்த யாத்திரை யென்றும் சொல்லிக்கொண்டு காலால் நடந்து செல்வதை நாம் தினப்படியாகப் பார்த்துக் கொண்டிருக்கிறோம். பைராகிகள் என வழங்கப்படும் வகுப்பினர்கள் இதில் விசேஷமாகச் சேர்ந்திருக்கிறார்கள். இவர்களில் அடியோடு விவாஹமே செய்து கொள்ளாதவர்களுமுண்டு. விவாஹம் செய்து கொண்டு குடும்ப வாழ்க்கையிலிருப்பவர்களும் மக்கள் மனைவியரை விட்டு 'ஜெ ஸீதாராம்' என்று சொல்லிக் கொண்டு யாத்திரை செய்பவர்களுமுண்டு. வண்டி, ரைல், பஸ் முதலான எவ்வித ஸாதனத்தையும் இவர்கள் எதிர்பாராமல் காலால் நடந்து செல்வதென்றே விரதமாகக் கொண்டிருக்கின்றனர். ஆங்காங்கு தங்குவதற்கு வீடுகளை யபேக்ஷிப்பதுமில்லையிவர்கள். நிழலுள்ள மரத்தடிகளிலே யிருந்து அங்கேயே ரொட்டி முதலான லேசான ஆஹாரங்களினால் வயிறு வளர்த்து சிறிது விச்ராந்தி செய்து நடந்து செல்வதிலேயே கண்ணுங் கருத்துமா யிருக்கிறார்கள்.

இவ்விதமாக இவர்கள் யாத்திரை செய்வது இன்று நேற்றல்ல ; அநாதிகாலமாகவே யுள்ளதென்று தெரிகிறது. இவர்களை யுத்தேசித்தே வழியெங்கும் பலவிடங்களில் "ஸதாவர்த்தி கொடுப்பது" என்கிற ஏற்பாடு நெடுநாளாகவே யுள்ளது. 'ஸதாவ்ரதி' என்கிற வடசொல் 'ஸதாவர்த்தி' யென்று திரிந்து வழங்கி வருகின்றது.

ஸதா யாத்திரையையே விரதமாகக் கொண்டவர்களென்னும் காரணத்தினால் இவர்கள் ஸதாவ்ரதிகளெனப்படுவர். இவர்களுக்கு அரிசியும் விறகும் காலணாவும் கொடுக்கப் பல வூர்களில் வடநாட்டு ஸேட்டுக்கள் முதலானவர்கள் ஏற்பாடு செய்து நாளைக்கும் நடத்திவருகிறது. இதுவே ஸதாவர்த்தி கொடுப்பதென்பது. இவர்களை யுத்தேசித்துப் பல விடங்களில் (வழிகளில்) சாவடி சத்திரங்களும் ஏற்பட்டிருக்கின்றன. வெய்யில் மழை பாராமல் 'ஓடித்திரியும் யோகிகள்' என்னும் படியாக ஓடித்திரிகின்ற இந்த யாத்திரிகளைக் காணுந்தோறும் 'நமது தென்னாட்டிலிருந்து இப்படி யாத்திரை செல்வார் ஒருவர் கூட இல்லையே' என்று நமது மனதில் தோன்றுவதுண்டு. அந்தத் தோற்றமே இந்த வியாஸத்தை எழுதுவித்தது. ... ... ... 42

## 43. ஸ்ரீவைஷ்ணவர்களின் பாஹ்யலக்ஷணாவச்யகதை

ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணத்தை நமது சாஸ்த்ரங்கள் பலவிதமாகக் கூறியுள்ளன. "ये कण्ठलग्नतुलसीनलिनाक्षमालाः ये बाहुमूलपरिचिह्नितशङ्खचक्राः । ये वा ललाटफलके लसदूर्ध्वपुण्ड्राः ते वैष्णवा भुवनमाशु पवित्रयन्ति—யே கண்ட லக்நதுளஸீநலிநாக்ஷமாலா: யே பாஹுமூல பரிசிஹ்நித சங்கசக்ரா:, யே வா லலாடபலகே லஸதூர்த்வபுண்ட்ராஸ் தே வைஷ்ணவா புவநமாசு பவித்ரயந்தி" என்கிற இந்த ச்லோகம் பெரும்பாலும் பலருமறிந்ததாகும். துலஸீநளிநாக்ஷமாலைகளைக் கழுத்திலணிந்து கொள்வது, திருமண்காப்பை ப்ரகாசமாகச் சாத்திக் கொள்வது, திருவாழி திருச்சங்குகளின் திருவிலச்சினையைத் தோள்களில் அணிந்து கொள்வது ஆகிய இவற்றையுடையவர்கள் ஸ்ரீவைஷ்ணவர்களென்றும், இவர்கள் லோகபாவநர்களென்றும் இந்த ச்லோகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் இவ்வளவே ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணமென்ன முடியாது. "नचलति निजवर्णधर्मतो यः सममतिरात्मसुहृद्विपक्षपक्षे—ந சலதி நிஜவர்ண தர்மதோ ய: ஸமமதி ராத்மஸுஹ்ருத் விபக்ஷபக்ஷே" இத்யாதிகளான பல ச்லோகங்களினால் தெரிவிக்கப்படுகிற ஸ்ரீவைஷ்ணவலக்ஷணமே அந்தரங்கமானதென்று பெரியார்கள் கருதுகின்றார்கள். "கொக்கைப் போலிருக்கும், கோழியைப் போலிருக்கும், உப்பைப் போலிருக்கும், உம்மைப் போலிருக்கும்" என்று ஆசார்ய கோஷ்டிகளில் ப்ரஸித்தமான வார்த்தைகளைக் காணும் போதும் ஸ்ரீவைஷ்ணலக்ஷணத்தில் அந்த:கரண சுத்தி தான் மிக முக்கியமாகக் கருதப்படுகின்றதாய்த் தெரியவருகின்றது. நஞ்சீயரை யொருவர் ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணம் ஏதென்று கேட்டதற்கு அவர் ஸாதித்தாராம்—'ஸ்ரீவைஷ்ணவலக்ஷணம் ஒருவர் கேட்டு ஒருவர் சொல்லும்படியாயோ இருக்கின்றது? பிறர் நோவுகண்டு ஐயோவென்றிருந்தானாகில் நமக்கு ஸ்ரீவைஷ்ணவத்வமுண்டென்று தனக்குத்தானே அறுதியிட்டுக் கொள்ளலாம்; பிறர் நோவுகண்டு பெருமகிழ்ச்சி கொண்டிருந்தானாகில் நமக்கு ஸ்ரீவைஷ்ணவத்வமில்லை யென்று தனக்குள் தானே முடிவு செய்து கொள்ளலாம்' என்று. ஆக இவற்றால் வெளி வேஷங்களினால் ஸ்ரீவைஷ்ணவத்வம் தேறாதென்றும் அந்தரங்க சுத்தியைக் கொண்டே அது நிலை பெறுமென்றும் விளங்குவதனால் திருமண் காப்பணிதல் துளஸீ நளிநாக்ஷமாலைகளையணிதல் முதலான வெளியாடம்பரங்கள் அவசியமற்றவை என்று சிலர் நினைக்கிறார்கள், பேசுகின்றார்கள்.

உண்மையில் நடந்ததொரு செய்தியைக் கேண்மின்; D. S. P. என்கிற போலீஸ் ஜில்லா ஸூபரின்டெண்டெண்ட் அதிகாரியொருவர் ஒருநாள் ஒரு கிராமத்திற்குச்செல்ல நேர்ந்தது. அங்கே ஒரு மாட்டு வண்டியில் உட்கார்ந்து கொண்டு மிகக் குறுகிய தெருவில் செல்லுகின்றார். அந்த வீதியில் ஒரு வண்டி தான் போவதற்கு இடமுள்ளது. எதிரே வேறொரு வண்டி வந்தால் ஏதாவதொரு வண்டியைப் பின்னுக்குத் திருப்பியே யாக வேண்டும். வேறுகதி கிடையாது. D. S. P. போகிற வண்டி அந்தத் தெருவில்

இருபது மைல் தூரம் சென்ற பிறகு எதிரே ஒரு வண்டி தென்பட்டது. அதில் சாமானிய மனிதர் சிலர் இருக்கிறார்கள். ஏதேனுமொரு வண்டியைப் பின்னுக்குத் திருப்பியேயாக வேண்டுமே. எதிரே வந்த வண்டியைத் திருப்புவதானால் அதிக தூரம் திருப்பியடிக்க வேண்டியதாகிறது. இந்த வண்டியைத் திருப்புவதானால் ஸ்வல்ப தூரமே திருப்பவேண்டியதாகிறது. நியாயப்படி இதைப் பின்னுக்கடிக்க வேண்டியதே யுக்தமாயிருந்தும் இந்த வண்டிக்காரன் எதிர் வண்டிக்காரனைப் பின்னுக்குத் தள்ளும்படி அதட்டுகிறான். அவனோ இவனை அதட்டுகிறான். இவன் வண்டியில் D. S. P. உட்கார்ந்திருப்பதால் தன் வண்டிக்கு ஏற்றம் நினைத்து 'ஐயா இருக்கிறார்; ஜாக்கிரதை! பின்னுக்குத் தள்ளு; வீணாக கெட்டுப் போய் விடாதே' என்று அதிகமாக அதட்டுகிறான். ஆனால் D. S. P. அதிகாரியானவர் தன் அதிகாரத்திற்குரிய உடுப்பு (ட்ரஸ்)களை அணிந்து கொள்ளாமல் பெட்டிக்குள்ளே வைத்து விட்டு ஒரு பக்கிரி போலவே யிருப்பதால் எதிர் வண்டிக்காரனுக்கு ஐயாவின் பெருமை தெரிய வழியில்லை. ஆதலால் 'ஐயா என்ன பண்ணிவிடுவர்? உன் வீண் மிரட்டலுக்கு இங்கு யாரும் பயப்படுவாரில்லை' என்று ஏதேதோ சொல்லி யதட்டுகிறான். பிறகு D. S. P. அதிகாரியும் அந்த எதிர் வண்டிக்காரனை வெருட்டத் தொடங்கினார். இவரை அதிகாரியாக அறிந்து கொள்ளாமையாலும் அறிந்து கொள்ள ப்ரமேய மில்லாமையாலும் இவரையும் அவன் எதிர்த்துப் பேசுகிறான். அப்போது அதிகாரியானவர் தமது கடமையையுணர்ந்து பெட்டியைத் திறந்து உடுப்புகளை யெடுத்து அணிந்து கொண்டு கையில் பிரம்பையுங் கொண்டு நின்றார்; உடனே அந்த எதிர் வண்டிக்காரன் விஷயமறிந்து அஞ்சி நடுங்கி நமஸ்காரஞ் செய்து மன்னிப்புக் கேட்டுக்கொண்டு தன் வண்டியைப் பின்னுக்குத் தள்ளிக் கொண்டு சென்றான்.

இதுவொரு ஸாதாரண கதையானாலும் இதிலிருந்து உயர்ந்த தத்துவம் நாமறியக் கிடக்கிறது. D. S. P. முதலானவர்கள் உண்மையில் அதிகாரிகளேயானாலும் அவரவர்களுக்குரிய லக்ஷணங்கள் [பாஹ்ய வேஷங்கள்] இல்லாத வரையில் அவர்களுக்கு மதிப்பு ஏற்படுகிறதில்லை. அதுபோலவே நாமும் ஆந்தரமாக எவ்வளவு அதிகார ஸம்பத்தியை உடையோமாயிருந்தாலும் சாஸ்த்ரங்களில் நமக்கென்று ஏற்பட்டிருக்கிற பாஹ்ய சின்னங்களையும் அவசியம் ஆதரிக்கவே கடமைப் பட்டிருக்கிறோம். “द्रवन्ति दैत्याः प्रणमन्ति देवताः नश्यन्ति रक्षांस्यपयन्ति चारयः—த்ரவந்தி தைத்யா: ப்ரணமந்தி தேவதா: நச்யந்தி ரக்ஷாம்ஸி அபயந்தி ச அரய:” என்று ஸ்ரீவிஷ்ணுதர்மத்தில் அற்புதமாகச் சொல்லப்பட்டிருக்கின்ற பெருமை நமக்கு நிலை நிற்க வேண்டில் நமது பெரியோர்கள் ஆதரித்த பாஹ்ய சின்னங்களை நாம் மிகுந்த பிரதிபத்தியுடன் ஆதரிக்கவே வேண்டும். அதுதான் நமக்கு உண்மையில் கௌரவாவஹம். ... 43

# 44. பெரியாழ்வார் திருவாக்கில் சங்கா ஸமாதானம்

பெரியாழ்வார் திருமொழியில் நான்காம் பத்தில் ஆறாவது பதிகம் “காசுங் கறையுடைக் கூறைக்கும்” என்று தொடங்குவது. இப்பதிகத்தின் ப்ரமேயம் என்னவென்றால், உலகில் அவரவர்கள் தந்தம் மக்களுக்குப் பெயரிடும்போது க்ஷுத்ரபலன்களை நச்சி க்ஷுத்ர தெய்வங்களின் பெயர்களையும் மற்றும் பொருளற்ற பல பெயர்களையும் இடாமல் ஸ்ரீமந்நாராயணனுடைய திருநாமங்களை இடவேணுமென்று உபதேசஞ் செய்வதே இப்பதிகத்தில் ஆழ்வார் எடுத்துக் கொண்ட விஷயம். நிகமனப் பாசுரத்தில் ‘சீரணிமால் திருநாமமேயிடத் தேற்றிய வீரணி தொல் புகழ் விட்டுசித்தன் விரித்த” என்றிருப்பது கொண்டும் இதனையறியலாம். பாசுரந்தோறும் “கேசவன் பேரிட்டு நீங்கள் தேனித்திருமினோ” என்றும் “செங்கணெடுமால் சிரீதரா வென்றழைத்தக்கால்” என்றும் “எம்பிரான் திருநாமமே நச்சுமினோ” என்றும்..... இப்படி பகவந்நாமங்களை யெடுத்துரைத்து இவற்றையே மக்களுக்கு இடவேணுமென்

றும், இப்படி யிட்டால் இடுகிற மாதாபிதாக்களுக்கு நரக ப்ராப்தியே நேராதென்றும் அருளிச் செய்யப்படுகிறது.

இங்ஙனே உபதேசிக்குமிப்பதிகத்தில் எட்டாவது பாசுரம் "நம்பி பிம்பி யென்று நாட்டு மானிடப் பேரிட்டால், நம்பும் பிம்பு மெல்லாம் நாலு நாளிலழுங்கிப் போம். செம்பெருந்தாமரைக் கண்ணன் பேரிட்டழைத்தக்கால், நம்பிகாள் நாரணன் தம்மன்னை நரகம்புகாள்" என்றுள்ளது. இதனால், மக்களுக்கு நம்பியென்று பெயரிடுவதும் கூடாதென்று ஆழ்வாருடைய திருவுள்ளம் வெளியாகின்றது. நம்பியென்கிற பெயரோடு பிம்பியென்கிற ஒரு (அர்த்தமற்ற) பெயரையும் கூட்டி, நம்பி யென்று பெயரிடுவதோடு பிம்பியென்று பெயரிடுவதோடு ஒரு வாசியில்லையென்று எளிதாகத் தெரிந்து கொள்ளும்படி பாசுரமருளிச் செய்திருக்கையாலே இங்கே வலிதான சங்கை தோன்றுகின்றது. நம்பியென்பது எம்பெருமானுடைய திருநாமமாகத் திவ்யப் பிரபந்தங்களிற் பல விடங்களில் தெரியவருகிறது. இப்பெரியாழ்வாரது திருமொழியிலேயே இப்பதிகத்திற்குக் கீழும் மேலும் பலவிடங்களிலும் "சாளக்கிராமமுடைய நம்பி" 'வாமன நம்பி' 'காகுத்த நம்பி' 'நாரண நம்பி' 'உலகு தன்னை வாழ நின்ற நம்பி' என்று அருளிச் செய்யப்பட்டிருக்கின்றது. திருவாய்மொழி முதலானவற்றிலும் "நம்பியைத் தென்குறுங்குடிநின்ற" "நல்கியென்னை விடான் நம்பி நம்பியே" "தன்னம்பி நம்பியுமிங்கு வளர்ந்தது" என்றிவை போலும் பல பாசுரங்கள் எம்பெருமானுக்கு நம்பியென்கிற திருநாமமுண்டென்பதைக் காட்டுகின்றன. இப்படியிருக்க, நம்பி யென்பதை நாட்டுமானிடப் பேராகப் பெரியாழ்வார் இங்கு அருளிச் செய்தது எங்ஙனே பொருந்தும்? என்கிற சங்கை பலருடைய மனத்திலும் தோன்றக் கூடியதே.

— இதற்கு ஸமாதானம் —

வடமொழியில் ஸித்தாந்த கௌமுதியென்பது மிகச் சிறந்த வியாகரணநூல். அதில் முகப்பிலேயே "முநித்ரயம் நமஸ்க்ருத்ய தது்க்தீ: பரிபாவ்ய ச" என்றார். வரருசி, பதஞ்ஜலி, பாணிநி யென்னும் மஹர்ஷிகள் மூவரையும் வணங்கி அவர்களின் உக்திகளைச் சிந்தனை செய்து என்பது வக்தாவின் விவக்ஷை. ஆனால் பரிபாவ்ய என்கிற ல்யபந்தத்திற்குப் பரிபவமடையச் செய்து என்கிற பொருள் தான் ஒவ்வொருவர்க்கும் ஸ்வரஸமாகத் தோன்றக் கூடியது. ப்ரயோகித்தவர் ஸாமாந்யரல்லாமையாலே அவருடைய ஹ்ருதயத்தையே பரமப்ரமாணமாகக் கொண்டு பரிபவப் பொருளை விட்டு சிந்தனைப் பொருளைக் கொள்ளுகிறோம். அவ்விதமாகவே இங்கும் காணவேணும். ஸர்வஜ்ஞரான பெரியாழ்வார் அவத்தமாக அருளிச் செய்யமாட்டார். நாராயணனுக்கும் நம்பி யென்கிற திருநாமமுண்டென்பதில் அவ்வாழ்வார்க்கு விப்ரதிபத்தி யிருக்க ந்யாயமில்லை. நம்பியென்று பெயரிடுமவர்கள் இது நாராயண நாமமென்கிற ப்ரதிபத்தியோடல்லாமல் செல்வம் மிகுந்தவன் என்கிற பொருளை மாத்திரங்கொண்டு இந்திரன் குபேரன் என்றிப்படிப்பட்ட பெயர்களை யிடுவது போலவே இதையும் இடுகிறவர்களாயிருப்பதால் அன்னவர்களை க்ஷேபிக்கிறார் என்று இவ்வளவே இங்கு நாம் கூறலாம். வேறு வகையான ஸமாதானங்களைக் கூறவல்ல மஹான்களுளரேல் அன்பு கூர்ந்து கூறுக. ... ... .... ... ... 44

## 45. தேவப்பெருமாள் வைசாகோத்ஸவ வாஹனக்ரமங்கள்

காஞ்சீபுரம் தேவப்பெருமாளுடைய வையங்கண்ட வைகாசித் திருநாளில் கண்டருளும் வாஹனங்களெல்லாம் திவ்யப்ரபந்த ஸேவைக்கு அநுகுணமாகவே ஆதிகாலத்தில் ஏற்பாடு செய்யப்பட்டது. அதைச் சிறிது விவரிப்போம். முதல்நாள் காலை வாஹனஸேவை ஒன்றுமில்லை. திருப்பல்லாண்டு தொடக்கம் கேட்டருள்வதற்காக வாஹநாரோஹணத்தைத் தவிர்த்து ஸேவை ஸாதிக்கிற க்ரமம். மாலை சிங்கவாஹனம்;

அப்போது பெரியாழ்வார் திருமொழி முதற்பத்து ஸேவை; அதில் *என் தொண்டை வாய்ச் சிங்கம் வா* என்று எம்பெருமானைச் சிங்கமாக வரும்படியழைத்த பாசுரம் வருவதால் அதை நோக்கிச் சிங்கவாஹனஸேவை.

இரண்டாந்திருநாள் காலை *ஞானச் சுடர் விளக்கேற்றினேன்* என்று ஞான நூலைக் கொடுப்பதாகத் தொடங்கி *மறையாங்கென வுரைத்த மாலை* என்று எம்பெருமானும் ஜ்ஞான ப்ரதானம் பண்ணினதைச் சொல்லுகிற இரண்டாந் திருவந்தாதி ஸேவையாகை யாலே, அன்னமாய் நூல் பயந்த அருளாளனுக்கு அன்னவாஹனஸேவை அமைக்கப் பட்டது. அன்றியும், முதல் நாளிரவு பெரியாழ்வார் திருமொழி ஸேவை முடிவுபாகத் தில் *பின்னிவ்வுலகினில் பேரிருள் நீங்க, அன்று அன்னமதானானே* என்று வருதலால் அதைக்கொண்டும் உடனே ஹம்ஸவாஹன ஸேவை மிகவும் பொருத்தமாயிற்று. அன்று மாலை பெரியாழ்வார் திருமொழி இரண்டாம்பத்து ஸேவையில்* அரவணையாய் ஆயரேறே அம்மமுண்ணத் துயிலெழாயே—இன்னு முச்சி கொண்டதாலோ* என்று ஸூர் யோதய ப்ரஸ்தாவம்பண்ணிக் கண்ணனை யெழுப்புகிற பாசுரம் வருகையாலே ஸூர்ய ப்ரபை வாஹனம் அமைந்தது.

மூன்றாந்திருநாள் காலை மூன்றாந்திருவந்தாதி ஸேவையில்* பொலிந்த கருடன் மேல் கொண்ட கரியான் கழலே* என்று வருதலால் கருடவாஹனஸேவை அமைந்தது. அன்றிரவு பெரியாழ்வார் திருமொழி மூன்றாம்பத்து ஸேவையில்* அடங்கச் சென்றி லங்கையை யீடழித்த அனுமன் புகழ்பாடி* என்றும் *சீராருந் திறலனுமன் தெரிந் துரைத்தவடையாளம்* என்றும் சிறிய திருவடி ப்ரசம்ஸை வருதலால் சிறிய திருவடி வாஹன ஸேவை.

நான்காந்திருநாள் காலை நான்முகன் திருவந்தாதி ஸேவையில் *ஆங்காரவாரமது கேட்டு அழலுமிழும் பூங்காரரவணையான்* என்றும் *விரித்துரைத்தவெந் நாகத்துன்னை* என்றும் ஆதிசேஷனுடைய ப்ரஸ்தாவம் வருதலாலும் * வைகுந்தச் செல்வனார் சேவடி மேல் பாட்டு* என்று வைகுண்டநாதன் திருவடிகளில் அவ்வாழ்வார் பாசுரம் பாடினதாகச் சொல்லுகையாலும் சேஷவாஹனத்தில் பரமபதநாதன் திருக்கோலஸேவை அமைந்தது. அன்றிரவு பெரியாழ்வார் திருமொழி நான்காம்பத்து ஸேவையில் * நளிர்மாமதியைச் செஞ்சுடர் நாவளைக்கும்* என்று சந்திரனுடைய ப்ரஸ்தாவம் பண்ணி யிருக்கையாலே சந்த்ரப்ரபை வாஹந ஸேவை ஆயிற்று.

ஐந்தாந்திருநாள் காலை திருவிருத்தம் ஸேவை. ஆழ்வார் தாமான தன்மையை விட்டு நாச்சியார் திருக்கோலம் பூண்டு அருளிச்செய்த திவ்யப்ரபந்தமதுவாகையாலே அதற்குச் சேர நாச்சியார் திருக்கோலம் பூண்டு பேரருளாளன் ஸேவைஸாதிக்கிறபடி. திருவிருத்தம் என்பதற்கு, திரு—நாச்சியாருடைய, விருத்தம்—வ்ருத்தாந்தம் என்று பொருள். நாச்சியார் திருக்கோலம் பூண்ட ஆழ்வாருடைய செய்திகளைச் சொல்லும் ப்ரபந்தமென்றபடி. இதற்கு மிகவும் பொருத்தமாகவே அன்று நாச்சியார் திருக்கோலம் அமைந்தது. வேறு காரணமில்லை. அன்றிரவு யாளிவாஹனஸேவை ஏற்பாடு செய் திருக்கிறவர்களின் அபிப்ராயத்தை ஆழ்ந்து பார்க்கையில் வெகு ஆச்சரியமுண்டாகிறது. திவ்யப்ரபந்தங்களில் ஆளியைப்பற்றின பேச்சுக்கள் சில விடங்களில் வருகின்றன. எங்கு வருகின்றன வென்று பார்த்தால் பெரிய மலைகளை வருணிக்கு மிடங்களில்தான் வருகின்றன. அஹோபிலம் திருவேங்கடம் திருமாலிருஞ்சோலை பதரிகாச்ரமம் என்னு மித்தலங்களை வருணிக்கும்போதுதான் யாளிகளைப்பற்றிப் பேசுவது வழக்கம்; * நன் மணி வண்ணனூரர் ஆளியுங் கோளரியும் *செங்கணாளியிட்டிறைஞ்சும்* இத்யாதி பாசுரங்கள் காண்க. ஐந்தாந்திருநாளிரவு திவ்யப்ரபந்த ஸேவையில் பதரிகாச்ரம மார்க்கத்திலுள்ள தேவப்ரயாகை யென்கிற கண்டமென்னும் கடிநகர்ப் பாசுரங்களும், * துக்கச் சுழலையைச் சூழ்ந்துகிடந்த* என்று தொடங்கித் திருமாலிருஞ் சோலைப் பாசுரங்களும் * சென்னி யோங்கு தண் திருவேங்கடமுடையான் பாசுரங்களும் ஸேவிக்

கப்படுவதால் அந்த திவ்ய தேசங்களுக்கும் யாளிக்குமே ஸம்பந்தமுள்ளதென்று கொண்டு யாளிவாஹனஸேவையை அப்போது ஏற்படுத்தினார்கள். இவ்வளவு ஆழ்ந்து ஏற்பாடு செய்தவர்களின் புத்தி சாதுரியம் மிகவும் மெச்சத்தக்கதாக வுள்ளது.

ஆறாந்திருநாள் காலை திருச்சந்தவிருத்தம் ஸேவை. அதில் *ஒன்றிரண்டு தீயுமாகி ஆயனாய மாயனே* என்றும் *ஆயனாகி ஆயர்மங்கை வேயதோள் விரும்பினாய்* என்றும் *ஆனைகாத்தொர் ஆனைகொன்று அதன்றியாயர் பிள்ளையாய் ஆனைமேய்த்தி ஆநெய்யுண்டி* என்றும் *ஆதியாகி ஆயனாய மாயமென்ன மாயமே* என்றும் கொள்ளை கொள்ளையாக கோபாலக்ருஷ்ண ப்ரசம்ஸை வருதலால் அதற்குச் சேர கோபாலக்ருஷ்ணன் திருக்கோலம் பூண்டு ஸேவை ஸாதிக்கிறபடி. அன்றிரவு யானை வாஹனஸேவை. அது நாச்சியார் திருமொழிஸேவைக்கு மிகவும் பொருத்தமாக அமைந்தது. நாச்சியார் திருமொழியில் *மங்கலவீதி வலஞ்செய்து—அங்கு ஆனைமேல்* என்கிற பாசுரம் ஸேவிக்கப்படுவதற்குப் பொருத்தமாகவே இது அமைந்தது. இதில் மற்றொரு விசேஷமும் கவனிக்கவேண்டும்; அதாவது—ஆனைவாஹனப் பாசுரமாக மேலேயெடுத்துக்காட்டின பாட்டில் *குங்குமமப்பிக் குளிர்சாந்தம் மட்டித்து* என்று சூர்ணாபிஷேகம் சொல்லியிருக்கையாலே இதுவும் அன்று காலை வைதிகச் சடங்காக நடத்தப்பட்டுவருகிறது.

ஏழாந்திருநாள் திருத்தேர். திருமங்கையாழ்வார் திருத்தேர்ப் பிரபந்தமாகத் திருவெழுகூற்றிருக்கை அருளிச்செய்தது உலகமறியும். அது ரதபந்தத்தில் அமைந்துள்ளது. அந்த திவ்யப்ரபந்தஸேவைக்குச் சார்பாக ரதோத்ஸவம் வெகு பொருத்தமாக அமைந்தது. திருத்தேரிலே சேர்ந்தபின்பு பெருமாள் ஸன்னிதிக்கு எழுந்தருளுகையில் திருமடல் முடிந்தபின் நாச்சியார் திருமொழியில் சேஷம் ஸேவிப்பது வழக்கம். *கருப்பூரம் நாறுமோ* என்கிற ஒரு பதிகம் ஸேவித்து முடிப்பார்கள். அதில் *செங்கண்மால் தன்னுடைய வாய்த்தீர்த்தம் பாய்ந்தாடவல்லாய்* என்கிற பாசுரம் வருவதை நோக்கி அன்று பகலில் திருப்பாவாடைத் திருமஞ்சனமென்று நடத்தப்பட்டு வருகிறது.

அன்றிரவு பெரியதிருமொழி திவ்யப்ரபந்தத் தொடக்கம். திருமங்கையாழ்வாருடைய சரித்திரத்திலுள்ள வேடுபறிக்கதைக்கு அநுகுணமாகவே பாதிவழியில் அவ்வாழ்வாரை எழுந்தருளப்பண்ணி அவர்க்கு மரியாதைச்சிறப்புகள் நடத்தி திவ்யப்ரபந்தத் தொடக்கம் செய்வது நாளைக்கும் வழக்கத்திலுள்ளது. *ஆடல்மாவலவன் கலிகன்றி*க்காகவே பெருமாளும் ஆடல்மா வென்னும் குதிரை வாஹனம் கண்டருள்வது.

திவ்யப்ரபந்தங்களில் ஆழ்வார்களுடைய அநுபவப்ரகாரங்களில், நாச்சிமார்கள் எம்பெருமானை வெறுத்துத் தள்ளுதல் [மட்டையடி] என்பது ஒரு விலக்ஷணாநுபவம். நம்மாழ்வார், குலசேகராழ்வார், திருமங்கையாழ்வார் ஆகிய மூவரும் இதுவிஷயமாக மூன்று பதிகங்கள் பாடியுள்ளார்கள். இவ்வநுபவம் ஒன்பதாநாள் காலையில் ஒரு நாடகமாக அபிநயம் செய்யப்பட்டு வருகிறது. பெருமாள் தனியே யெழுந்தருளிப் பட்டிமேய்ந்து வருவதும், நாச்சிமார்கள் இவரை உள்ளே புகவொட்டாமல் தடுப்பதுமாக நடந்துவருவது ஆழ்வாரது பாவநாப்ரகர்ஷமே யாகும்.

மறுநாள் திருவாய்மொழி ஆயிரத்தையும் கேட்டருள்வதற்காகப் பன்னிரண்டு திருவாராதனங்கள் கண்டருளி இரவு இராமாநுச நூற்றந்தாதிக்காக சிசிரோபசாரப் புறப்பாடு கண்டருளி உத்ஸவஸமாப்தி யாகிறது. ஆக இப்படிகளை யன்றி நோக்குமளவில் திவ்யப்ரபந்த ஸேவையை யநுஸரித்தே வாஹனப் புறப்பாடுகளில் நியதி ஏற்பட்டிருக்கின்றதென்பது கைவெட்டாகத் தேறும்.

இப்படி நாம் நிரூபணம் செய்வதைக் காண்கின்ற பிறர் ஸஹஸா ஒரு வார்த்தை சொல்லிவிடக்கூடும்; பெருமாள் வாஹனஸேவைகள் கொண்டருளுகிறபடிக்குத் தகுதியாக இவர்கள் திவ்யப்ரபந்த ஸேவைகளை அமைத்துக் கொண்டவர்களே யல்லது,

திவ்யப்ரபந்த ஸேவைகளுக்குத் தகுதியாக வாஹனஸேவைகள் ஏற்படுத்தப்படவில்லை—என்று. இது பொருத்தமான வார்த்தையாகாது; திவ்யப்ரபந்தஸேவை இஷ்டமானபடி பொறுக்கிப்பொறுக்கி யெடுத்து அமைத்திருக்கவில்லை; காலைவேளைகளில் இயற்பா ஸேவை வரிசையாகவும், மாலை வேளைகளில் பெரியாழ்வார் திருமொழி ஸேவை வரிசையாகவும் நடந்து வருவதால், வாஹனஸேவைகளுக்குத் தக்கபடி பாசுரஸேவையை அமைத்துக் கொண்டதாகச் சொல்வதற்கு அவகாசமே யில்லை. இதர திவ்யதேசங்களில் வாஹனக்ரமங்கள் வேறு வேறு விதமாக இருப்பினும், தேவப் பெருமாள் ஆழ்வார் ஸ்ரீஸூக்திக்கென்றே இட்டுப் பிறந்தவ ராதலாலும், இத்தேவப்பெருமாள் ஸந்நிதி ஸம்பந்தப்பட்டவரையில் நாமிங்கு நிரூபித்த திவ்யப்ரபந்தப் பொருத்தங்கள் அசைக்க முடியாதவை. தினப்படியாக நாலாயிரக்ரமமான ஸேவை யென்பது பூலோகத்திற்குள் தேவப் பெருமாள் ஸந்நிதியொன்று தவிர மற்றெவ்விடத்திலுங் கிடையாது. தேவப் பெருமாளுக்குண்டான திவ்ய ப்ரபந்த வ்யாமோஹத்திற்கு விஜயத்வஜமன்றோ இது. இங்ஙனே நாம் நிரூபிக்கவேண்டியவை பலபலவுமுள, இங்கே சுருங்கச் சொன்னபடி. 45

## 46. நம் ஆசாரியர்களின் திருநாவீறு

ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் தமிழ்ப் பாஷையில் முதன்முதலாக அவதரித்த வியாக்யான நூல் ஆறாயிரப்படி யென்பது. இது, திருவாய்மொழிக்குத் திருக்குருகைப்பிரான் பிள்ளான் இட்டருளின வியாக்கியானம். இதன் பெருமையை உபதேசரத்தினமாலையில் மணவாளமாமுனிகள் *தெள்ளாருஞானத்திருக்குருகைப்பிரான் பிள்ளான், எதிராசர் பேரருளால்—உள்ளாருமன்புடனே மாறன் மறைப்பொருளை அன்றுரைத்தது, இன்பமிகுமாறாயிரம்* என்ற பாசுரத்தினால் வெளியிட்டருளினர். "இன்பமிகுமாறாயிரம்" என்றது விலையுயர்ந்த ஸ்ரீஸூக்தி. அந்த வியாக்கியானத்திலுள்ள இன்பமிகுதியை அநுபவரஸிகர்களே அறியக்கூடும்.

இவ்வாறாயிரப்படிக்கு முன்பும் (ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்தில்) தமிழ் வியாக்கியான நூல்கள் (அல்லது) தமிழ் வசன நூல்கள் சில ஆசிரியர்களால் அருளிச்செய்யப்பட்டிருக்கவுங் கூடும். ஆனால் அப்படி ஒரு நூலும் நமக்குத் தெரியவரவில்லை. ஆறாயிரப்படி யென்னும் வியாக்கியான நூலையே நமது ஸம்பிரதாயத்திற்கு முதற்றமிழுரை நூலாகக் காண்கிறோம். இந்நூல் அவதரித்து இற்றைக்கு ஏறக்குறைய ஆயிரமாண்டுகளாகின்றன. இது வெறுந்தமிழ் நூலேயன்று. மணிப்ரவாள வியாக்கியானமென்று பெயர் பெற்றது. அதாவது, தமிழ்ச் சொற்களும் ஸம்ஸ்க்ருத வாக்யங்களும் விரவியெழுதப்பட்ட வியாக்கியானமென்றவாறு. இந்தச் சேர்த்தியழகு வெகு அற்புதமானது. 'உபய வேதாந்த ப்ரவர்த்தகாசார்யர்கள்' என்று நம் ஆசாரியர்கள் கொண்ட சிறப்புப்பெயரானது இத்தகைய மணிப்ரவாள நூல்களினாலேயே திண்மை பெறுகின்றது. மிகப் பழைய காலத்தில் ஜைந பௌத்தர்களின் மரபிலும் மணிப்ரவாள நூல்கள் தோன்றி யிருப்பதாகச் சில விமர்சகர்கள் சொல்லக் கேட்டிருக்கிறோம். அவற்றில் ஸாதாரண ஸம்ஸ்க்ருத பதங்களும் தமிழ்ச்சொற்களும் கலந்திருக்கக் கூடுமேயல்லது, ச்ருதிஸ்ம்ருதிஇதிஹாஸ புராண வசனங்களும் காவ்யநாடகாலங்கார ச்லோகங்களும் பலவகைத் தமிழ் நூல் மேற்கோள்களும் கலந்து கமழ ப்ரஸக்தி யிராது.

ஆறாயிரப்படிக்குப்பின் பெரியவாச்சான்பிள்ளை வடக்குத் திருவீதிப்பிள்ளை போல்வார் இட்டருளின வியாக்கியானங்களின் மாதுர்யமும் காம்பீர்யமும் அளவு கடந்தது. ஆறாயிரப்படியானது வெகு ஸங்க்ரஹமான தோரணையில் அமைந்ததாகையாலே அதில் பூர்வாசாரியர்களின் ஸம்வாதங்களை இதிஹாஸ புராணாதிச்லோகங்களின் இன்சுவைப் பொருள்களை காணப்பெறுதற்கு இடமில்லையாயிற்று. பெரியவாச்சான்பிள்ளையும் வடக்குத் திருவீதிப்பிள்ளையும் இட்டருளின வியாக்கியானங்களின் சுவைமிகுதியைப் பற்றிப் பேசுவதற்கு நாமோ அதிகாரி?

இவர்களின் சொல்தொடை யழகு 'என்னே! என்னே!' என்று கல்நெஞ்சையு முருக்கவல்லது. இவர்களின் வியாக்கியானங்கள் திருவவதரிக்கவில்லையானால் ஆழ்வார்களின் திவ்யப்ரபந்தங்களுக்கு [illegible]மான மதிப்பும் இல்லையாகும்.

கம்பருடைய காலத்தில் திவ்யப்ரபந்தங்களுக்கு விசேஷமாக வியாக்கியானங்கள் அவதரித்திராமையால் [illegible] சுவையில் மாத்திரமே யீடுபட்டு (சட்கோபரந்தாதியில்) [illegible] தாழ்ந்த அரும் பொருளைச், செந்தமிழாகத் திருத்தில்லை [illegible]களும், தந்தம் விழாவுமழகு மென்னும்......குருகூர் வந்த பண்ணை [illegible] பேசிப் போனார். வியாக்கியானங்கள் அவதரித்த பின்பு, அதிலும் முக்கியமாகப் பெரியவாச்சான்பிள்ளையின் வியாக்கியானங்கள் அவதரித்த பின்பு இவ்வுலகுக்கே விளைந்த பெரும் பாக்கியத்தை மணவாளமாமுனிகள் உபதேச ரத்தினமாலையில் "பெரியவாச்சான்பிள்ளை பின்புள்ளவைக்குந் தெரிய, வியாக்கியைகள் செய்யாவிடில்—அரிய, அருளிச்செயல் பொருளை ஆரியர்கட்கிப்போது அருளிச் செயலாய்த் தறிந்து" என்ற பாசுரத்தினால் பரமார்த்தமாக வருளிச் செய்தார்.

பலகாலம் ஆசார்ய ஸந்நிதியில் சுச்ரூஷைகளைப் பண்ணிப் பலகால் கேட்டுக் கேட்டுணர வேண்டிய செம்பொருள்கள் நிரம்பிய அந்த அரிய பெரிய வியாக்கியானங்களைக் குருமுகமாகக் கேளாமல் ஏடு பார்த்து அந்வயிக்கப் புகுமவர்கள் ஒன்றும் அறியகில்லார்கள். அன்னவர்கள் அந்த வியாக்கியானங்களினால் இறையும் பயன் பெறாதவர்களாதலால் "அவற்றில் என்ன இருக்கிறது?" என்றும், 'நமக்குப் புரியாத நடையில் ஏதோ எழுதி வைத்திருக்கிறார்கள்' என்றும் சொல்லிப் போது போக்கக் கடமைப்பட்டவராயினர். உண்மையில் முற்காலத்தில் திவ்யதேசந்தோறும் பலவிடங்களில் காலக்ஷேபங்கள் நடந்து கொண்டிருக்கும்; வியாக்கியான ஸ்ரீகோசங்களை வைத்துக் கொண்டு பங்க்தியடைவே ஸேவித்துப் பொருள் சொல்வதும் கேட்பதுமாகிற பத்ததி இடையறாது நடந்து கொண்டிருந்தது. இக்காலத்தில் அந்த பத்ததி மிக மிக விரளமாயிற்று. உபந்யாஸங்கள் சொல்லுவதும் கேட்பதுமே பெரும்பான்மையான பழக்கமாய் விட்டபடியால் பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகளின் ஆழ்பொருள்களை யறிவார் மிகச் சிலரே யாயினர்.

பூருவர்கள் தங்கள் திவ்ய க்ரந்தங்களில் அரிய பெரிய சாஸ்த்ரார்த்தங்களை யிடுவது போலவே விநோதமான சில லௌகிக வார்த்தைகளையும் இடுவதுண்டு. அவற்றின் பொருளும் உபதேசகம்யங்களே யொழிய ஏடு பார்த்துத் தெரிந்து கொள்ளக்கூடியவையல்ல. இந்த வியாக்கியானங்களுக்கு முன்னமே சிலர் அரும்பதவுரைகள் பணித்து அவையும் அச்சேறியிருக்கின்றன. அவற்றைப் பார்க்கும்போது அவ்வுரைகாரர்களுங்கூட சிலவிடங்களில் ஸதாசார்ய பரம்பரையில் கேட்டிலர் போலும் என்று நினைக்க நேர்கின்றதென்று ஒரு ஸமயம் கோயில் பத்ராவி ஸ்வாமி பணிக்கக் கேட்டதுண்டு. அந்த ஸ்வாமி எடுத்துக் காட்டியருளின ஒரு விஷயத்தையும் இங்குக் குறிப்பிடுகின்றேன்;

பெரிய திருமொழியில் (5—6—2) *திருத்தண்கா லூரானைக் கரம்பனூருத்தமனை* என்ற விடத்துப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தில்—"(கரம்பனூருத்தமனை) வழிக்கரையிலே திருவாசலுக்கொரு கதவிடாதே வந்து கிடக்கிறவனை" என்று அருளிச் செய்யப்பட்டிருக்கிறது. கோயில் ஸமீபத்தில் 'உத்தமர் கோயில்' என்றொரு திவ்ய தேசமுண்டே; அதற்குத்தான் திருக்கரம்பனூரென்று திருநாமம். அத்தலத்து எம்பெருமான் உத்தமனென்று திருநாமம் வஹித்திருப்பதை ரஸோக்தியாக நிர்வஹிக்கிறார் பெரியவாச்சான்பிள்ளை; ஒருவர்க்கும் ஒருபோதும் ஸேவை ஸாதியாத பெருமான் அதமன்; [illegible] ஸேவை ஸாதிக்கும் பெருமான் மத்யமன்; அநாயாஸமாக ஸேவை ஸாதிக்கும் பெருமான் உத்தமன்—என்று இவ்வகையான திருவுள்ளங் கொண்டு பெரியவாச்சான்பிள்ளை மேலே குறித்த ஸ்ரீஸூக்தியை யருளிச் செய்திருக்

கிறார். திருக்கரம்பனூர்த் திருமால் தேடிச் செல்லவேண்டாதே வழிக்கரையிலே யிருப்பது ஒரு ஸௌலப்யம். அதற்குமேல், திருவாசலுக்குக் கதவிடாதே யிருப்பது மற்றொரு ஸௌலப்யாதிசயம். பெரியவாச்சான்பிள்ளை காலத்தில் இந்த ஸந்நிதி செல்வக் குறைவினால் திருவாசலுக்குக் கதவிடப் பெருமலிருந்தது. [இருந்த கதவு ஜீர்ணமாயிற்று; புநருத்தாரம் செய்யப்படவில்லை]. அதனை ஐச்வர்யக் குறைவினாலானதென்று கொள்ளாமல் ஸௌலப்ய பரமகாஷ்டைக்கு அநுகுணமாக யோஜித்தது பெரியவாச்சான்பிள்ளையின் விலக்ஷண சாதுர்யமாகும். உலகில் ப்ரபுக்கள் தங்கள் மாளிகைகளுக்குப் பல கதவுகளிட்டுத் தாளிட்டு ஒருவர் கண்ணுக்கும் புலப்படாமல் கிடப்பதும், அர்த்திகள் வந்தால்—* निद्राति स्नाति भुङ्क्ते चलति कचभरं शोषयत्यन्तरास्ते दीव्यत्यक्षैर्न चायं गदितुमवसरो भूय आयाहि याहि * என்று வெறுத்துத் தள்ளுவதற்கு வாசலிலே பல சேவகர்களை யிருக்கவைத்தும் இப்படியாகத் தங்களுடைய தூர்க்குணங்களைப் பரப்பிக் கொள்ளுகிறார்கள். கரம்பனூர்த் திருமால் அங்ஙனன்றிக்கே திருவாசலுக்குக் கதவுமிடாதே வழிக்கரையிலே கிடந்து அநாயாஸமாக ஸேவை ஸாதிக்கிற ஸௌலப்யம் என்னே! என்று ஈடுபட்டும், இந்த குணநிசயத்திற்காகவே உத்தமனென்று திருநாமமாயிற்றென்று காட்டியும் இன்சுவை மிக்க பங்க்திகளைப் பணித்திருக்கிறார் பெரியவாச்சான்பிள்ளை.

இங்கு அரும்பதவுரைகாரர் எழுதியிருப்பதென்னவென்றால், "எல்லாரும் நடக்கும் வழியாகையாலே ஸேவிப்பார் மிகுகையால் கதவிட அவஸரமில்லையென்று கருத்து" என்றெழுதியுள்ளார். இதில் ஒரு சுவையுமில்லை; பெரியவாச்சான்பிள்ளை திருவுள்ளம் பற்றின கருத்துமன்றிது. ஸேவிப்பார் மிகுகையால் கதவிட அவஸரமில்லையென்னும்படியான நிலைமை திருக்கரம்பனூர்க்கு ஸம்பாவிதமுமன்று. இங்ஙனே பல பல விஷயங்கள் எடுத்துக் காட்டவேண்டியவை யுண்டு. அரும்பதவுரைகாரர்களிடத்துப் பக்ஷபாதத்தினால் சிலர் 'அவர் காட்டிய கருத்துத்தான் நன்று' என்று ஸாதிக்க முன் வருவரேல் அதற்கு நாம் ப்ரதிவாதம் செய்வோமல்லோம். *கீர்த்தி மூர்த்தியான கோயில் பத்தராவி ஸ்வாமி பெரியார்களிடம் கேட்டதை ஸாதித்தார்; அதை யிங்குத் தெரிவித்தபடி.

கண்ணபிரான் தூது சென்றான் என்ற குண விசேஷத்தில் ஈடுபட்டு ஆசார்யர்கள் பங்க்தி யெழுதுகையில் "கழுத்திலே ஓலைகட்டித் தூதுபோனவன்" என்று எழுதுகிறார்கள். இப்பங்க்தியைப் பெரிய திருமொழி 2—2—2 வியாக்யானத்திலும், "மஹாபாரதத்தால் தூதுபோனவனேற்றஞ் சொல்லுகிறது" என்ற ஸ்ரீவசநபூஷண ஸூக்தி வியாக்யானத்திலும் மற்றுஞ் சிலவிடங்களிலும் காணலாம். கழுத்திலே ஓலைகட்டித் தூது போகையாவது என்ன? என்று பலரும் கேட்பதுண்டு; ஸமீப காலத்தில் ஒரு பண்டிதர் இதற்குப் பொருள் உபந்யஸித்தார்—ஏகாந்தமாகத் தூது செல்லாமல் 'நான் தூது செல்பவன் காண்மின்' என்று ஒரு ஓலையிலே யெழுதிக் கழுத்திலே தொங்கவிட்டுக் கொண்டு சென்றான்—என்பதாக. இதுவன்று பொருள்.

முற்காலத்தில் [தபால் போக்குவரத்து இல்லாத நாளில்] அவச்யமாகச் சில க்ராமங்களுக்குத் தபால் அனுப்பவும் உடனே பதில் தெரிந்து கொள்ளவும் நேர்ந்தால் ஒரு நாயை வளர்ப்பார்களாம். அதற்குச் சில நபர்களை க்ராமாந்தரங்களில் பழக்கிவைப்பார்களாம். அவச்யமுள்ள ஸமயங்களில், ஒரு நீட்டோலையில் ஸமாசாரத்தை யெழுதி அவ்வோலையை நாயின் கழுத்திலே கட்டி விடுவார்களாம். உடனே நாய் ஓடிச் சென்று குறிப்பிட்ட ஊர்க்குப் போய் அந்த நபர் முன்னே நிற்குமாம். அவர் அதைத் தெரிந்து கொண்டு நாயின் கழுத்தில் கட்டியிருந்த ஓலையை யெடுத்துப் பார்த்துச் செய்தியறிந்து கொண்டு பதில் எழுதி அந்த நாயின் கழுத்திலேயே கட்டிப் போகவிடுவராம். இவ்விதமாகத் தபால் போக்குவரத்து ஒன்று நடந்து கொண்டிருந்தது. இந்த வ்ருத்தியைக் கண்ணபிரான் ஸ்வவ்ருத்தியாகக் கொண்டு தூது நடந்தானே! என்று

ஆசாரியர்கள் உள்குழைந்து எழுதுகிறபடி. தூது செல்லும்போது கண்ணபிரான் தன் கழுத்திலே ஓலைகட்டிக் கொண்டு எழுந்தருளினதாகப் பொருளன்று. உபமான ரீதியில் எழுதப்பட்ட பங்க்தி இது. ச்வாவானது கழுத்திலே ஓலைகட்டிச் செல்லுவதுண்டே, அப்படிப்பட்ட இழிவான ஜந்துவின் செயலை அந்தோ! பராத்பரன் செய்தான் காணும்! என்று இவ்வளவு பொருளை உள்ளடக்கி "கழுத்திலே ஓலைகட்டித் தூது போன வேற்றம்" என்று சுருக்கமாக எழுதினார்கள் ஆசாரியர்கள். இப்படிப்பட்ட பங்க்திகள் நமது ஸம்ப்ரதாய நூல்களிலே பல நூற்றுக்கணக்கிலுள்ளன. பண்டைக் காலத்துத் தமிழர்கள் எவ்வளவோ ஆச்சரியமாக எழுதியிருக்கிறார்களென்று சொல்லுவதுண்டு; அவர்களது நூல்களிலும் இப்படிப்பட்ட சொற்றொடர்களின் அதிசயம் காணக் கிடைக்காது. நம் ஆசாரியர்களின் நாவீறு மிக விலக்ஷணமானது. ... 46

## 47. கூரத்தாழ்வான் தனியன் பெருமை

நம் ஆசாரியர்களனைவர்க்கும் தனியன்கள் ஒவ்வொரு ரீதியில் அவதரித்திருக்கின்றது. கூரத்தாழ்வானுடைய தனியன் அவதரித்திருக்கும் விதம் உண்மையில் அதிவிலக்ஷணமானது. இத்தனியன் பட்டரருளிச் செய்ததாதலால் அவருடைய தனிப்பட்ட திருநாவீறு இதில் பொலிகின்றது. "यदुक्तयस्त्रयीकण्ठे यान्ति मङ्गलसूत्रताम्—யதுக்தயஸ் த்ரயீகண்டே யாந்தி மங்கல ஸூத்ரதாம்" என்பது இத்தனியனில் உத்தரார்த்தம். ஆழ்வானுடைய ஸ்ரீஸூக்திகளானவை வேதமாகிற மாதின் கழுத்திலே திருமங்கலியமாக விளங்குகின்றனவென்று வெகு சமத்காரமாக அருளிச்செய்யப்படுகிறது. இதன் கருத்தைச் சிறிது விவரிப்போம். பெண்களுக்குத் திருமங்கலியமில்லாத நிலைமைகள் இரண்டு. கன்னிகையாயிருக்கும் நிலைமை ஒன்று. நூலிழந்து விதவையாயிருக்கும் நிலைமை மற்றொன்று. இவற்றுள், கன்னிகைப் பருவத்தில் பெண்களுக்குப் பல நாயகர்கள் தேறக்கூடும். ஏனெனில், பெண் கழுத்தில் ஒருகைப்பாடாகத் தாலி ஏறுமளவும் பெரும்பாலும் பிரமசாரிகளும் விதுரர்களும் அவளைத் தன் மனைவியாகப் பாவித்திருக்கக் கூடும். 'இப் பெண்ணுக்கு நானே கணவன்' என்று ஸ்வரூப யோக்யதையுடையாரெல்லாரும் நினைத்திருக்கக் கூடுமன்றோ. மற்றுள்ள விரக்தர்களும் க்ருஹஸ்தர்களும் அக் கன்னிகையைக் கண்டால் 'இவளுக்கு இன்னும் கணவன் நிச்சயிக்கப்படவில்லை' என்று ஸாதாரணமாக நினைத்துக் கொள்வர்கள். அப்பெண்ணின் கழுத்தில் தாலி ஏறிவிட்ட பின்பு, முன்பு தங்களுக்கென்று அபிமானித்திருந்த பிரமசாரிகளும் விதுரர்களும் 'இனி இவள் அநந்யார்ஹை' என்று நிச்சயித்துத் தாங்கள் ஆசையற்றொழிவர்கள். ஸாதாரணமாக நினைத்துக் கொண்டிருந்த மற்ற க்ருஹஸ்தர்களும் விரக்தர்களும் 'இவளுக்கு ஒரு கணவன் அமைந்து விட்டான்' என்று நினைத்துப் போருவர்கள். இனி இரண்டாவதான வைதவ்யநிலைமையில் ஸ்த்ரீயைப் பார்க்குமவர்கள் 'இவளுக்கு ஏற்பட்டிருந்த கணவன் இறந்தொழிந்தான், இனி இவளுக்கு எப்போதும் கணவன் ஏற்படப்போகிறதில்லை' என்றெண்ணி நிற்பார்கள். ஆகவே, மாதர்கள் மங்கலநூல் இல்லாத நிலைமைகளில் பல பர்த்தாக்களை யுடையவர்களாயும் ஒரு பர்த்தாவையுமுடையராகாதவர்களாயும் இருப்பர்களென்றதாயிற்று.

அதுபோல, ஆழ்வான் ஸ்ரீஸூக்திகள் அவதரிப்பதற்கு முன்பு வேதங்கள் மங்கல நூல் இல்லாத மாதரின் இரண்டு வகையான நிலைமைகளையும் உடையனவாயிருந்தன. வேதத்துக்கு ருத்ரனைப் பதியாகச் சிலர் மயங்கி அபிமானிப்பர்கள்; பிரமனைப் பதியாகப் பேதையர் சிலர் பேணுவர்கள். இங்ஙனம் பாசுபதர் முதலிய மதாந்தரஸ்தர்களால் பல தெய்வங்கள் பதியாக அபிமானிக்கப் பட்டும், நிரீச்வர மீமாம்ஸகாதிகளால் நாயகனே கிடையாதென்று மறுக்கப்பட்டும் கிடந்தது. ஆழ்வானுடைய பஞ்சஸ்தவம் முதலான திவ்ய ஸூக்திகள் திருவவதரித்தவுடனே 'தலையறுத்தவனும் தலையறுப்புண்டவனும் மற்றுமெவனும் வேதத்துக்கு நாயகரல்லர்; அடியோடு நாயகனே

கிடையாதென்றதும் தவறு; நாயகனுண்டு அவன் [illegible]ன; அவனுகிறன் ஸ்ரீமந் நாராயணனே என்று கல்வெட்டாக நிஷ்கர்ஷம் ஏற்பட்ட படியால் இவருடைய ஸ்ரீஸூக்திகள் வேதமாதுக்கு மங்கலநூல் போன்றன.

இதனால், ஸகலதுர்மதங்களையும் நிரஸித்துப் பரதத்வ நிர்ணயம் பண்ணவல்ல வாக் வைபவமுடையவர் கூரத்தாழ்வான் என்றதாகிறது. வஸ்துஸ்திதியில் ஸ்ரீபாஷ்யாதிகள் திருவவதரித்திருந்தாலுங் கூட ஆழ்வானுடைய பஞ்சஸ்தவங்கள் அவதரிக்கவில்லையாகில் நம் எம்பெருமானார் தரிசனத்திற்கு அபரிஹார்யமான குறையேயாகுமன்றே. ... ... ... ... ... 47

# 48. ஆழ்வானுடைய உக்திசாதுர்யம்

எம்பெருமானைத் துதிக்கின்ற பக்தமணிகள் தங்களுடைய பலவகையான அநுபவங்களில் விலக்ஷணமான ஓர் அநுபவத்தைக் காட்டுவதுண்டு; அதாவதென்னவென்னில், எம்பெருமானை நோக்கிச் சில கேள்விகள் கேட்கிறமுகத்தால் ஒருவகையான குணாநுபவம் பண்ணுவது. பொய்கையாழ்வார், நம்மாழ்வார், திருமங்கையாழ்வார் முதலானோர் இவ்வநுபவத்திற்கு வழிகாட்டிகளாக அமைந்தனர். பொய்கையார் முதல திருவந்தாதியில் (69) *பாலன் தனதுருவாயேழுலகுண்டு, ஆலிலையின் மேலன்று நீ வளர்ந்த மெய்யென்பர்—ஆலன்று வேலை நீருள்ளதோ விண்ணதோ மண்ணதோ? சோலை சூழ் குன்றெடுத்தாய் சொல்லு* என்று கேட்கிறார். நம்மாழ்வாருடைய வினாக்கள் பல பல. ஒன்றேகேண்மின்; பெரியதிருவந்தாதியில் *சிறால் பிறந்து சிறப்பால் வளராது; பேர் வாமனாகாக்கால் பேராளா!—மார்பாரப், புல்கி நீயுண்டுமிழ்ந்த பூமி நீரேற்பரிதே? சொல்லு நீ யாமறியச் சூழ்ந்து.* என்பது. திருமங்கையாழ்வாருடைய வினாக்களிலும் ஒன்று கேண்மின்; (பெரிய திருமொழி 7-9-7) *சேயோங்கு தண் திருமாலிருஞ்சோலை மலையுறையும் மாயா! எனக்குரையாயிது, மறை நான்கினுளாயோ? தீயோம்பு கைம்மறையோர் சிறுபுலியூர்ச் சலசயனத்தாயோ? உனதடியார் மனத்தாயோ? என்பது.

இந்த வினாக்களை விவரித்து அநுபவித்தால் இதன்சுவை பெருகும். ஆழ்வானுடைய ஸ்தவங்களில் அதிமாநுஷ, ஸுந்தரபாஹு, வரதராஜஸ்தவங்களிலே வெகு ரஸிகமான கேள்விகள் அமைந்துள்ளன. திருமாலிருஞ்சோலை யழகரை நோக்கிக் கேட்கிற மூன்று கேள்விகள் அமைந்த ஒரு ச்லோகத்தை மாத்திரம் இங்கு சுருக்கமாக அநுபவிப்போம்.

गूहितस्वमहिमाऽपि सुन्दर! त्वं व्रजे किमिति शक्रमाक्रमीः ।

सप्तरात्रमदधाश्च किं गिरिं पृच्छतश्च सुहृदः किमक्रुधः ॥

என்பது ஸுந்தரபாஹுஸ்தவத்தில் 112-ஆம் ச்லோகம்.

இதிலுள்ள மூன்று கேள்விகளாவன:—ஸௌலப்ய ஸௌசீல்யங்களையே காட்டிப் பரத்வத்தை யொளித்து மாநுஷ்யகம் கொண்டாட வந்த விடத்திலே பரத்வம் விளங்கும்படியான செய்கைகளையும் இடையிடையே வெளியிட்டது எதற்காக? என்பது முக்கியமான கேள்வி. அழகரே! தேவரீர் *ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஓரிரவிலொருத்தி மகனாயொளித்து வளர்ந்தது ஸ்வகீய சக்தி விசேஷங்களை யெல்லாம் மறைத்துக் கொண்டல்லவோ? அப்படியிருந்தும், நெடுநாளாகத் திருவாய்ப்பாடியில் நடந்து வந்த தேவேந்திர ஸமாராதனையைத் தடுத்தது ஏன்? என்பது ஒரு கேள்வி. இதற்கு எம்பெருமான் (அல்லது அவனுடைய ப்ரதிநிதிகள்) சொல்லக்கூடிய ஸமாதானம் என்னவென்னில்; பராத்பரனான தான் வளருகிற ஊரிலே தேவதாந்தரத்திற்கு ஆராதனை யாவதென்? என்றிருந்தபடியாலே தடுத்ததாக.

அவ்விந்திரன் ஏழுநாள் கல்மழை பெய்வித்து ஆயர்களுக்கும் ஆநிரைகளுக்கும் பொறுக்கொணுத் தீங்கை விளைத்த போது அவனைத் தலையறுத்துத் தொலைக்க வேண்டியிருக்க, அது செய்யாதே கோவர்த்தனமலையைக் கொற்றக் குடையாகத்தாங்கி நின்றதென்? என்பது இரண்டாவது கேள்வி. 'இந்திரனது உணவைக் கொண்ட நாம் உயிரையும் கொள்ளவேணுமோ? இந்த மலையே நமக்கு ரக்ஷகமென்று நாம் அடியிலே சொன்ன சொல்லை மெய்யாக்கி இம்மலையைக் கொண்டே மழைக் கஷ்டத்தைத் தடுத்து விடுவோமாகில் அவன் கைசலித்தவாறே தானே ஓய்ந்து நிற்கிறு னென்கிற விசாலமான திருவுள்ளத்தினுல்—என்பது இதற்கு ஸமாதானம்.

ஏழு பிராயத்துச் சிறுவன் மலையெடுத்து நின்ற அதிமாநுஷ சேஷ்டிதங் கண்டு ஆச்சரியப்பட்ட ஆயர்கள் அவனுடைய பிறப்பிலே சங்கை கொண்டு "देवो वा दानवो वा त्वं यक्षो गन्धर्व एव वा ?" என்று, நீ தேவனோ? தானவனோ? யக்ஷனோ? கந்தர்வனோ? என்று கேட்டவளவிலே * क्षणं भूत्वा त्वसौ तूष्णीं किञ्चित्प्रणयरोषवान् * என்கிறபடியே— அப்படி அவர்கள் கேட்டதற்குச் சீற்றங் கொண்டதாக வுள்ளது. சீற்றங் கொள்ளும்படியாக அவர்கள் ஒன்றும் கேட்கவில்லையே!, அப்படியிருக்க சீற்றங்கொண்டது ஏன்? என்பது மூன்றாவது கேள்வி. இடையர்களிலே கடை கெட்ட இடையனைத் தான் வந்து பிறந்திருக்கச் செய்தே ஸஜாதியனை விஜாதியனுக்கிக் கேள்வி கேட்பது தவறுதலால் சீற்றமுண்டாயிற்றென்று ஸமாதானம். இத்தால் கண்ணபிரானுக்கு தேவத்வத்திலுங் காட்டில் கோபாலத்வமே உகப்புக்கிடமான தென்று விளங்கும். இப்படிப்பட்ட அர்த்தங்களை விளங்கச் செய்யும் கேள்விகளன்றோ இவை. ... 48

## 49. "துஷ்யந்திச ரமந்திச."

பகவத்கீதை பத்தாவது அத்யாயத்தில் ஒன்பதாவது ச்லோகம் (10-9.)

"मच्चित्ता मद्गतप्राणा बोधयन्तः परस्परम् । कथयन्तश्च मां नित्यं तुष्यन्ति च रमन्ति च— மச்சித்தா மத்கதப்ராணு: போதயந்த: பரஸ்பரம், கதயந்தச்ச மாம் நித்யம் துஷ்யந்திச ரமந்திச" என்பது. இந்த ச்லோகம் பாகவத சிகாமணிகளின் அழகிய போது போக்கைப்பற்றிப் பகவான் [கீதாசார்யன்] பரமஸந்தோஷம் பொலியச் சொன்னது. பாகவதர்கள் இப்படி வர்த்திக்க வேணுமென்று சிக்ஷிக்கின்றதாகவும் அமைந்துள்ளது இந்தச்லோகம். இதை நெஞ்சில் ஆவ்ருத்தி பண்ணப் பண்ண விலக்ஷணமான வோர் ஆனந்தம் பக்தர்களுக்கு உண்டாகியேதீரும். திருமழிசைப் பிரான் நான்முகன் திருவந்தாதியில் "தெரித்தெழுதி வாசித்துங் கேட்டும் வணங்கி வழிபட்டும் பூசித்தும் போக்கினேன் போது" என்றருளிச செய்த பாசுரம் இந்த கீதாச்லோகத்தை யடியொற்றியே யென்று சொல்லலாம்.

கீதைக்குப் பல பாஷ்யங்கள் அவதரித்திருந்தாலும் நம் ஸ்வாமி எம்பெருமானாருளிச் செய்திருக்கும் பாஷ்யத்தின் மாதுர்யமும் காம்பீர்யமும் ஒப்புயர்வற்றது. அதிகமான விரிவு இன்றிக்கே ஸம்க்ஷிப்தமாகவே யிருந்தாலும் அர்த்தபுஷ்டி அந்யாத்ருசமென்பதை அநுபவரஸிகர்களே அறியமுடியும். சைலியை ஆழ்ந்து நோக்குமிடத்து எம்பெருமானாரும் மணவாள மாமுனிகளும் அபிநவ்யக்திகளே யென்று அறுதியிடத் தட்டில்லை. ப்ரக்ருத ச்லோகத்தின் முடிவில் "துஷ்யந்திச ரமந்திச" என்றுள்ளது. க்ரியாபதங்களிரண்டுக்கும் 'ஸந்தோஷிக்கிருர்கள்' என்பதொன்றே பொருளாகத் தோன்றுகிறது. இந்த புநருக்தி எதற்காகவென்று ஆராயும்போது பாஷ்யங்களை யெடுத்துப் பார்க்க ஆவல் கிளர்கின்றது. சங்கர பாஷ்யத்தைப் பார்த்தாலோ அதில், "तुष्यन्ति—परितोषमुपयान्ति ; रमन्ति च—रतिं च प्राप्नुवन्ति, प्रियसंगत्या इव ।"

என்றுள்ளது. பரிதோஷமாவது என்ன? ரதியாவது என்ன? என்பதை நுண்ணுணர்வினர் நுட்பமாக அறிவர் போலும். இனி மத்வபாஷ்யத்தைப் பார்த்தாலோ, இங்கு 8, 9, 10, 11, ஆகிய நான்கு ச்லோகங்களுக்கு பாஷ்யமே கிடையாது. "सन्ति च भजन्तः केचिदित्याह अहमित्यादिना" என்று எட்டாவது ச்லோகத்திற்கு அவதாரிகையிட்டு, மேல் பதினோராவது ச்லோகம் வரையில் ஸ்பஷ்டார்த்தகமென்று முடித்திட்டார். அந்த பாஷ்யத்தின் ப்ரக்ரியை பெரும்பாலும் இத்தகையதே.

இனி நம் ஸ்வாமியின் பாஷ்ய ஸூக்திகள் காண்மின்; "[तुष्यन्ति च रमन्ति च] वक्तारः तद्वचनेन अनन्यप्रयोजनेन तुष्यन्ति। श्रोतारश्च तच्छ्रवणेन अनवधिकातिशयप्रियेण रमन्ते।" என்றுள்ளது. பகவத் கதைகளைச் சொல்லி மகிழ்வார் சிலர்; அவற்றைக் காதாரக் கேட்டு மகிழ்வார் சிலர். இவ்வகையான பேதத்தையிட்டு க்ரியாபத பேதம் செய்ததாக ஸ்வாமி திருவுள்ளம் பற்றுகிறார். மூலத்தில் "போதயந்த: பரஸ்பரம்" என்றிருப்பதனாலே வக்தாக்களும் ச்ரோதாக்களுமாக இரண்டு வகுப்பினர் அவசியம் தேறுகிறார்கள். அவ்விரு வகுப்பினரிடத்தும் அந்வயிக்குமாறு இரண்டு க்ரியாபதங்களை கீதாசார்யன் ப்ரயோகித்திருப்பதாக மருமம் கண்டறிந்து உரைசெய்திருப்பது ஸ்வாமி ராமாநுஜர்க்குத் தன்னேற்றம்.

இந்த நுண்பொருளை ஸ்வாமி கண்டறிந்தது, முன்னே நாம் காட்டிய திருமழிசைப் பிரான் பாசுரங்கொண்டே யென்னலாம். அதில், வக்த்ருத்வம் ச்ரோத்ருத்வமாகிய இரண்டும் ஆழ்வார்க்கே காலபேதமாக இருப்பதாகக் காட்டப்பட்டிருக்கிறது. எங்ஙனே யென்னில்; "தெரித்தெழுதி வாசித்தும் கேட்டும்" என்றவதில், தெரிக்கையாவது-தெரிவிக்கை; ப்ரவசநம் பண்ணுகை. அது ஒருகாலத்தில்; மற்றொரு காலத்தில் பிறர் சொல்ல ச்ரவணம் செய்கையை 'கேட்டும்' எனபதனால் குறித்தனர். ஆக ஒரு வ்யக்திக்கே காலபேதத்தாலே சொல்லுவதும் கேட்பதும் ஸம்பாவிதமேயாதலால், சொல்லுங்காலுண்டாகு மானந்தத்தை 'துஷ்யந்தி' என்பதனாலும், கேட்குங்காலுண்டாகு மானந்தத்தை 'ரமந்தி' என்பதனாலும் கீதாசார்யன் குறிப்பிட்டதாகக் கொள்வது சிறக்கும். ... ... ... ... ... 49

## 50. ஆழ்வானுடைய நல்வார்த்தையொன்று

நம்முடைய பூருவாசாரியர்களின் திருவாக்குகளின்று ஒவ்வொரு ஸமயத்தில் ஒவ்வொரு நல்வார்த்தையாகப் பல பல ஸமயவிசேஷங்களில் பல பல நல்வார்த்தைகள் தோன்றியிருக்கின்றன. அவை ஒவ்வொன்றும் நமக்கு நல்லறிவையும் நல்லனுட்டானத்தையும் ஊட்டுவதற்கே தோன்றிய தாதலால் அவற்றை நாம் அடிக்கடி மனனம் செய்யவேண்டும். மிகச் சிறந்ததொரு நல் வார்த்தையை இப்போது கேண்மின்.

*மொழியைக் கடக்கும் பெரும்புகழான் வஞ்சமுக்குறும்பாங் குழியைக் கடக்கும்நங் கூரத்தாழ்வான்* என்று திருவரங்கத்தமுதனாராலும், *वाचामगोचरमहागुणदेशिकाग्र्यकूराधिनाथ-வாசாமகோசரமஹாகுண தேசிகாக்ர்யகூராதிநாத* என்று மணவாளமாமுனிகளாலும் குலாவப்படுகின்ற கூரத்தாழ்வானுடைய சிஷ்யவர்க்கங்களிலே பிள்ளைப்பிள்ளையாழ்வானென்பவரும் ஒருவர். அவர் உயர்குலப் பிறப்பு முதலியவற்றால் மேனாணிப்புக் கொண்டிருந்து நல் விநய மின்றிக்கே பரமபாகவதர்கள் திறத்திலும் கடுவான வார்த்தைகளைப் பேசி அபசாரப்படுவதையே இயல்பாகக் கொண்டிருந்தார். அதை அவருடைய ஆசார்யரான ஆழ்வான் கண்டு திருவுள்ளம் மிகவும் நொந்து "அந்தோ! இவர்க்கு இப்படிப்பட்ட பாகவதாபசாரம் சிறிதும் தகுந்திருக்கவில்லையே; இது இவருடைய அனுஷ்டானங்களை வெல்லாவற்றையுங் கீழ்ப்படுத்தித் தானே மேலாய்நின்று

விநாசத்தை விளைத்திடுமே; இதற்கு வேலியிட்டு வைக்கவேணுமே” என்று திருவுள்ளம் பற்றி ஓர் உபாயம் சிந்தித்துக்கொண்டிருந்தார்.

இருக்கையில், ஒரு புண்யதினம் ப்ராப்தமாயிற்று. அன்று அந்தப் பிள்ளைப் பிள்ளையாழ்வானென்கிற சிஷ்யர் நீராட்டம் செய்து கரையேறின வளவிலே ஆழ்வான் அவருடைய அருகே சென்று “ஓய்! இப்போது அவரவர்கள் தம் தம் சக்திக்குத் தக்கபடி தானம் செய்கிற காலமாயிருக்கின்றது; இக்காலத்திலே நீரும் நமக்கு ஒரு தானம் பண்ணினால் நலம்; பண்ணியே யாகவேணும்” என்றாராம். அது கேட்ட அவர், “ஸ்வாமிந்!, எல்லாம் தேவரீருடையதாகவே யிருக்க, அடியேன் எத்தை தானம் பண்ணுவது?” என்றாராம். அதுகேட்ட ஆழ்வான் “இந்த உபசாரவார்த்தை இருக்கட்டும்; மநோ வாக்காயங்களாலே இனி பாகவதாபசாரம் பண்ணாமல் வர்த்திக்கக் கடவேன்” என்று நம் கையிலே உதகம் பண்ணித் தரவேணும்” என்ன, அவரும் அப்படியே உதகதானம் பண்ணிக் கொடுத்து விட்டார்.

ஆனாலும் அவர் நெடுநாளாக பாகவதாபசாரமே பட்டுப் போந்தவராதலால் அந்த அநாதிவாஸனை சடக்கென அறமாட்டாமல் தொடர்ந்து வந்தபடியாலே பழைய வாஸனையினால் மறுபடியும் பாகவதாபசாரப்பட நேர்ந்துவிட்டது. அப்படி நேர்ந்து விடவே நடுநடுங்கிப் போனாரவர்; ‘இனி நாம் முடிந்தோமத்தனை’ என்று மிகமிக அஞ்சினார். அவ்வபசாரம் ஆழ்வான் திருச்செவியிலே எட்டியிருக்குமென்று நிச்சயித்தார். அதனால் ஆழ்வானருகு வாராமல் தம்முடைய க்ருஹத்திலேயே யிருந்துகொண்டு துடித்தார்.

நாடோறும் தவறாமல் தம்மிடம் வருகின்ற அவர் சிலநாள் வரக்காணாமையாலே ஆழ்வான் அவருடைய க்ருஹத்திற் கெழுந்தருளி ‘ஓய்! தென்படவில்லையே, என்ன விசேஷம்?’ என்று வினவியருளினார். அப்போது அவர் தமக்கு அவசாத்தாக பாகவதாபசாரம் நேர்ந்தபடியை விண்ணப்பஞ்செய்து, மனோவாக்காயங்களாகிற முக்கரணங்களாலும் அபசாரம் புகாதபடி இத்தேஹத்தோடு வர்த்திக்கை அரிதாயிராநின்றது; என் செய்வேன்!’ என்று திருவடிகளைக் கட்டிக் கொண்டு கிடந்து கிலேசிக்க, இத்தனை யநுதாபம் இவர்க்கு உண்டாகப் பெற்றதே யென்று உகந்த ஆழ்வான் அப்போது அருளிச் செய்தவார்த்தை —“மாநஸிகமாக நேரும் அபராதத்திற்கு அநுதாபமுண்டாகவே எம்பெருமான் க்ஷமித்தருள்வன்; ராஜதண்டபீதியாலே காயிகமான அபசாரம் நேராது; இனி வாக்கை மாத்திரம் ஜாக்கிரதையாகப் பாதுகாத்துப் போரும்” என்று...........“பிள்ளைப் பிள்ளையாழ்வானுக்கு ஆழ்வானருளிச் செய்த வார்த்தையை ஸ்மரிப்பது” என்கிற ஸ்ரீவசந பூஷண சூர்ணிகையின் வியாக்கியானத்திலே இவ்விஷயம் விளக்கமாகக் காணத் தக்கது. .... ... 50

## 51. ஸ்ரீ மஹாவிஷ்ணு நக்ஷத்ரம்

எம்பெருமான் *பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம். தர்மஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகேயுகே* என்று கீதையில் அருளிச்செய்தபடியும், *எங்ஙனே யோனியுமாய்ப் பிறந்தாயிமையோர் தலைவா* மனிசரும் மற்றும் முற்றுமாய் மாயப் பிறவி பிறந்த* என்று ஆழ்வாரருளிச் செய்தபடியும் பல அவதாரங்களைச் செய்தருளுகிறான். அவ்வவதாரங்களுக்கு விபவாவதார மென்று பெயர். ஸ்ரீ ராம க்ருஷ்ணாத்யவதாரங்களுக்கே விபவாவதாரமென்று வ்யபதேசம். இப்படி யவதரிக்குமிடத்து ஸ்ரீ ராமபிரான் புநர்வஸு நக்ஷத்ரத்திலவதரித்ததாகவும், கண்ணபிரான் ரோஹிணீ நக்ஷத்ரத்தி லவதரித்ததாகவும், அழகிய சிங்கர் ஸ்வாதீ நக்ஷத்ரத்தில் அவதரித்ததாகவும் இதிஹாஸ புராணங்களாலறிகின்றோம். ஸ்ரீ ராமக்ருஷ்ண நரஸிம்ஹாதி திவ்ய மூர்த்திகளுக்கு ஆங்காங்கு திவ்ய தேசங்களில் திருநக்ஷத்ரோத்ஸவம்

கொண்டாடுவதும் [illegible] குறித்த நக்ஷத்ரக்ரமம் [illegible] கைவருவதைக் காணு நின்றோம். இதில் மதபேதமிருப்பதாகத் தெரியவில்லை.

இப்படியிருக்க, பெரியாழ்வார் அழகிய சிங்கரும் கண்ணனும் திருவோணத்திலவதரித்ததாக அருளிச் செய்திருப்பது பொருந்துமோ! வென்று சிலர் சங்கிக்க இடமுள்ளது. திருப்பல்லாண்டில் "திருவோணத் திருவிழவிலந்தியம்போதிலரியுருவாகி" என்ற பாசுரத்தினால் அழகியசிங்கர்திருவோணத்திலவதரித்ததாகக் காட்டப்பட்டுள்ளது. பெரியாழ்வார் திருமொழியில் கண்ணன் திருவோணத்தி லவதரித்ததாக அஸக்ருத் அருளிச் செய்யப் படுகிறது. "நீ பிறந்த திருவோணம் இன்று நீ நீராடவேண்டும்" "திண்ணார் வெண்சங்குடையாய் திருநாள் திருவோண மின்றேழுநாள்" இத்யாதி பாசுரங்கள் காண்க. இதிஹாஸபுராண ப்ரக்ரியைக்கும் ஸர்வஸம்ப்ரதிபந்நமான லோக வ்யவஹாரங்களுக்கும் முரணாக ஆழ்வார் ஏன் இப்படி யருளிச்செய்தார்? என்று விமர்சிக்க ப்ராப்தம்.

வடமொழி வேதத்தில் "श्रोणा नक्षत्रं विष्णुर्देवता—ச்ரோணா நக்ஷத்ரம் விஷ்ணுர் தேவதா" என்று ஓதப்பட்டிருக்கிறது. இதனால் திருவோண நக்ஷத்ரமானது விஷ்ணுவுக்கு அஸாதாரண நக்ஷத்ரமென்று சொல்லிற்றாகிறது. எம்பெருமான் எந்த நக்ஷத்திரத்தில் திருவவதரித்தாலும் அது திருவோண நக்ஷத்திரத்தின் அம்சம் பொருந்தியதாகவேயிருக்குமென்று வைதிகர்கள் திருவுள்ளம் பற்றியிருக்கிறார்கள். எம்பெருமான் எந்தப் புஷ்பத்தைச் சாத்திக் கொண்டாலும் அதில் திருத்துழாயின் அம்சம் அவிநாபூதமென்று சொல்லுவதுண்டு; அந்த நியாயமே இங்கும்.

பெரியாழ்வார்* அத்தத்தின் பத்தாநாள் தோன்றிய வச்சுதன்* என்று மருளிச் செய்திருக்கின்றார். ஹஸ்தநக்ஷத்திரத்தின் பத்தாவது நாள் திருவோணமாகிறாப்போலே ரோஹிணியுமாகிறது. எப்படியென்னில், மேல் முறையில் கணக்கிட்டால் திருவோணம். கீழ் முறையில் கணக்கிட்டால் ரோஹிணி. ஆகவே கண்ணபிரான் ரோஹிணியில் திருவவதரித்ததையும் பெரியாழ்வார் குறிப்பிட்டே யிருக்கிறாரென்று சில பெரியார்கள் நிர்வஹிப்பதுண்டு. மேல்முறையாகக் கணக்கிடுவதை விட்டுக் கீழ் முறையாகக் கணக்கிடுவதைத் திருவுள்ளம்பற்றி யருளிச்செய்தாரென்கை உசிதமன்று எனினும் அதுவும் திருவுள்ளத்திலிருக்கலாம். "அத்தத்தின் பத்தாநாள்" என்று இவ்வகையாக அருளிச் செய்ததன் கருத்தை நம் ஆசாரியர்கள் இன்சுவை மிக அருளிச்செய்திருப்பதை வியாக்யானங்களைக் கொண்டு அறிக.

ஆக, விபவாவதார மூர்த்திகள் வெவ்வேறு திருநக்ஷத்திரங்களில் அவதரித்திருந்தாலும் திருவோணத்திலவதரித்ததாக அருளிச்செய்வதில் அநௌசித்யமொன்றுமில்லையென்றும் வைதிக ப்ரக்ரியைக்கு இது பொருந்தியதேயென்றும் சொல்லிற்றாயிற்று. 51

## 52. ஸ்ரீராமாயணத்தில் ஒரு விசாரம்

ஸ்ரீராமபிரான் ஸமுத்ரராஜனை நோக்கி சரணாகதியாகக் கடற்கரையில் பள்ளி கொண்டவாற்றைச் சொல்லாநின்ற வான்மீகி முனிவர் * ततः सागरवेलायां दर्भानास्तीर्य राघवः। अञ्जलिं प्राङ्मुखः कृत्वा प्रतिशिश्ये महोदधेः॥ बाहुं भुजगभोगाभमुपधायारिसूदनः * என்று சொல்லியிருக்கிறார். ஒரு திருக்கையைத் தலையணையாக வைத்துக் கொண்டு சயனித்தருளினதாகச் சொல்லப்படுகிறது. பட்டரும் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் * प्रतिजलधितो वेलाशय्यां विभीषण कौतुकात् * என்ற ச்லோகத்தில், "समुपदधतः कञ्चित्, कञ्चित्प्रसारयतः" என்று இங்ஙனமே யருளிச் செய்திருக்கிறார். இவ்விதமாக சயனித்துக்கொண்டபோது "அஞ்ஜலிம் ப்ராங்முக: க்ருத்வா" என்று சொல்லியிருப்பது எப்படி ஸம்பாவிதமாகும்.

கொண்டாடுவதும் மேலே குறித்த நக்ஷத்ரக்ரமம் பிறழாமலே நடந்துவருவதைக் காணு கின்றோம். இதில் மதபேதமிருப்பதாகத் தெரியவில்லை.

இப்படியிருக்க, பெரியாழ்வார் அழகிய சிங்கரும் கண்ணனும் திருவோணத்தி லவதரித்ததாக அருளிச் செய்திருப்பது பொருந்துமோ வென்று சிலர் சங்கிக்க இட முள்ளது. திருப்பல்லாண்டில் "திருவோணத் திருவிழவிலந்தியம் போதிலரியுருவாகி" என்ற பாசுரத்தினால் அழகியசிங்கர்திருவோணத்திலவதரித்ததாகக் காட்டப்பட்டுள்ளது. பெரியாழ்வார் திருமொழியில் கண்ணன் திருவோணத்தி லவதரித்ததாக அஸக்ருத் அருளிச் செய்யப் படுகிறது. "நீ பிறந்த திருவோணம் இன்று நீ நீராடவேண்டும்" "திண்ணார் வெண்சங்குடையாய் திருநாள் திருவோண மின்றேழுநாள்" இத்யாதி பாசுரங்கள் காண்க. இதிஹாஸபுராண ப்ரக்ரியைக்கும் ஸர்வஸம்ப்ரதிபந்நமான லோக வ்யவஹாரங்களுக்கும் முரணாக ஆழ்வார் ஏன் இப்படி யருளிச்செய்தார்? என்று விமர்சிக்க ப்ராப்தம்.

வடமொழி வேதத்தில் "श्रोणा नक्षत्रं विष्णुर्देवता—ச்ரோணா நக்ஷத்ரம் விஷ்ணுர் தேவதா" என்று ஓதப்பட்டிருக்கிறது. இதனால் திருவோண நக்ஷத்ரமானது விஷ்ணு வுக்கு அஸாதாரண நக்ஷத்ரமென்று சொல்லிற்றாகிறது. எம்பெருமான் எந்த நக்ஷத் திரத்தில் திருவவதரித்தாலும் அது திருவோண நக்ஷத்திரத்தின் அம்சம் பொருந்திய தாகவேயிருக்குமென்று வைதிகர்கள் திருவுள்ளம் பற்றியிருக்கிறார்கள். எம்பெருமான் எந்தப் புஷ்பத்தைச் சாத்திக் கொண்டாலும் அதில் திருத்துழாயின் அம்சம் அவிநா பூதமென்று சொல்லுவதுண்டு; அந்த ந்யாயமே இங்கும்.

பெரியாழ்வார்* அத்தத்தின் பத்தாநாள் தோன்றிய வச்சுதன்* என்று மருளிச் செய்திருக்கின்றார். ஹஸ்தநக்ஷத்திரத்தின் பத்தாவது நாள் திருவோணமாகிறாப்போலே ரோஹிணியுமாகிறது. எப்படியென்னில், மேல் முறையில் கணக்கிட்டால் திரு வோணம், கீழ் முறையில் கணக்கிட்டால் ரோஹிணி. ஆகவே கண்ணபிரான் ரோஹிணியில் திருவவதரித்ததையும் பெரியாழ்வார் குறிப்பிட்டே யிருக்கிறாரென்று சில பெரியார்கள் நிர்வஹிப்பதுண்டு. மேல்முறையாகக் கணக்கிடுவதை விட்டுக் கீழ் முறையாகக் கணக்கிடுவதைத் திருவுள்ளம்பற்றி யருளிச்செய்தாரென்கை உசிதமன்று எனினும் அதுவும் திருவுள்ளத்திலிருக்கலாம். "அத்தத்தின் பத்தாநாள்" என்று இவ் வகையாக அருளிச் செய்ததன் கருத்தை நம் ஆசாரியர்கள் இன்சுவை மிக அருளிச்செய் திருப்பதை வியாக்கியானங்களைக் கொண்டு அறிக.

ஆக, விபவாவதார மூர்த்திகள் வெவ்வேறு திருநக்ஷத்திரங்களில் அவதரித்திருந் தாலும் திருவோணத்திலவதரித்ததாக அருளிச்செய்வதில் அநௌசித்யமொன்றுமில்லை யென்றும் வைதிக ப்ரக்ரியைக்கு இது பொருந்தியதே யென்றும் சொல்லிற்றாயிற்று. 51

## 52. ஸ்ரீராமாயணத்தில் ஒரு விசாரம்

ஸ்ரீராமபிரான் ஸமுத்ரராஜனை நோக்கி சரணாகதியாகக் கடற்கரையில் பள்ளி கொண்டவாற்றைச் சொல்லாநின்ற வான்மீகி முனிவர் * ततस्सागरवेलायां दर्भानास्तीर्य राघवः। अञ्जलिं प्राङ्मुखः कृत्वा प्रतिशिश्ये महोदधेः॥ बाहुं भुजगभोगाभमुपधायारिसूदनः * என்று சொல்லி யிருக்கிறார். ஒரு திருக்கையைத் தலையணையாக வைத்துக் கொண்டு சயனித்தருளின தாகச் சொல்லப்படுகிறது. பட்டரும் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் * प्रतिजलधितो वेलशय्यां विभीषण कौतुकात् * என்ற ச்லோகத்தில், "समुपदधतः कञ्चित्, कञ्चित्प्रसारयतः" என்று இங்ஙனமே யருளிச் செய்திருக்கிறார். இவ்விதமாக சயனித்துக்கொண்டபோது "அஞ்ஜலிம் ப்ராங்முக: க்ருத்வா" என்று சொல்லியிருப்பது எப்படி ஸம்பாவிதமாகும்.

இரண்டு கைகளும் ஒன்று சேர்ந்தாலன்றோ அஞ்ஜலியாகும். ஒரு திருக்கை தலையணையானதாகவும் மற்றொரு திருக்கை திருவடியளவாக நீட்டப்பட்டதாகவும் சொல்லியிருக்கும்போது அஞ்ஜலிபந்தம் எப்படி ப்ராப்தமாகும்.

ஸக்ருத் அஞ்ஜலிபந்தம் செய்து விட்டு உடனே அவ்வஞ்ஜலியை விட்டுத் திருக்கையைத் தலையணையாகக் கொண்டார் பெருமாள் என்று சொல்லி விடுவதானால் சங்கைக்கு இடமில்லை.

அப்போது ஸ்ரீராமன் சதுர்ப்புஜனாக ஸேவை யளித்தானென்றும், அதனால் * निशास्तिस्रोऽतिचक्रमु:—நிசாஸ் திஸ்ரோதிசக்ரமு:* என்றபடி மூன்று நாளளவும் அஞ்ஜலி பந்தம் மாறாதேயிருந்த தென்றும் சில பெரியார்கள் கூறுகின்றார்கள்.

இந்த ஸமுத்ரசரணாகதிப்ரகரணத்திலேயே "भुजैः परमनारीणामभिमृष्टमनेकधा—புஜை: பரம நாரீணாமபிம்ருஷ்டம் அநேகதா" என்று ஸ்ரீராம பாஹுவுக்கு வால்மீகி முனிவர் விசேஷணமிட்டிருக்கிறார். ஏகதார வ்ரதனான இராமபிரானுடைய பாஹுவை *பரம நாரீணாம் புஜை: அநேகதா அபிம்ருஷ்டமாகச் சொல்லுவது பொருந்துமா வென்று ஸ்ரீகோவிந்தராஜர் தமது வியாக்கியானத்தில் சங்கித்துக் கொண்டு சில வகையான ஸமாதானங்களெழுதி யுள்ளார். அவற்றுள் முக்கியமான ஸமாதானம் ஒன்றே; பரம நாரீணாம் என்று ஸ்ரீபூமிநீளாதேவிகளைச் சொன்னபடியாய் ஸாக்ஷாத் பரமாத்மாவே ஸ்ரீராமமூர்த்தியாகையாலே அந்த திவ்ய மஹிஷிகளின் புஜங்களினாலான அபிமர்சநத்தையே சொல்லுகிறதிங்கு—என்று காட்டியுள்ள ஸமாதானமே ரஸ்யமும் ரஹஸ்யமுமாகுமென்று பெரியார் பணிப்பது. *ஆத்மாநம் மாநுஷம் மந்யே ராமம் தசரதாத்மஜம்* என்று பெருமாள் தாம் சொல்லிக் கொண்டாலும் பரமபுருஷத் தன்மையானது திருமேனியை விட்டு நீங்காத தொன்றாகையாலே மருமமறிந்த மஹர்ஷியானவர் ஆங்காங்கு ஸ்ரீராமபிரானுடைய பரமாத்ம பாவத்தை ஸூசிப்பித்துக் கொண்டே வருகிறாரென்று தேறுகிறது. மஹர்ஷி காட்டுவது போலவே பெருமாளும் சில சில ஸமய விசேஷங்களில் தம்முடைய உண்மை நிலையைக் காட்டுகிறாரென்று கொள்வதில் பொருந்தாமை யொன்றுமில்லை. ஆகவே, உபதாநீக்ருதமான புஜமொன்றும், ப்ரஸாரிதமான புஜமொன்றும் இருக்கச் செய்தேயும் அஞ்ஜலியும செய்து சதுர்ப்புஜத்வத்தைக் காட்டியருளினதாக நிர்வஹிப்பதில் ஔசித்யம் நன்றேயுள்ளது. ஸ்ரீராமாயண மஹார்ணவத்தில் ஆழ மூழ்கின மஹான்களின் திருவுள்ளம் வெளிவரவேணும். 52

## 53. பந்த தசையும் முக்தி தசையும்

பரம வைதிகர்கள் சித்து அசித்து ஈச்வரன் என மூன்று தத்துவங்களை அங்கீகரித்திருக்கிறார்கள். சேதநர்களே சித்து எனப்படுகிறார்கள். சேதநர்கள் பத்தர் முக்தர் நித்தியர் என மூன்று வகுப்பாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றார்கள். இவ்விருள் தருமாஞாலத்தில் கட்டுண்டு கிடக்கிற சேதநர்கள் பத்தர் எனப்படுகிறார்கள். பந்தம் விடுபட்டு முக்தியடைந்தவர்கள் முக்தரெனப்படுகிறார்கள். ஒருநாளும் ஸம்ஸாரநிலத்தில் வந்து துவளாமல் திருநாட்டிலேயே நித்யாநுபவம் செய்து கொண்டு வாழ்கிற அனந்த கருட விஷ்வக்ஸேநாதிகள் நித்ய ரெனப்படுகிறார்கள். ஆக, சேதநர்கள் விண்ணுலகில் இரண்டு வகுப்பாகவும் மண்ணுலகில் ஒரே வகுப்பாகவும் பிரிக்கப்பட்டார்கள். ஆராயுமளவில் விண்ணுலகிற்போல மண்ணுலகிலும் இரண்டு வகுப்பாகப் பிரிக்கப்பட வேண்டுமென்று தோன்றுகிறது. மண்ணுலகிலுள்ள சேதநர்களையெல்லாம் பத்தர் [கட்டுண்டு கிடப்பவர்கள்] என்ற ஒரே வகுப்பில் அடக்கிவிடுவது நலமாகுமோ? எல்லாரும் வாசியற இங்குக் கட்டுண்டு கிடக்கிறார்களெனினும் இவர்களுக்குள் வாசி தெரியாமலில்லையே. 'இஹலோக பரலோகங்களில்லை, புண்ய பாபங்களில்லை, தெய்வமில்லை' என்று நாஸ்திக வாதங்கள் செய்து கொண்டு நிஹீநாசாரங்

களோடு திரிகின்றவர்களுக்கும், ஆஸ்திகர்களாய் ஸதாசாரபரர்களாய் விளங்குமவர்களுக்கும் வேறுபாடில்லையா? இவர்களெல்லாரையும் ஒரே வகுப்பில் அடக்கி விடலாமோ? இது யுக்தமாகுமோ? என்று சங்கிக்க நேரும். இந்த சங்கைக்கு இடமறும்படியாகவே நம் பூருவர்கள் முமுக்ஷுக்கள் என்றவொரு வகுப்பையும் வகுத்துள்ளார்கள். மோக்ஷத்தில் ருசியுள்ளவர்கள் முமுக்ஷுக்களெனப்படுவார்கள். ப்ரக்ருதி பந்தத்தில் கட்டுண்டு கிடக்கிற இந்நிலையினின்று விடுபட்டு நற்கதி காணவேணுமென்னும் விருப்பமுடையவர்களே முமுக்ஷுக்களாவர்கள். ஆகவே, விண்ணுலகில் முக்தர் நித்யர் என்று இரண்டு வகுப்புகள் இருப்பது போலவே இம்மண்ணுலகிலும் பத்தர், முமுக்ஷுக்களென இரண்டு வகுப்புகள் உள்ளனவென்று தேறிற்று.

இன்னமும் சிறிது ஆராய்ந்தால் மூன்றாவது வகுப்பும் ஒன்று தேறும். அதாவது *மீட்சியின்றி வைகுந்தமாநகர் மற்றது கையதுவே* என்றும் *போயினாற்பின்னை யித்திசைக் கென்றும் பிணைக்கொடுக்கிலும் போகவொட்டாரே* என்றும் சொல்லுகிறபடியே விண்ணுலகத்தவர்கள் இம்மண்ணுலகத்திற்கு மீளமாட்டார்களென்றாலும், ஸம்ஸாரி சேதந ஸமுஜ்ஜீவநார்த்தமாக ஸ்ரீவைகுண்டநாதனுடைய நியமனத்தினால் திருவடி திருவனந்தாழ்வான் திருவாழியாழ்வான் போல்வார் இந்நிலத்திலே மஹாசார்யர்களாக வந்து பிறந்து நம்மிடையே உலாவுவதாகப் பல பிரமாணங்களினால் அறிகின்றோம். *விஷ்வக்ஸேநோ யதிபதிரபூத்* என்றும், *வல்குதே பஞ்சபிராயுதைர் முராரே:* என்றும் சொல்லா நின்றார்களே. அப்படிப்பட்ட மஹான்கள் இப்போதும் ஆங்காங்கு அவதரிக்கின்றார்களென்றே தெரிவதால் அன்னவர்களுக்கு வ்யாவ்ருத்தமாக ஒரு வகுப்பு இருக்கவேணுமன்றோ. அவர்களை முக்தப்ராயர் என்ற வகுப்பில் எண்ணலாமென்பர் பெரியோர்.

ஆக, இந்நிலத்திலுள்ள சேதநர்கள் 'பத்தர், முமுக்ஷுக்கள், முக்தப்ராயர்' என மூன்று வகுப்பினரென்றதாயிற்று. இவர்களுள் பத்தரையும் முக்தப்ராயரையும் விட்டிட்டு முமுக்ஷுக்களை யெடுத்துக் கொள்வோம். முமுக்ஷுக்கள் நித்ய முக்தர்களிற் காட்டிலும் மிகச்சிறந்தவர்களென்று குலாவப்படுகிறார்கள். நம்மாழ்வார் திருவிருத்தத்தில் (79) *வேதனை வெண்புரிநூலனை...சிந்தனையே தொழுவார் விண்ணுளாரிலுஞ் சீரியரே* என்றருளிச் செய்கிறார். இந்நிலத்திலிருந்து கொண்டு எம்பெருமானை யநுபவிக்கப் பெறுமவர்கள் பரமபதத்திலுள்ளவர்களிற் காட்டிலும் சிறப்புடையர் எனகிறார். இடைவிடாது பகவதநுபவம் செய்வதற்கென்றே வாய்த்த இடமான பரமபதத்தில் பகவதநுபவத்திற்கு எவ்வகையான இடையூறுமில்லையாதலால் அங்கிருந்து கொண்டு பகவானை யநுபவித்தல் வியப்பன்று; உண்டியே உடையே உகந்தோடு மிம்மண்டலம் பகவதநுபவத்திற்கு நேர்விரோதி யாதலால் அப்படிப்பட்ட இந்த இருள்தருமா ஞாலத்திலிருந்து கொண்டே அங்ஙனம் நித்யாநுபவம் செய்தலில் மிக அருமையுண்டாதலால் அவ்வருமையைப் போக்கி எம்பெருமானை யநுபவிக்குமவர்களை நித்ய முக்தர்களினும் மேம்பட்டவர்களாகக் கூறத் தடையுண்டோ? ஒரு சிறந்த காரியத்தைப் பிரதிபந்தகமில்லாதவிடத்தில் தலைக்கட்டுதலிற் காட்டிலும் பிரதிபந்தகம் மலிந்த விடத்தே தலைக்கட்டுதல் வியக்கத் தக்கதன்றோ. *பாவியேனைப் பல நீகாட்டிப் படுப்பாயோ* என்றும் *இறிசெய்தென்னைப் புறத்திட்டு இன்னங் கெடுப்பாயோ* என்றும் *உண்ணிலாவிய ஐவரால் குமை தீற்றி என்னையுன் பாதபங்கயம் நண்ணிலா வகையே நலிவான்* என்றும் மாஞானிகளுங்கூடக் கதறுமிடத்திலே யிருந்துகொண்டு முமுக்ஷுக்களாயிருக்குமவர்கள் உண்மையில் மிக மேம்பட்டவர்களேயாவர்.

இந்த மேம்பாட்டுக்கு மற்றொரு காரணமுமுண்டு; இடையூறு ஒன்றுமில்லாததான உயர்நிலத்தில் பண்ணக்கடவதான அநுபவத்தை இடையூறுகள் மலிந்த இந்நிலத்திலே பண்ணுவது சிறந்தது என்பது கிடக்கட்டும், மற்றொன்று ஆழ்ந்து பார்க்க வேண்டியதுண்டு இங்கு. பரமபதத்தில் அநுபவமுள்ளதென்றும் இந்நிலத்தில் அநு

பவ மநோரத முள்ளதென்றும் அறிந்திருக்கிறீர்கள். அநுபவம் சிறந்ததா, மநோரதம் சிறந்ததா? என்று விமர்சிக்குமளவில், இஷ்டமான விஷயத்தை அநுபவிப்பதிற்காட்டிலும் அநுபவிப்போமென்னும் மனோரதமே சிறந்ததாமென்பதை அநுபவ ரஸிகர்கள் எளிதிலுணர்வர். தேனூறி யெப்பொழுதும் தித்திக்கும்படியானது மநோரதமேயாம். திருவரங்கஞ்சென்று திருவத்யயநோத்ஸவம் ஸேவிக்க வேணுமென்று ஒருவற்கு ஆவல் இருப்பதாக வைத்துக்கொள்க. ஒரு விசை சென்று ஸேவித்து வந்துவிட்டால் அவ்வளவிலே ஆசை தீர்ந்து விட்டதாகும். மநோரதமாய்ச் செல்லுமாகில் அது அநுபவபர்யந்தம் ரஸவத்தரமாயிருக்கும். சந்தனம் பூசிக்கொள்ளுதல், புஷ்பம் சூட்டிக்கொள்ளுதல் முதலிய அலங்கார காரியங்களில் ப்ரமசாரிகளுக்குள்ள ஆவல் க்ருஹஸ்தர்களுக்கு இல்லாமையும் இங்கு ஒரு உதாஹரணமாகக் காட்டத்தகும்.

திருச்சந்த விருத்தத்தில் திருமழிசைப் பிரான் "அயனரன் நாடினோடு நாட்டமாயிரத்தனோடு நண்ணினும், வீடதான போகமெய்தி வீற்றிருந்தபோதிலும், கூடுமாசையல்லதொன்று கொள்வனோ குறிப்பிலே* என்றருளிச் செய்கிறார். வீடதான போகமெய்துவதிற்காட்டிலும், கூடவேணுமென்கிற ஆசையே பரமோத்தேச்யமாகச் சொல்லப்பட்டதாயிற்று.

எம்பெருமானாரும் ஸ்ரீவைகுண்ட கத்யத்தில் "कदाऽहं भगवन्तं नारायणं मम कुलनाथं मम कुलदैवतं मम कुलधनं मम भोग्यं मम मातरं मम पितरं मम सर्वं साक्षात्करवाणि चक्षुषा; कदाऽहं भगवत्पादाम्बुजद्वयं शिरसा धारयिष्यामि; कदाहं भगवत्पादाम्बुजद्वयपरिचर्याकरणयोग्यः तदेकभोगस्तत्पादौ परिचरिष्यामि; कदाहं भगवत्पादाम्बुजद्वयपरिचर्याशया निरस्तसमस्तेतरभोगाशः अपगतसमस्तसांसारिकस्वभावः तत्पादाम्बुजद्वयं प्रवेक्ष्यामि; कदा मां भगवान् स्वकीयया अतिशीतलया दृशा अवलोक्य स्निग्धगम्भीरमधुरया गिरा परिचर्यायामाज्ञापयिष्यति" इति भगवत्परिचर्यायाम् आशां वर्धयित्वा" என்றருளிச் செய்கிறார். कदा कदा कदा என்று பாரிக்கும் பாரிப்பிலுள்ள அதிசயம் அநுபவத்திலிருக்குமாவென்று ஐயுறவேண்டியிருக்கிறது

ஆக, முக்திதசையிற்காட்டிலும் பந்ததசையில் முமுக்ஷுஸாம்ராஜ்யம் பெற்று *என்னாள் யானுன்னை இனிவந்து கூடுவனே* உனபாதம் சேர்வதடியேனெந்நாளே* என்று கதறிக்கொண்டு பாரிக்கிற பாரிப்பின் சுவையே சிறந்ததென்று நிரூபித்தோமானோம்.

... ... ... ... 53

## 54. பக்தியின் தத்துவம்

உலகில் காணும் மஹான்களை நாம் இரண்டு வகுப்பில் சேர்த்துப் பேசுகின்றோம். சிலரை மஹாஜ்ஞானிகள் [மஹாபண்டிதர்கள்] என்று வழங்குகிறோம். சிலரை மஹாபக்தர்களென்று புகழ்கிறோம். பாண்டித்யமும் பரமபக்தியும் ஒரே நபரிடத்தில் ஒன்று சேர்ந்திருக்கமுடியாத தன்மைகளல்ல. இருளும் ஒளியும் ஒன்று சேர்ந்திருக்கமாட்டாதவை யென்பதுபோல இந்த ஜ்ஞானபக்திகளும் ஒன்று சேர்ந்திருக்கமாட்டாதவை யென்பதில்லை. நம்முடைய பூர்வாசாரியர்களும் மற்றும் பல பெரியார்களும் ஜ்ஞான பக்தி விரக்தி நிதிகளாயிருந்தவர்களே. ஆனால் இக்காலத்தில் இவற்றை நாம் ஏகாச்ரயத்தில் காண்பது அரிதாகின்றது. ஜ்ஞானமுள்ளவிடத்தில் பக்தியையும் அநுஷ்டானத்தையும் காணமுடிகிறதில்லை. இவை காணுமிடங்களில் ஜ்ஞானத்தைக் காண்பது அரிதாகின்றது.

உலகில் ஜ்ஞாதாக்களுக்கு கௌரவம் அதிகமா? பக்திமான்களுக்கு கௌரவம் அதிகமா? என்று நாம் பார்த்தால், உண்மையில் பக்திமான்களுக்குத்தான் கௌரவம்

அதிகமாக இருக்கவேண்டும்; ஆனால் ஜ்ஞாதாக்களுக்கே அதிகமான கௌரவம் அங்காங்கு செய்யக் காண்கிறோம். இதற்குக் காரணமென்னவென்றால், இவர்கள் போலி பக்தர்களா? உண்மை பக்தர்களா? என்று யதார்த்தமாகக் கண்டு பிடிக்க முடிகிறதில்லை. வித்வான்களென்கிற வகுப்பிலும் உண்மை வித்வான்கள் போலி வித்வான்களென்கிற வேற்றுமையிருந்தாலும் வாயிலிருந்து வெளிவரும் பேச்சுக்களைக்கொண்டு இன்னார் உண்மைப்பண்டிதர், இன்னார் போலிப்பண்டிதர் என்று தெரிந்துகொள்ள முடிகிறது. பக்திமான்களை இங்ஙனே தெரிந்து கொள்வது முடியாத காரியமாக இருக்கின்றது.

பக்தனென்று வெளிக்குக் காட்டிக்கொள்ளக் கூடிய வேஷபூஷணங்களைத் தரித்துக் கொள்வது அனைவர்க்கு மெளிதாகின்றது. உள்கனிந்த உண்மையான பக்தி பிறப்பது மிகவும் அரிதாயிருக்கின்றது. பன்னிரண்டு திருமண்காப்புகளை அழகாயும் ப்ரகாசமாயும் தரித்துத் திருமணித் தாவடம் திருப்பவித்திரம் முதலியன பூண்டு கொண்டு பாகவதோத்தமனென்று உலகமடங்கலும் உகந்து கொள்ளும்படியான வேஷத்தோடு வெளிவருவதில் விசேஷ ச்ரமமில்லை. இதுபோலவே முடிமுதல் அடிவரையில் திருநீறுபூசி ருத்ராக்ஷமாலையணிந்து சிவபக்தசிகாமணியாக விளங்குவதிலும் தாமதமேற்படாது. ஆனால் மனத்தில் அழுந்திக்கிடக்கும் பாபவாஸனைகளை அகற்றிப் பரமேச்வரனிடத்தில் உண்மையான அன்பு கொண்டு தன்மயபாவத்தையடைவதென்றோ கஷ்ட ஸாத்யமும் காலவிளம்பத்தில் அருமையாய்ப் பெறக்கூடியதுமாம்.

பக்தியின் வெளிவேஷங்களை வஹித்துக் கொள்வதனால் மாத்திரம் ஒருவன் உண்மையான பக்தனாக ஆய்விடமாட்டான். அநாதிகால ஸஞ்சிதமான பாபங்கள் கழிந்து துர்வாஸனைகள் தொலைந்து பரமபுருஷ விஷயத்தில் பரவசமான பக்தி ஏற்பட்டுத் தன்மயமாய்ப் போனால்தான் பக்தனாக முடியுமென்பதை ஒவ்வொருவரும் மனத்தில் அழுந்தவேண்டும். பக்தியின் *வெளிச்சின்னங்கள் அவசியமில்லையென்று நாம் சொல்லுகின்றிலோம். அவை மிகவும் அவசியமே யென்பதைப்பற்றி முன்னொரு வியாஸம் விரிவாக எழுதி யிருக்கின்றோம் (43 காண்க). அந்த வெளிச்சின்னங்களைத் தரித்துக்கொள்வதனால் மாத்திரம் த்ருப்தியடைந்து விடாமல் உண்மையான பக்திக்கு முயற்சி செய்யவேண்டும்.

பெரும் பெருந் தருமகாரியங்களைச் செய்கிறவனே பக்தன் என்று சிலர் நினைக்கக்கூடும். குளம் வெட்டுவிப்பது, சத்திரம் சாவடிகள் கட்டுவிப்பது, தண்ணீர்ப் பந்தல் வைப்பது இவைபோன்ற பல வெளிப்பகட்டான காரியங்கள் செய்கிறவன் பக்தன் எனச் சிலர் நினைக்கிறார்கள். உண்மையுரைக்குங்கால் இக்காரியங்கள் ஒருவிதத்திற் சிறந்தவைகளேயாகிலும் இவ்வகைக் காரியங்கள் செய்வதனாலேயே ஒருவன் பக்தனென்னும் வ்யபதேசத்திற்குப் பூர்ணபாத்திரமாய் விடமாட்டான். இவ்விதமான பெருங்காரியங்கள் செய்ய அனைவர்க்கும் இயலாது, யாரோ சிலர்தான் இவற்றைச் செய்யக்கூடும். அங்ஙனம் செய்பவர்களை விசேஷ தனிகர்களென்றும் விசாலமனமுடைத்தவர்களென்றும் சொல்லலாமே யல்லது பக்தர்களென்று சொல்லுவதற்கில்லை.

ஆனால் உண்மையான பக்தனுடைய அடையாளமென்னவென்று கேள்வி பிறக்கலாம். உண்மையான பக்தனைக் காண்பது அரிதேயாகிலும் கண்டு பிடிப்பது கஷ்டமல்ல. எம்பெருமானிடத்தில் சுயநன்மை கருதாத அன்புடைய பக்தனிடத்தில் ஒவ்வொரு ஸமயத்திலும் நாம் விசேஷத்தைக் காணலாம். எந்த காலத்திலும், எந்த தேசத்திலும் எந்த நிலைமையிலும் பக்தன் பக்தனாகவேயிருப்பான். [illegible] உண்பது முதலிய காரியங்களைச் செய்யும்போதும், பந்து மித்திரர்களோடு [illegible]போதும், பிணியால் வருந்தும் போதும், பலவகைக் கஷ்டநஷ்டங்கள் ஏற்படும்போதும், விசேஷமான லாபங்கள் கிடைக்கும்போதும் பக்தன் பக்தனாகவே யிருப்பான். எல்லாக் கால

